# சங்க இலக்கிய மருதத்திணைப் பாடல்களில் சமூக உறவுகள்

திருச்சிராப்பள்ளி பாரதிதாசன் பல்கலைக் கழக முனைவர் (பிஎச்.டி.)
பட்டத்திற்காக அளிக்கப்பெறும் ஆய்வேடு


**ஆய்வாளர் :**

**வை. கஜேந்திரன்**

**(எண்: 36737 / பிஎச்.டி2 / தமிழ் / மு.நே. / ஏப்ரல் 2011)**

**நெறியாளர் :**

**முனைவர் மு. கன்னையன்,**

**உதவிப் பேராசிரியர்,**

**தமிழ்த்துறை.**

**தமிழ் உயராய்வு மையம்,**

**மன்னர் சரபோசி அரசுக் கல்லூரி (தன்னாட்சி),**

**தஞ்சாவூர் - 613 005.**


**பிப்ரவரி - 2016**

முனைவர் **மு. கன்னையன்,**
உதவிப் பேராசிரியர்,
தமிழ்த்துறை.
மன்னர் சரபோசி அரசுக் கல்லூரி (தன்னாட்சி),
தஞ்சாவூர் – 613 005.

# நெறியாளர் சான்றிதழ்

**சங்க இலக்கிய மருதத்திணைப் பாடல்களில் சமூக உறவுகள்** *என்ற தலைப்பில் எனது மேற்பார்வையின்கீழ் செல்வன்* **வை. கஜேந்திரன்** *அவர்கள் செய்துள்ள இந்த ஆய்வு திருச்சிராப்பள்ளி பாரதிதாசன் பல்கலைக் கழக முனைவர் (பிஎச்டி.) பட்ட ஆய்வை நிறைவு செய்யும் முகமாக அவரால் தன்னியலாகச் செய்யப்பெற்றது என்றும், இவ்வாய்விற்காக வேறு எந்தப் பட்டமும் ஆய்வாளருக்கு வழங்கப்படவில்லை என்றும் சான்றளிக்கிறேன்.*

**இடம் : தஞ்சாவூர்**
**நாள் : -02-2016**

**துறைத்தலைவர் கையொப்பம்** **நெறியாளர் கையொப்பம்**

**முதல்வர் கையொப்பம்**

**வை. கஜேந்திரன்,**
முனைவர் பட்ட ஆய்வாளர்,
தமிழ்த்துறை.
மன்னர் சரபோஜி அரசுக் கல்லூரி (தன்னாட்சி),
தஞ்சாவூர் – 613 005.

# ஆய்வாளர் உறுதிமொழி

**சங்க இலக்கிய மருதத்திணைப் பாடல்களில் சமூக உறவுகள்** *என்ற தலைப்பில் முனைவர் (பிஎச்.டி.) பட்டத்திற்காக என்னால் மேற்கொள்ளப்பட்ட இந்த ஆய்வு என் சொந்த முயற்சியில் உருவானது என்றும், இதற்கு முன் வேறு எந்த ஆய்வுப்பட்டத்திற்கும் இந்த ஆய்வேடு அளிக்கப்பெறவில்லை என்றும் உறுதியளிக்கிறேன்.*

**இடம் : தஞ்சாவூர்** **ஆய்வாளர் ஒப்பம்**
**நாள் : -02-2016**

# நன்றியுரை

*திருச்சிராப்பள்ளி பாரதிதாசன் பல்கலைக்கழக முனைவர் (பிஎச்.டி.) பட்ட ஆய்வினை மேற்கொள்ள எனக்கு வாய்ப்பளித்த பல்கலைக்கழகத்திற்கும், மன்னர் சரபோஜி அரசுக் கல்லூரி (தன்னாட்சி) முதல்வர்* **சோ. அன்பழகன்** *அவர்களுக்கும், தமிழ்த்துறைத்தலைவர் முனைவர்* **மா. கோவிந்தராசு** *அவர்களுக்கும் என் நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன்.*

**“சங்க இலக்கிய மருதத்திணைப் பாடல்களில் சமூக உறவுகள்’’** *என்னும் இவ்வாய்வேடு உருவாக முதற்காரணமாய் அமைந்ததோடு, ஆய்வு செம்மையுற அமைய வேண்டித் தம் பல்வேறு பணிகளுக்கிடையிலும் மிக்க முயற்சியெடுத்து, மேற்பார்வை செய்துதவிய போற்றுதலுக்குரிய என்னுடைய நெறியாளர் முனைவர்* **மு. கண்ணையன்** *அவர்களுக்கும் என் பணிவான நன்றியினைத் தெரிவித்துக் கொள்கிறேன்.* **அரங்க. சதாசிவம், பேரா. கா. சாந்தி,** *முனைவர்* **சத்யநாராயணன்** *அவர்களுக்கும் மேலும் எம் புலப்பேராசிரியர்கள் அனைவருக்கும் என் நெஞ்சார்ந்த நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன்.*

*என்னை ஈன்றெடுத்த* **பெற்றோருக்கும்,** *எனது வாழ்க்கைத் துணைவியார்* **க.திவ்யா,** *தம்பிகள்* **வை. தமிழழகன், கோ.கருணாகரன், ந. கேசவன் சக்கரவர்த்தி** *அவர்களுக்கும் என் ஆய்வேடு செம்மையுற அமைய வேண்டி நூல்கள் கொடுத்து உதவியும், ஆய்வுத் தொடர்பாக விவாதித்தும் ஆய்விற்கு உதவிய நண்பர்* **நெ.ரமேஷ்** *அவர்களுக்கும், தோழி* **செ. வந்தனாமேரி** *அவர்களுக்கும் முனைவர் பட்ட நண்பர்களுக்கும், என் உளமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.*

*புதுவைப் பல்கலைக்கழக ஆனந்தரங்கப்பிள்ளை நூலகம், பிரெஞ்சு ஆய்வு நிறுவனம், சுவாமிமலை பேரூராட்சி நூலகம், சுந்தரபெருமாள்கோவில் ஊராட்சி நூலகம், கும்பகோணம் மைய நூலகம் மற்றும் என் ஆய்விற்குத் துணையாக அமைந்த அனைத்து நூலகத்தாருக்கும் என் இதயம் கனிந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.*

*மேலும், இவ்வாய்வேட்டினை நன்முறையில் வடிவமைத்து தந்த கும்பகோணம்* **“அருணை ஜாப் சென்டர்’’** *நிறுவனத்தார்* **ஆ.கலைச்செல்வன்,** *பி.எஸ்.ஸி., அவர்களுக்கும் தட்டச்சர்* **செ. கவிதா, நா.பேபி** *அவர்களுக்கும் என் நன்றியினைத் தெரிவித்துக்கொள்கிறேன்.*

*நன்றியுடன்…*

**வை. கஜேந்திரன்**

# சுருக்கக்குறியீட்டு விளக்கம்

| | | |
|---|---|---|
| *அகம்.* | - | *அகநானூறு* |
| *அகத்.* | - | *அகத்திணையியல்* |
| *அ.* | - | *அடிகள்* |
| *ஆ.ப.* | - | *ஆறாம் பதிப்பு* |
| *இ.ப.* | - | *இரண்டாம் பதிப்பு* |
| *இளம்.* | - | *இளம்பூரணம்* |
| *உ.ஆ.* | - | *உரையாசிரியர்* |
| *எ.* | - | *எண்* |
| *எழு.* | - | *எழுத்ததிகாரம்* |
| *ஐங்குறு.* | - | *ஐங்குறுநூறு* |
| *ஐ.ப.* | - | *ஐந்தாம் பதிப்பு* |
| *குறள்.* | - | *திருக்குறள்* |
| *குறு.* | - | *குறுந்தொகை* |
| *சிலம்பு.* | - | *சிலப்பதிகாரம்* |
| *தொல்.* | - | *தொல்காப்பியம்* |
| *நச்.* | - | *நச்சினார்க்கினியர்* |
| *நற்.* | - | *நற்றிணை* |
| *நா.ப* | - | *நான்காம் பதிப்பு* |
| *நூ.எ.* | - | *நூற்பா எண்* |
| *பக்.* | - | *பக்கம்* |
| *ப.ஆ.* | - | *பதிப்பாசிரியர்* |
| *பா. அ.* | - | *பாடல் அடி* |
| *பா.வ.* | - | *பாடல் வரி* |
| *பொருள்.* | - | *பொருளதிகாரம்* |
| *மது.* | - | *மதுரைக்காஞ்சி* |
| *ம.ப* | - | *மறுபதிப்பு* |
| *மூ.ப.* | - | *மூன்றாம் பதிப்பு* |
| *மேலது.,* | - | *மேலே குறிப்பிட்ட நூல்* |

# பொருளடக்கம்

# முன்னுரை

சங்க இலக்கியம் என்பது பாட்டும், தொகையும் என்னும் பாகுபாட்டுள் அமைக்கப்பட்ட இலக்கியத் தொகை நூல்களாகும். பாட்டு என்பது பத்து நெடும்பாடல்களின் தொகுப்பாகிய பத்துப்பாட்டையும், தொகை என்பது தனித்தனி உதிரிப் பாடல்களின் தொகுப்பாக அமைந்த எட்டுத் தொகையையும் குறிக்கும். இத்தொகுப்புகள் சங்க கால மக்களின் வாழ்க்கை முறையைக் காத்து நிற்கும் பதிவுகளாகும். அப்பதிவுகளுக்கு உரையாசிரியர்கள் தொல்காப்பியர் வகுத்த இலக்கண மரபுகளின்படி திணை, துறைகள் வகுத்துள்ளனர். அத்திணை மரபுகளின்படி சங்க இலக்கியம் திணை இலக்கியமாகத் திகழ்கிறது. சங்க கால மக்களின் வாழ்வியல் முறைக்கு அடிப்படையாக இருப்பது சமூக உறவுகளாகும். அச்சமூகத்தின் பதிவுகளான இலக்கியங்களில் சமூக உறவுகள் காணப்படுவது இயல்பானதேயாகும்.

உறவுகள் பெரும்பாலும் ஏதேனும் தேவையின் பொருட்டுத் தோன்றியுள்ளன. அவ்வகையில் மருதத் திணை சார்ந்த அகப்பாடல்களையும் 263-ஐயும் மருதத்தின் புறனாகிய உழிஞைத்திணைப் பாடல்களையும் எடுத்துக் கொண்டு காணும் போது மக்களின் வாழ்வியல் சமூக உறவுகளால் பின்னப்பட்டுள்ளதை அறியமுடிகிறது. கற்காலத்தின் தொடக்கத்தில் மிகப் பின்தங்கிய நிலையில் கற்கருவிகளைக் கையாண்டது. மனித இனம் பின்பு வேளாண்மையைத் தொடக்க தொழிலாகக் கொண்டு வாழ்ந்துள்ளதிலிருந்து நாகரிகம் வளர்வதற்கு அடிப்படையாக இருப்பது மருத நிலம் சார்ந்த வேளாண்மைத் தொழில் என்பது புலனாகிறது. உலகின் பல்வேறு நாகரிகம் ஆற்றங்கரை ஒட்டிய மருதநிலம் சார்ந்தே வளர்ந்துள்ளன என்பது கண்கூடு. வேளாண்மைத் தொழிலின் தோற்றுவாய் மருத நிலமாகும். அவ்வகையில் நாகரிகத்தின் முன்னேற்றத்திற்குக் காரணமாகச் சமூக உறவுகள் வேறுபட்டன. இவ்வாறு மருதத்திணைப் பாடல்களில் காணும் பல்வேறு சமூக உறவுகளை ஆராய்வதே நோக்கமாகும்.

## ஆய்வுத் தலைப்பு

*இவ்வாய்வு சங்க இலக்கிய எட்டுத்தொகையின் மருதத் திணையில் இடம்பெற்றுள்ள அகப்பாடல்களைத் தரவுகளாகக் கொண்டு* ***"சங்க இலக்கிய மருதத்திணைப் பாடல்களில் சமூக உறவுகள்''*** *என்பதைத் தலைப்பாகக் கொண்டு நிகழ்த்தப்படுகிறது.*

## ஆய்வு எல்லை

*எட்டுத்தொகையும், பத்துப்பாட்டும் சங்க இலக்கியங்களாகும். பழந்தமிழரின் வாழ்வியல் உறவு முறைகளை அறிவதற்குச் சங்க இலக்கியங்கள் துணை புரிகின்றன. மருதத்திணைப் பாடல்களான 263 அகப் பாடல்களும் மருதத்தின் புறனாகிய உழிஞைத் திணைப் பாடல்களும் ஆய்வு எல்லையாக வரையறுக்கப்படுகிறது.*

## ஆய்வுக் கருதுகோள்

*இலக்கியத்தையும், சமுதாயத்தையும் பிரிக்க இயலாது. இலக்கியங்கள் சமூகத்தைத் தமக்கேயுரிய முறையில் பிரதிபலிக்கின்றன. அவ்வகையில் சங்க இலக்கிய உருவாக்கத்திலும், அதன் பொருளமைவுப் பயன்பாட்டிலும், செயல்பாட்டிலும் இருப்பது சமூக உறவுகள் தாம் என்ற கருதுகோளின் அடிப்படையில் இவ்வாய்வு அமைகின்றது.*

## ஆய்வு மூலங்கள்

*இவ்வாய்விற்கு சங்க இலக்கிய மருதத்திணை சார்ந்த அகப்பாடல்கள் முதன்மையாதாரமாகவும் சங்க இலக்கியங்கள் தொடர்பாக வெளிவந்துள்ள ஆய்வுநூல்களும், ஆய்வுக் கட்டுரைகளும், ஆய்வேடுகளும் இதழ்களும் துணைமையாதாரமாகவும், நெய்தல் திணைப்பாடல்களில் சமூக உறவுகள் எனும் பாலமுருகன் அவர்களின், புதுவைப் பல்கலைக் கழக ஆய்வேடு முன்னோடி ஆய்வாகவும் அமைகின்றன.*

## ஆய்வு அணுகுமுறை

*இவ்வாய்வானது சமுதாயவியல் மற்றும் மானிடவியல் அணுகு முறைகளைக் கொண்டு விளக்க முறையிலும், ஒப்பியல் முறையிலும் மேற்கொள்ளப்படுகிறது.*

## ஆய்வேட்டின் அமைப்பு முறை

*இவ்வாய்வு முன்னுரை முடிவுரை நீங்கலாக ஐந்து இயல்களாகப் பிரிக்கப்பட்டுள்ளது.*

1. ***சமூகவியலும் இலக்கியமும்***
2. ***திணை இலக்கியமும் அகப்புற வெளிப்பாடும்***
3. ***சமூக உறவுகள்***
4. ***சமூக அடுக்குகள்***
5. ***சமூக எச்சம்***

*என அமைகின்றன. இவ்வாய்வில் தலைப்பிற்கு உட்பட்ட அடிப்படைக் கூறுகளைக் கீழ்வருமாறு வகைப்படுத்தலாம்.*

## முன்னுரை

*முன்னுரையில் ஆய்வுத் தலைப்பு, ஆய்வின் நோக்கம், ஆய்வு எல்லை, ஆய்வுக் கருதுகோள், ஆய்வு மூலங்கள், ஆய்வு அணுகுமுறை, ஆய்வேட்டின் அமைப்பு முறை போன்றவை இடம் பெற்றுள்ளன.*

## இயல் : 1 சமூகவியலும் இலக்கியமும்

***'சமூகவியலும் இலக்கியமும்'*** *என்ற இயலில் மனித இனத் தோற்றம் பற்றிப் பழைய ஏற்பாடு கூறும் கருத்துக்கள், சமூகம், சமூகத் தோற்றம், சமூகவியல், சமூகவியல் கோட்பாடுகளும் அறிஞர்களும், ஹெர்பர்ட் ஸ்பென்சர், பரிணாமவிதி, மார்க்ஸ்வெபர், காரல்மார்க்ஸ் போன்ற சமூக அறிஞர்களின் கொள்கைகள் முதலியன அறிமுகப்படுத்தப் பட்டுள்ளன. இலக்கியமும் சமூகவியலும் என்ற அடிப்படையில் இலக்கியச் சமூகவியலின் மூவகை நிலை, இலக்கியச் சமூக உருவாக்கம், வர்க்க உறவு, சமுதாய மாற்றம், அரசுருவாக்கம், ஆற்றங்கரை நாகரிகங்கள், திராவிட நாகரிகம், முதல் நாகரிக மக்களினம் - மருத நிலக்கட்டமைப்பு என்பனவும் அமைகின்றன.*

### இயல் : 2 திணை இலக்கியமும் அகப்புற வெளிப்பாடும்

**'திணை இலக்கியமும் அகப்புற வெளிப்பாடும்'** என்ற இயலில், திணைக்கொள்கைகள், மருத நிலத்தோற்றம், நிலம் கலந்துறவாதல், மருத முல்லை கலப்பு, மருத நெய்தல் உறவு, அகமும் புறமும், அகப்புற உறவு, மருதமும் அகப்புற வெளிப்பாடும், உழிஞை மருத உறவு, முரசு, வேல், ஓடக்கோல், வெண்குடை, வாட்படை மதுரைப்போர், முள்ளூர், மாந்தை நகர் போன்ற கருத்தாக்கங்கள் இடம் பெற்றுள்ளன.

### இயல் : 3 சமூக உறவுகள்

**'சமூக உறவுகள்'** என்ற இயலில், மன்னன் - மக்கள் உறவு, மன்னன் - புலவர் உறவு, மன்னன்-கலைஞர் உறவு, பாணர் - தலைவன் உறவு, பாணர்-மற்போர் வீரன் உறவு, தலைவி - பாணர் உறவு, தோழி - பாணன் உறவு, மன்னன்-பொருநர் உறவு, விறலியர்-மன்னன் உறவு, துணங்கைக் கூத்துக்குப் பரிசு, குரவைக்கூத்து, பாணன்-மன்னன் உறவு, தலைவன்-பரத்தமை உறவு, பரத்தை தலைவனின் மகன் தன் மகன் எனல், சேரிப்பரத்தை உறவு காமக்கிழத்தி - தலைவன் உறவு, காமக்கிழத்தி - தலைவி உறவு, தோழி-தலைவன் உறவு, தோழி-தலைவி உறவு, தோழி செவிலி உறவு, குடும்ப உறவு, திருமண உறவு, மணம் எவ்வாறு நிகழ்ந்தது என்பன வரையறுக்கப்பட்டுள்ளன. திருமண நிகழ்வில் முதிய மகளிர் நிலை, இரவில் திருமணம், கணவனைக் காத்தல், தாயின் (தந்தை) மூத்தோன் பெயர் உறவு, தந்தையின் (தந்தை பெயர் உறவு) வணிகஉறவு ஆகிய சமூக உறவுகள் விளக்கப்பட்டுள்ளன.

### இயல் : 4 சமூக அடுக்குகள்

**'சமூக அடுக்குகள்'** என்ற இயலில் தொல்குடியடுக்குகள், முதற்பொருளடுக்குகள், நில அடுக்குகள், உரிப்பொருளடுக்குகள், கருப்பொருளடுக்குகள், குறிஞ்சியடுக்கு, முல்லையடுக்கு, மருத அடுக்கு, நெய்தல் அடுக்கு, பாலையடுக்கு, சடங்குமுறையடுக்குகள், வெறியாட்டு, இறப்புச்சடங்கு, தொழிலடுக்குகள், பரத்தமையடுக்குகள், மாற்றுத் திறனாளியடுக்குகள், அலியும்பேடியும் போன்றவை வரையறுக்கப் பட்டுள்ளன.

### இயல் : 5 சமூக எச்சம்

***'சமூக எச்சம்'*** *என்ற இயலில் முதுமக்கள் தாழி, தென்புலத்தார் கடன், உழவர், குலக்குழு, சாகுபடி, ஒர்ஏர், எருமை உழவு, நாற்று நடவு செய்யும் ஆட்கள், நெல்தூற்றல், நெல்குவித்தல், கோரையும் நெய்தலும், வலைத்தொழில், நெல் அறுவடை, சாணைக்கல் தொழில், வண்ணாத்தி, தூண்டில் போடுதல், கரும்பு எந்திரம், தச்சன், புனல் விளையாட்டு, எஞ்சிய ஊர்களான, இரும்பையூர், மூதூர், குன்றூர், கள்ளூர், வாணன் சிறுகுடி, கழர்அ ஊர் ஆகியன எச்சநிலைகளாகக் கொண்டு ஆராயப்பட்டுள்ளன.*

### முடிவுரை

*ஒவ்வொரு இயலின் தொகுப்புரையில் கொடுக்கப்பட்ட செய்திகளின் அடிப்படையில் ஆராய்ந்து முடிவுகள் முடிவுரையாகக் கொடுக்கப் பட்டுள்ளன.*

### துணைநூற் பட்டியல்

*சங்க இலக்கிய மருதத்திணைப் பாடல்களில் சமூக உறவுகள் ஆய்வேடு செம்மையாக அமைவதற்கு துணையாக அமைந்த நூல்கள் தொகுக்கப்பட்டு அவை முறையே முதன்மை நூல்கள், துணைமை நூல்கள் எனப் பகுத்து, அகரநிரல் படுத்தப்பட்டு கொடுக்கப்பட்டுள்ளன.*

### பின்னிணைப்பு

*மகாமககுளத்தின் வரைபடம் பின்னிணைப்புகளாக கொடுக்கப்பட்டுள்ளன.*

# இயல்–1

## சமூகவியலும் இலக்கியமும்

சமூகத்தைக் காட்டுவது இலக்கியமாகும். இலக்கியமும் சமூகமும் ஒன்றுக்கொன்று தொடர்புடையனவாகும். பண்பட்டச் சமூகத்தில் பழமையான இலக்கியங்கள் இருப்பது இயற்கையாகும். சமூக மக்களின் வாழ்வியல் கூறுகள் இழையோடி நிற்கும் ஊடகமாக இலக்கியங்கள் திகழ்கின்றன. அந்த வகையில் தமிழ்ச் சமூகம் மிகப் பழமையான வரலாற்று ஆதாரங்களோடு செம்மாந்து நிற்கிறது. சமூகவியலும் இலக்கியமும் என்ற இவ்வியலில் சமூக உறவுகளுக்கு ஆதாரமான உயிரிகளின் தோற்றம் பற்றி அறிவது அவசியமாகும். ஏனெனில், சமூகத்தில் அடிப்படை அலகு உயிரினமாகும். உறவுகள் தோன்றுவதற்கும் உயிரினங்கள் அவசியமாகும். குறிப்பாக மனிதனின் தோற்றம் பற்றியக் கொள்கைகள் மட்டுமாவது தெரிவது அவசியமாகும். இங்கு அறிவியல் அடிப்படையிலும், இலக்கியத் தரவுகளின் அடிப்படையிலும் மனித இனம் தோற்றம் பற்றி விளக்கப் பட்டுள்ளது. ஏனெனில் மீத்திறன் மிக்க கற்பனையின் வெளிப்பாட்டில் தான் அறிவியலின் தோற்றம் அமைந்துள்ளது. அதன் விளைவு தமிழில் தோன்றிய தொல்காப்பியம் என்னும் அறிவியலகராதியாகும்.

உலக அறிஞர்கள் கூறாத உயிரினப் பாகுபாட்டைத் தொல்காப்பியர் மரபியலில் விளக்கியுள்ளார். ஆகையால் பழைய ஏற்பாட்டில் கூறப்பட்டுள்ள மனித இனம் பற்றிய தோற்றக்கொள்கையையும், அறிவியலறிஞர் டார்வினின் பரிணாம தோற்றக் கொள்கையையும் ஒப்பிட்டுக்காட்டித் தொல்காப்பியரின் உயிரினத் தோற்றக்கொள்கை விளக்கப்பட்டுள்ளது. அதனையடுத்து, உயிரினங்கள் வாழும் சமூகவியல் பற்றிய விளக்கம் அறிமுகப்படுத்தப்பட்டு மேலை நாட்டறிஞர்களின் சமூகவியல் சிந்தனைகள் எடுத்துக்காட்டப்பட்டுள்ளன. இலக்கியத்தையும் சமூகத்தையும் தொடர்பு படுத்தும் இலக்கியச் சமூகவியலின் *(Social Literature)* மூவகை நிலை எடுத்துரைக்கப்பட்டுள்ளது.

*தொல்பழங்காலமுதல் 20-ஆம் நூற்றாண்டு வரை நிலவிய சமூகங்களின் பங்கு இலக்கிய உருவாக்கம் பெற வழிவகுத்தது. தமிழிலக்கிய வரலாற்றில் ஒவ்வொரு கால கட்டமாக நிலவிய இலக்கிய நிலையில் அந்தந்தச் சூழலில் உள்ள சமூகப் பங்களிப்பு விவரிக்கப்பட்டுள்ளது. இவ்வாறாகச் சமுதாயத்தில் வர்க்க உறவுகள் ஏற்பட்ட பின்னர் நடைபெற்ற இலக்கிய உருவாக்கம் சமுதாயத்தில் எவ்வகை மாற்றம் ஏற்படவழிவகுத்தது என்ற நிலையும் புலப்படுத்தப் பட்டுள்ளது. சமூக மாற்றம் ஏற்பட்டவுடன் முதலாளி, தொழிலாளி என்ற பாகுபாட்டிற்கு ஏற்ப அரசு உருவாகி, பின்னர் நாகரிகமும், பண்பாடும் தழைத்து ஓங்கிய முதல் மக்களினமாகத் தமிழர்கள் இருந்தமையையும், உலக நாகரிகங்களின் தொட்டிலாகப் பஃறுளி ஆறு இருந்துள்ளதைப் போல மருத நிலத்தில் காவிரி ஆற்றங்கரையில் நாகரிகம் வளர்ந்தமை மருதப்பாடல்களின் தரவுகள் மூலம் விளக்கியுரைக்கப் பட்டுள்ளது.*

**தொல்காப்பியரின் உயிரினத் தோற்றக்கொள்கை**

*உலகில் முதன் முதலில் எந்த இடத்தில் உயிர் தோன்றி இருக்க முடியும் என்றால் அறிவியல் ஆய்வுகள் அடிப்படையில் நீரில் தோன்றியுள்ளது. உயிரினங்களுக்கு இன்றியமையாததாக இருப்பது நீராகும். தாவரங்களும் விலங்குகளும் தனக்குத் தேவையான உயிர்ச் சத்துப் பொருட்களைப் பெற்றுக் கொள்வதற்கு நீர் அவசியமாகிறது. நிலத்திற்கும் நீருக்கும் இடையே ஆன உயிரிகள் வாழ்வதற்கு ஏற்ற தக அமைப்பினைப் பெற்று உயிரிகள் தோற்றம் பெற்ற உடன் நிலத்தில் வாழத்தகுதி உடையவாகின. அந்த வகை உயிரினங்கள் இருவாழ்விகள் எனப்படுகின்றன. (எ.டு) தவளை நீரில் வாழும் போதே ஒரே உயிரியில் ஆண், பெண் இனப்பெருக்க உறுப்புகளை உடையனவாக இருந்துள்ளன. (எ.டு) ஹட்ரா 'மண் புழு பின்னர் பால் மற்றும் பாலிலா இனப்பெருக்கம் முறையில் ஒரே உயிரியில் பிரிந்து தனித்தனி ஆண், பெண் இனப்பெருக்க உறுப்புகளைப் பெற்றன. ஓர் உயிரி, ஈருயிரியாகவும், பின்னர் பல உயிரிகளாகவும் மாற்றம் பெற்று வளர்ந்தன.*

*ஒரே உயிரி பலவகைத் தன்மை பெற்று மாறுபாடுகளுடன் காணப்பட்டதை, டார்வினின் பரிணாமக்கொள்கை புலப்படுத்துகின்றது. அவரின் 'சிற்றினங்களின் தோற்றம்' குரங்கிலிருந்து மனிதன் தோன்றினான் என்பதை விளக்கியுள்ளது. அவ்வாறு தோன்றிய மனிதன் பயத்தின் காரணமாகக் குழுவாக வாழத்தொடங்கிச் சமூக அமைப்பினை ஏற்படுத்தினான். அதுவே சமூகமாக மாற்றம் கொண்டது. இவ்வறிஞர்கள் கண்டுபிடிப்புக்கு முன்பே தொல்காப்பியம் "மக்கள் தாமே ஆறறிவுயிரே"[1] (மரபியல். நூ.35) என்னும் நூற்பாவில் மனித இனம் முதல் மற்ற உயிரினம் வரை வகுத்து விளக்கியுள்ளது. இதன் மூலம் தமிழனின் அறிவியல் புலமை விளங்கும்.*

**மனித இனத்தோற்றம் பற்றி பழைய ஏற்பாடு**

*கடவுளால் படைக்கப்பட்ட முதல் மனிதன் ஆதாம் 930 ஆண்டுகள் வாழ்ந்தாராம். அவரது புதல்வர் சேத் 1014 ஆண்டுகள் வாழ்ந்தாராம். இப்படி ஒவ்வொரு தலைமுறையும் (நோவாவின் காலம் வரை) ஏறக்குறைய 1000ஆண்டு வயது உடையவராக இருந்தாராம். நோவாவின் காலத்தில் கடவுளின் சீற்றத்தால் பெருமழையும் பெருவெள்ளமும் ஏற்பட்டு முடிந்த பின்னரே மனித ஆயுள் 120 ஆண்டுகள் என்று நிர்ணயிக்கப்பட்டதாம் அது மட்டுமல்ல பழைய ஏற்பாட்டின் படி, கடவுளால் விண்ணும் பூமியும் படைக்கப்பட்டன. அத்துடன் இரவும் பகலும் தோற்றுவிக்கப்பட்டன.*

*இரண்டாம் நாள் நீரும் ஆகாயமும் படைக்கப்பட்டன. மூன்றாம் நாள் நிலப் பகுதி மேலே கொண்டு வரப்பட்டது. நான்காம் நாள் சூரிய – சந்திர – நட்சத்திரங்கள் படைக்கப்பட்டன. ஐந்தாம் நாள் மீன் இனங்களும், பறவை இனங்களும் படைக்கப்பட்டன. ஆறாவது நாள் தான் கால்நடைகள் விலங்குகள் புழு, பூச்சி, உள்ளிட்ட ஊர்வன ஆகியவற்றிற்குப் பிறகு தனது வடிவில் ஒரே ஒரு மனிதனான ஆதாமைப் படைத்தார். பிறகு ஆதாமின் தனிமையைத் தவிர்க்கும் பொருட்டு முதற் பெண்ணான ஏவாளை உருவாக்கினார் என்பது பழைய ஏற்பாட்டின் வழி அறியமுடிகிறது.*

ஏழாவது நாள் ஞாயிற்றுக் கிழமை கடவுள் ஓய்வெடுத்தார். இங்கு பூமியும், விண்ணும் முதலில் படைத்ததாக கூறப்பட்டுள்ளது. இரண்டாம் நாள் ஆகாயம் படைத்ததாக கூறப்பட்டுள்ளது. விண் என்றால் ஏன் ஆகாயம் அதில் உட்பட்டதல்லாமல் வேறா? இவற்றில் இரண்டுமே ஒன்று தானே, என்ற முரண்பட்ட கருத்து காணப்படுகின்றது. சற்று ஆராய்ந்து பார்த்தால் அனைத்தும் முரண்பாடு உடன் படைக்கப்பட்டுள்ளமை புலனாகும்.

## அறிவியலின் அடிப்படையில் உயிரின் தோற்றம்

17-ஆம் நூற்றாண்டில் புழு, பூச்சி, ஊர்வன, தரையிலும் நீரிலும் வாழ்வன போன்ற சிக்கலான உடலமைப்புள்ள உயிரினங்கள் சம்பந்தப்பட்டவரை 'உயிர்கள் திடீரென்று தோன்றலாம் என்ற கொள்கை தகர்க்கப்பட்டபின் உயிரின் தோற்றம் பற்றிய மதவாதிகளின் கொள்கையின் அடித்தளமே ஆடிவிட்டது. 19-ஆம் நூற்றாண்டில் இக்கொள்கையின் தலையில் மற்றோர் இடி விழுந்தது. பைபிளில் சொல்லப்பட்டது போல இன்றியிருக்கும் செடி கொடிகளும், விலங்கினங்களும் இதே வடிவத்தில் லட்சக்கணக்கான வருஷங்களுக்கு முன் இருந்ததில்லை, அவற்றுள் சில லட்சக்கணக்கான வருஷங்களுக்கு முன் தோன்றவேயில்லை என்று சார்லஸ் டார்வினும், ரஷ்ய விஞ்ஞானிகளான கே.ஏ.டிமிரியஸேவ் கோலெக்ஸ்கி சகோதரர்கள், ஐ.ஐ.மெச்னிகாவ் ஆகியோர் பிரபஞ்சத்தின் தோற்றம் புதிராக இன்றளவும் அமைந்துள்ளது என்கின்றனர். அதன் இயக்கத்தில் பூமி உள்ளிட்ட கோள்களின் தோற்றம் பூமியில் ஜீவ ராசிகளின் தோற்றம் பற்றிய பல ஆய்வுகள் வெளிவந்துள்ளன. ஜீவ ராசிகள் பரிணாம ஏணியில் மேல்படிகளில் நிற்கும் மனிதன் திடீரென்று தோன்றிவிடவில்லை. உலகத்தில் உயிர்களின் வளர்ச்சி என்ற வரலாற்றில் கடைசிக் கட்டத்தில் தோன்றியதே மனிதர் இனம் என்பதை ஆய்வுகள் உணர்த்துகின்றன.

சார்லஸ் டார்வின் என்ற விஞ்ஞானி 1802-ல் பிறந்தார். இயற்கையின் தேர்வு என்ற நியதிப்படி முந்திய இனங்களிலிருந்து படிப்படியான மாறுதல் அதாவது பரிணாம வளர்ச்சியால் ஜீவராசிகள் தோன்றின என்று அவர் வலியுறுத்தினார். வாழ்க்கைப் போராட்டத்தில் தகுதியுள்ளவை தங்கி

நின்றன, தகுதியற்றவை மறைந்தன என்பது அவரது சித்தாந்தம். ஜீவராசிகளின் மூலம் அல்லது இனங்களின் மூலம் என்ற சரித்திரப் பிரசித்தி பெற்ற நூலை 1895-இல் வெளியிட்டார். நீர்ப்பாசியிலிருந்து, புழுபூச்சி முதலிய ஜீவராசிகள் அனைத்தும் பரிமாண நியதிப்படி தோன்றி இறுதியில் குரங்கு இனம் தோன்றியது அந்த குரங்கின் மூதாதையான ஒரு பிரிவின் காலக்கிரம வளர்ச்சிதான் மனிதன் என்று கூறுகின்றார். உயிர் தோன்றிய விதம் எவ்வாறு என்பதை அறிய ஆரம்ப நிலை வளர்ச்சியை அறிய வேண்டும்.

**சமூகம்**

உலகில் தோன்றிய மனிதன் உலகப் பொருள்களைச் சார்ந்திருப்பது போன்றே தம்மை ஒத்த மனிதர்களையும் சார்ந்து வாழ வேண்டியதே உலக நீதியாகும். மனிதர்கள் இணைந்துள்ள குழு சமூகம் எனப்படுகிறது. மனிதர்கள் பிறருடன் இணைந்து செயலாற்ற வேண்டியவர்களாக இருப்பதால் குழு வாழ்க்கையிலிருந்து பிரிக்க முடியாதவர்களாக விளங்குகின்றனர். இத்தகைய குழு வாழ்வை மேற்கொள்வதால் ஒரு நிலப்பகுதியில் நிலையாகக் கூடிவாழும் பெருந்திரளான மக்களைச் சமூகம் என்று குறிப்பிடுகின்றனர்.

இம்மானிடக் குழுவின் அனைத்து உறவுகளையும், தன்னகத்தே கொண்ட ஒரு பின்னல் அமைப்பு என்னும் பொருளிலும் சமூகம் பார்க்கப்படுகிறது. “சமூகம் என்பது மனித உறவுகள் பின்னிப் பிணைந்து அமைந்திருக்கும் திசுக்களின் அமைப்பு என்று மோரிசு பெர்கும், மனித உறவுகளால் பின்னிப் பிணைந்துள்ள வலைப்பின்னல் என்று மெக் ஈவர் பேஜ் போன்ற சமூகவியல் அறிஞர்களும் இதனை வரையறுப்பர்.’’[2] இன்பம், துன்பம், ஆகிய உணர்வுகளை ஒருவருக்கொருவர் பகிர்ந்து கொண்டு சேர்ந்து வாழும் மக்கள் குழு சமூகம் எனப்படும். தங்களுடைய பொதுவான நன்மைகளுக்காகவும் நோக்கங்களுக்காகவும் சேர்ந்திருந்து, தங்களுக்குரிய கடமைகளையும் உரிமைகளையும் இன்னின்னவை என்று அமைத்துக் கொண்டு வாழும் மக்களமைப்பும் சமுதாயம் என்றே வழங்கப்படும்.

சங்க இலக்கியத் தரவுகளின்படி ஒரே சமுதாயத்தில் பல இனக்குழுச் சமூகங்கள் இருப்பதைக் காணமுடிகிறது. இயற்கை அமைப்புகளின் படி ஆங்காங்கே வாழ்ந்த மக்கள் குழுக்களாக வாழ்ந்துள்ளனர். இனக்குழுக்களின் ஒற்றுமை, கடமை, உரிமை, பங்கேற்பு, பாதுகாப்பு, வளர்ச்சி ஆகியவை சமுதாயத்தின் அடியாக இருந்து சமுதாயம், சமூகம் இவை இரண்டுமே ஒன்றோடு ஒன்று இணைந்த கூட்டு வாழ்க்கை அமைப்புகளாக இருந்தன. இவை குடும்பம் - சமுதாயம் - தனிநபர் - சமூகம் என்ற வளர்ச்சிப் படிநிலைகளில் இருந்துள்ளதைக் காணமுடிகிறது.

**சமூகவியல்**

சமூகம் பற்றி ஆராயக்கூடிய ஓர் அறிவியலே சமூகவியலாகும். இதனைச் சமூக அறிவியல் (Social Science) என்றும் அழைப்பதுண்டு. மனிதனைப் பற்றி ஆராய்கின்ற பல இடங்களில் இதுவும் ஒன்றே தவிர இது மட்டுமே மனிதனைப் பற்றி ஆராய்வதன்று. சமூகவியல் என்பது சமூக உறவுகளின் தொகுப்பை ஆராய்கின்ற இயலாகும். சமூக உறவுகளே இதற்கான மூலப்பொருள் (Socials) இதனை ஒரு துறையாக உருவாக்கியவர் ஆகஸ்ட்காம்டே என்னும் பிரெஞ்சுத் தத்துவவியல் அறிஞர் ஆவார். சமூகவியல் என்ற சொல் கி.பி.1838 ஆண்டு இவரால் தான் உருவாக்கப்பட்டது.

சோசியேசு (Socius) என்ற லத்தின் சொல்லைக் கொண்டும் லோகசு (Logus) என்ற கிரேக்கச் சொல்லைக்கொண்டும் உருவாக்கப்பட்ட சொல்லாகும். (Sociology) சோசியசு என்பதற்கு ‘‘இணைந்து வாழ்தல் என்று பொருள். மனிதர்கள் இணைந்து கூட்டாக வாழ்வதை ஆராய்வதே சமூகவியலாகும் குறிப்பாகச் சமூக உறவுகள் அவற்றில் ஏற்படுகின்ற நிலைமைகள் அவற்றைக் கட்டுப்படுத்தும் நெறிகள், ஆகியவற்றிலிருந்து முகிழ்க்கும் குழுக்கள், அமைப்பு முறைகள், செயற்பாங்குகள், நிகழ்வுகள் முதலியவற்றைச் சமூகவியல் ஆராய்கிறது. சமூகவியலுக்குப் பொதுப்படைத்

*தன்மை குறைவு ஆனால் திடமான தன்மை (Specificity) அதிகம்; சமூகவியலானது அனைத்து உயிரினங்களைப்பற்றி படிக்கும் ஒரு இயல் இல்லை. இது மனிதர்களை அதிலும் குறிப்பாக., தனி மனிதர்களாலான குழுவைப்பற்றி மட்டும் படிக்கின்றது. இப்படிப்பட்ட சமூகமானது எளிதானது அன்று; மிகவும் சிக்கலானது. இப்படிப்பட்ட சிக்கல் நிறைந்த சமூகத்தை ஆராய்ந்து தெளிவு கொள்ளப் பல அறிவுத்துறைகள் அவசியம். சிக்கல் நிறைந்த சமூகத்தைப் பாதிக்கின்ற சக்திகளைப் பற்றிய அறிவை அளிக்கின்ற உயிரியல், இயற்பியல், வேதியியல், வானியல், ஆகிய அறிவியல்களைச் சார்ந்து சமூகம் நிற்கின்றது. இத்தகைய பாதிப்பைப் பற்றிய துல்லிய ஆராய்ச்சிக்கு கணிதத்தின் துணை அதிக அளவு தேவைப்படுவதால் சமூகவியல் கணிதத்தையும் சார்ந்து இருக்கின்றது. இவ்வாறு அறிவியல்களின் தர வரிசை கணிதத்திலிருந்து தொடங்கி, வானியல், இயற்பியல், வேதியியல், உயிரியல் என்று அடுக்கடுக்காக உயர்ந்து இறுதியில் சமூகவியலில் முடிவடைகிறது என்று கோம்த் கூறுகிறார்.''[3] சமூகவியலுக்கு நிலை இல்லை, சமூகவியல் நிகழ்வுகள் பிற அறிவியலையும் சார்ந்திருக்கின்றது.*

*"சமூகவியலின் ஆய்வு பொருள்களானது திடமான தன்மை அதிகம் கொண்டது. ஆகவே தான் சமூகவியலானது பிற அறிவியல்களைச் சார்ந்து நிற்கிறது என்கிறார் கோமத்''[4].*

## சமூகத் தோற்றம்

*மனிதன் சமூக விலங்கு ஆவான். மனிதர்களின் உறவுகளிலிருந்தே சமூகம் தோன்றுகிறது. ஒருவருக்கொருவர் உறவுகளை ஏற்படுத்தித் தங்களுக்குள் ஓர் அமைப்பினை ஏற்படுத்திக் கொள்ளும் போது சமூகம் பிறக்கிறது. பிளேட்டோ என்னும் அறிஞர் மக்களின் தேவை காரணமாகத்தான் தங்களுக்குள் ஓர் அமைப்பை ஏற்படுத்திக் கொண்டு கூடி வாழ்கிறார்கள். அதுவே சமூகம் என்று அழைக்கப்படுகிறது என்கிறார்.*

விலங்குகளாக வாழ்ந்த மனிதன் முதலில் உயிர்வாழ உணவை வேட்டையாடி இயற்கைப் பொருட்களை உண்டு உயிர் வாழ்ந்தான். பின்னர் நாகரிக சமூகம் என்பது தோன்ற சக்கரம், நெருப்புப் போன்ற கண்டு பிடிப்புகளின் மூலம் பொருட்களின் உற்பத்தி முறை தோன்றி வேளாண் சமூகமாக உருப்பெற்றன. மனிதன் மற்றவர்களுக்காகவும், மற்றவர்கள் அவனுக்காகவும் பங்களிப்புப் பணி செய்து வாழக் கற்றுக்கொள்ள விருப்புற்றபோது சமூகத்தோற்றம் ஏற்பட்டது. ஒருவர் உணர்வை மற்றவர்கள் புரிந்து அவரின் உரிமைக்காகவும், பாதுகாப்பிற்காகவும் ஆரம்ப கால சமூகத் தோற்றம் உண்டானது. மனிதர்கள் தாங்கள் தங்கள் தேவைகளுக்கு, மற்றவர்களைச் சார்ந்து இருந்தனர்.

## சமூகவியல் கோட்பாடுகளும், அறிஞர்களும்

### ஆகஸ்ட் காம்டே (1798)

சமூகவியலின் தந்தை ஆவார். பிரான்சு நாட்டில் கத்தோலிக்க மதத்தைச் சார்ந்த மன்னர் ஆட்சி முறைக்கு விசுவாசமாக இருந்த உயர் குடும்பத்தைச் சார்ந்தவர். இளம் வயதிலேயே அதிகாரத்தின் மீது மிகுந்த வெறுப்புடையவர். சமூகத்தைச் சீர் குலைவிலிருந்து மீட்டுச் சமூக ஒழுங்கை நிலைநிறுத்திச் சமூக முன்னேற்றத்திற்கு வழி கோலுவதற்கான சில வரையறையைத் தம்முடைய *Plan of the Scientific Operation Necessary for the Re-Organisation of the Society* என்ற நூலில் வெளிக் கொணர்ந்தார். இந்நூல் சமூகச் சீரமைப்பிற்கான பல முக்கிய செயல்பாடுகளை விளக்கியது. “மனித முன்னேற்றத்தின் ஊடாகத்தான் சமூக வளர்ச்சி நிகழ்கிறது என விவரித்தார். இவர் கோட்பாட்டிற்கு மூன்று நிலை விதி என பெயரிட்டு அழைத்தார். அவை,

1. இறையியல் நிலை (The Logical Stage)
2. இயல் கடந்த நுண்பொருள் கோட்பாட்டு நிலை (Meta Physical Stage)
3. புற மெய்ம்மை நிலை (Positive Stage)

என்பவையாகும். இக்கொள்கைகளின் அடிப்படையில் காம்டே மனிதச் சிந்தனை அல்லது அறிவின் வளர்ச்சி அல்லது மனித முன்னேற்றம் அல்லது

*சமூக வளர்ச்சி நிகழ்கிறது எனக் கருதினார். மனிதச் சமூகமானது எவ்வாறு இந்த மூன்று நிலைகளின் ஊடே புகுந்து வளர்ச்சி காண்கிறது, என்பதே சமூகம் பற்றிய அவருடைய கோட்பாடாகும்.'' [5]*

## ஹெர்பர்ட் ஸ்பென்சர்

*ஹெர்பர்ட் ஸ்பென்சர் கி.பி.1820 ஆம் ஆண்டு ஏப்ரல் திங்கள் 27-ஆம் நாளன்று இங்கிலாந்து நாட்டிலுள்ள டெர்பி எனும் நகரத்தில் நடுத்தர வர்க்கத்தைச் சார்ந்த குடும்பத்தில் பிறந்தார். இவரது தந்தையான ஜியார்ஜ் ஸ்பென்சர் பள்ளி ஆசிரியராகப் பணியாற்றினார். காம்டே அவருடைய கருத்துக்களை அடிப்படையாகக் கொண்டு தனக்கே உரிய பார்வையோடு சமூகவியலை ஆராய்ந்தவர் ஹெர்பர்ட் ஸ்பென்சர் The Proper Sphere of Government (1842) என்னும் கட்டுரையின் மூலம் கவனம் பெற்று சமூகவியல், மற்றும் எழுத்தாளராகப் பவனி வந்தார். "இவருடைய சிந்தனைகள் மூன்று நிலைகளில் வகைப் படுத்தப்பட்டுள்ளன. அவை,*

1. *சமூகப் பரிணாம வளர்ச்சி (Social Evaluation)*
2. *சமூகவியல் – ஓர் அறிவியல் (The Science of Sociology)*
3. *உயிரின ஒப்புமை (Organic Andogy) என பிரிக்கலாம்.*

*உலகிலுள்ள ஒவ்வொன்றும் பரிணாம விதிக்கு உட்பட்டிருந்தது. உயிரற்ற (Inorganic) நிகழ்வாகவோ உயிரின (Organic) நிகழ்வாகவோ அல்லது உயிரின அமைதி கடந்த (Super Organic) நிகழ்வாகவோ எதுவாக இருந்தாலும் ஒவ்வொரு நிகழ்வும் பரிணாம விதிக்கு உட்பட்டிருந்தன. இதனைச் சமூகவியலும் ஏற்க வேண்டும் என்பதே ஸ்பென்சரின் கோட்பாடாகும்.''[6]*

*"ஹெர்பர்ட் ஸ்பென்சர் தன்னுடைய First Principles என்ற நூலில் பரிணாம விதிகளை மிகவும் ஆழமாகவும் ஆணித்தரமாகவும் விவரிக்கின்றார். பரிணாம விதியில் மூன்று முழுதளாவிய உண்மைகள் அடங்கியுள்ளன, என்று கூறுகின்றார். அவையாவன,*

1. *பொருளின் அழியாமை (*Indestructibility*)*
2. *இயக்கத்தின் தொடர்ச்சி (*Continuity of motion*)*
3. *விசைச் சக்தியின் நீடிப்பு (*Persistence of Force*)*

*என்பனவாகும். ஒரு நிகழ்வின் பரிணாமம் தானாக ஏற்படுவதில்லை சில விசைச் சக்திகளின் தூண்டுதலால் அது ஏற்படுகிறது. அந்தவிசைகள் என்றும் மறைவதில்லை; அவை நீடித்து நிற்பவை; ஆகவே அவை உண்டாக்கிவிடும் பரிணாம இயக்கமும் தொடர்ந்து நீடிக்கும். அந்த இயக்கம் ஒரு நிலையுடன் நிற்காமல் மேலும் மேலும் பலத் தொடர் நிலைகளின் ஊடே புகுந்து வளரும், இப்படிப்பட்ட தொடர்ச்சியான இயக்கத்தினால் பொருளும் எந்த அழிவும் ஏற்படாது. "பொருள் பரிணமித்து உருமாறுமே தவிர அது அழிந்துவிடுவது கிடையாது. உருமாறினாலும் அது நிலைத்து நிற்கும். இந்த மூன்று விதிகளின் அடிப்படையில் பரிணாம விதி இயங்குகிறது''[7] என ஸ்பென்சர் கருதுகிறார்.*

**மாக்ஸ்வேபர் (1864)**

*ஜெர்மன் நாட்டு அறிஞர் பாரம்பரியம் மிக்க உயர் நடுத்தர வர்க்கத்தைச் சேர்ந்தவர். இவர் தன் இளம் வயதிலேயே கூச்ச இயல்பு உடையவர். அடிக்கடி நோய் வாய்ப்படும் இயல்பினர். ஆசிரியரின் அடக்கு முறையை எதிர்ப்பவர்; கட்டுப்பாடுகளுக்கு எதிரியாகத் திகழ்ந்தவர். எப்போதும் எதையாவது படித்தல், புரிந்து கொள்ளுதல், புரிந்து தெளிதல், தெளிந்த அறிவினைப் பெறுதல் என்ற கட்டுப்பாடுகளுடன் வாழ்ந்தவர் இவருடைய சமூகவியல் கோட்பாடு என்பது அதிகார வருக்க முறையை (*Bureau exay*) அடியொற்றியதாக விளங்கியது. இலக்கியல் வகை மாதிரி லேபரின் முக்கிய படைப்பாகும். சமூக அறிவியலார் தங்களுக்குள் உள்ள அளவிடற்கரிய சமூகப் பிரச்சனைகளைக் கையாள்வதற்கு ஒரு சிறந்த கருவியாக வேபர் இதை உருவாக்கிக் கொடுத்தார்.*

அரசியல் என்பது சிலரின் கைவரிசையாகவும் பொதுவாக வன்முறை நிறைந்ததாகவும் காணப்படும். மதம் என்பது பலரின் ஆறுதலாகவும் அமைகிறது. குடும்பம் என்பது ஓரளவு சுரண்டலின் தன்மையுடனும் அதாவது வகுப்பு முறையில் இருப்பது போல் அமைந்திருக்கிறது என்றும் சாதி என்பது லஞ்சம் ஊழலின் ஒரு முக மூடியாகவும் மேலும் ஒன்று பட்ட உலகத்தில் அழகும் அமைதியும் இருப்பதை அடையாளமாக காட்ட இருப்பதாக கருதப்படும். முரணான சக்திகள் ஏற்படுத்தும் மனத்தாக்கலைவு மற்றும் போராட்டம் அவற்றின் அடிப்படையில் ஏற்படுகின்ற சமூக மாறுதல்களை, மாறுகின்ற சமநிலைத் தன்மைக்கொண்ட சமூகமானது உள்ளடக்கி கொள்கின்றது.

இந்த கருத்தானது ஒரு பரிணாம கொள்கையின் அடிப்படையில் அவர் கொண்டதாகும். இவரின் எண்ணப்படி போராட்டம் தான் அமைதியான வளர்ச்சியை விட நல்ல முன்னேற்றத்திற்கான ஒரு இயந்திரம் ஆகும். பொருள் சார் வாழ்க்கையை உற்பத்தி செய்வது தான் முதல் வரலாற்று நிகழ்ச்சி என்றும் அதுதான் அடிப்படை நிலையாக எல்லா சமூகத்தின் வரலாற்றிலும் அமைகின்றது.

“மனிதனின் போராட்டமோ அவனுடைய அடிப்படை தேவைகளாக உணவு, உடை போன்றவை கிடைத்தவுடன் நின்றுவிடுவதில்லை மனித செயல் தொடர்ச்சியாக திருப்தியடையாத நிலையில் எப்போதும் இருக்கின்றான் அவனுடைய முதல்நிலை தேவைகள் பூர்த்தியடைந்ததும் அவைகளே அவனுடைய மற்ற தேவைகளுக்கு வழி கோலுகின்றது. இவ்வாறு புதிய தேவைகளை உற்பத்தி செய்வதுதான் முதல் வரலாற்றுச் செயலாகும்.’’[8]

### காரல் மார்க்சு

1841 ஆம் ஆண்டு *Differences between the Natural philosophy of Democritus and epicures* என்ற பொருளில் அவருக்கு டாக்டர் பட்டம் அளிக்கப்பட்டது. அவருடைய புரட்சிகரமான நாத்திகக் கருத்துக்களின் காரணமாக அவருக்கு பல்கலைக்கழக விரிவுரையாளர் வேலை

கிடைக்கவில்லை. எனவே *Rheinsche zreitury* என்ற புரட்சிகரமான பத்திரிக்கையில் சேர்ந்து அதன் தலைமைப் பொறுப்பேற்றார். லண்டனில் தங்கியிருந்த பொழுது இரண்டு துண்டு வெளியீடுகளை எழுதினார். அவை *The Class struggle in Srance (1850), The Eighteenth Brumaine of Louis Bonaparte (1852)* எங்கெல்ஸின் பொருளாதார உதவி இல்லாவிடில் ஒரு சிறந்த அறிவாளியை உலகம் இழந்திருக்கவேண்டிய நிலை ஏற்பட்டிருக்கும் . இத்தருணத்தில் கூடக் கடினமாக உழைத்து *Descapital* என்ற நூலை தொடர்ந்து எழுதினார். 1876ல் அது வெளியானது; ஹேகலின் இயக்கவியல் பொருள் முதல்வாத ஆய்வு முறையே, *(Dialectical Method)* மார்க்ஸிள் தத்துவப் போக்கிற்கு அடிப்படையாக அமைந்தது.

சமூகத்தினுடைய அமைப்பானது பொருளாதார உண்மை தன்மையையும், சமூக நல உணர்வையும் புற அமைப்பு நிகழ்வுகளையும், முறைகளையும் கொண்டது. வரலாற்று நிகழ்ச்சிகளில் பொதுவாக மிகச்சிலர் அதிகப்படியான மக்களை பொருளாதார ரீதியில் சுரண்டுகிறார்கள் என்று தெரிகிறது என்றும் இவைதான் வரலாற்றின் அடிப்படையாக அமைகிறது. காரல் மார்க்ஸ் 1818 ஆம் ஆண்டு மே 5 ஆம் நாளன்று ஜெர்மனியில் ரைன்லாந்து *(Rhine Land)* மாகாணத்தில் பிறந்தார். மார்க்சின் சமூகவியலானது, பொருளியல் கருத்துகளை அடிப்படையாகக் கொண்டு உருவானதாகும். இதன் அடிப்படையாகச் சமூக நிறுவனங்களை ஆராய முற்பட்டார்.

‘‘வரலாற்று நிகழ்ச்சிகளின் படி நோக்குகையில் மிகச்சிலர் அதிகப்படியான மக்களைச் சுரண்டுகின்றார்கள் என்றும் இச்சுரண்டல் தான் வரலாற்றின் அடிப்படையாக அமைகிறது என மார்க்சு கருதினார். அரசியல் என்பது சிலரின் கை வரிசையாகவும் பொதுவாக வன்முறை நிறைந்ததாகவும் அமைகிறது. மதம் பலரின் ஆறுதலாக அமைகிறது என்றும் குடும்பம் சுரண்டலின் தன்மையுடையது என்றும் கருதினார். இவர் சமூகத்தை இரண்டு கட்டுமானங்களாகப் பிரித்து ஆராய்ந்தார். அவை,

1. அடிக்கட்டுமானம்
2. மேற்கட்டுமானம்

என்பனவாகும்.''[9] அதாவது பொருளாதாரமே ஒரு சமூகத்திற்கு அடித்தளம் எனவே அதை அடிக்கட்டுமானம் என்றும் எஞ்சிய நிறுவனங்களான குடும்பம், மதம், மொழி, ஒழுக்க நெறிகள் இவற்றின் துணையமைப்புகள் யாவும் பொருளாதாரத்தை அடியாகக் கொண்டு எழுகின்ற மேற்கட்டுமானங்கள் என்றும் வரையறுத்தார். சமூக உறுப்பினர்கள் அமைப்புகள் இடையே நிலவும் முரண்பாடுகளை அடிப்படையாகக் கொண்டு சமூகத்தின் இருப்பை ஆய்வு செய்தார்.

கோம்த் எவ்வாறு மனித பரிணாமத்தை மனித சிந்தனையின் அடிப்படையில் வேறுபடுத்திக் காட்டினாரோ அதே போல கார்ல் மார்க்ஸ் மனித குல வரலாற்றைப் பொருளாதார உற்பத்தி முறையின் அடிப்படையில் நான்கு நிலைகளாக வேறுபடுத்தி காட்டியிருக்கிறார். அவை,

1. ஆசிய பொருளாதார ஒழுங்கு
2. தொன்மை பொருளாதார ஒழுங்கு
3. நிலப்பிரபுத்துவ ஒழுங்கு மற்றும்
4. முதலாளித்துவம் ஒழுங்கு

என்பனவாம். இவ்வாறு மார்க்ஸினுடைய கோட்பாடுகளை இரண்டு முக்கிய அடிக்கோள்களாக காணலாம். அவை,

1. பொருளாதார நிர்ணய முறை
2. மாற்றத்தினுடைய இயக்க செயல் அமைவு திட்டம்

மனித வரலாற்றில் ஒவ்வொரு கட்டத்திலும் பொருள் உற்பத்தி சம்மந்தப்பட்ட நடவடிக்கையே முதன்மையான நடவடிக்கையாக அமைகிறது. பொருள் நிரந்தரமானது என்றாலும் அது இயக்கம் உடையது. இயக்கம் அதன் சாரம்சம்.

ஒரு பொருளாதார அமைப்பு இயற்கையிலேயே தனக்குள் ஒரு முரண்பாட்டை வளர்த்துக் கொள்கிறது. உற்பத்தித் தரப்பினரிடையே முரண்பாடு ஏற்படக் கூடிய அளவுக்கு உறவுகள் அமைவதால், பொருளாதார அமைப்பு தானே தனக்குள் முரண்பாட்டை ஏற்படுத்திக் கொள்கிறது.

**இலக்கியமும் சமூகவியலும்**

இலக்கியமும் சமூகம் ஒன்றையொன்று பாதிக்கக்கூடியன. இலக்கியப்படைப்பு ஒரு தனிமனிதனின் கற்பனையால், ஒரு தனிப்பட்ட மூளையின் உழைப்பால் மட்டும் விளைவதன்று. அது சமகாலச் சமூக நடப்புகள் பழக்க வழக்கங்களின் வாயிலாக தோன்றுகின்றது. "இலக்கியத்தைச் சமூகவியல் வழிநின்று ஆராயும் ஆய்வு இலக்கியச் சமூகவியல் என்று அழைக்கப்படுகிறது. மனிதனது நீண்ட வரலாற்றிலே, நாகரிக நிலை ஆரம்பித்த கால முதல் மனித ஒழுகலாறு பற்றிச் சமய வாதிகளும் இலக்கிய வாதிகளும் ஆழ்ந்த சிரத்தைக் காட்டி வந்துள்ளனர். குறிப்பாக ஆண், பெண் உறவு வேத விவிலிய காலங்களிலேயே இலக்கிய கர்த்தாக்களது கவனத்தை ஈர்த்து வந்திருக்கிறது. தமிழிலும் இப்பொழுது அகத்திணைப் பாடல்கள் என வகைப்படுத்தப் பட்டுள்ளவை ஆண் பெண் உறவின் பல்வேறு நிலைகளைச் சித்தரிப்பனவே என்கிறார்.''[10]

சங்க இலக்கிய சமூக உறவுகள் ஏதேனும் ஒரு தேவையின் பொருட்டே இருந்துள்ளன என்பது அவற்றின் ஆண் பெண் உறவு நிலையைக் கொண்டு அறியலாம். சுரண்டப்படும் பாலியல் உறவு என்னும் கட்டமைப்பு அவற்றிற்கு அடித்தளமாக அமைந்துள்ளதைக் காண முடிகின்றது. சமூகத்திலிருந்து தோன்றிய இலக்கியம் முழுமையான சமூகத்தை வெளிப்படுத்துவனாக இருக்கிறதா? என்றால் இல்லையெனலாம். அது ஓரளவிற்கு ஒடுக்கப்பட்ட மக்களின் நிலையினைக் காட்டுவனவாக இருக்கிறது.

இதற்குக் காரணம் ஒடுக்கப்பட்ட மக்கள் அதிகார வர்க்கத்தினை எதிர்த்து கேள்விகளைக் கேட்க மாட்டார்கள் என்ற துணிவாகும். பதிவாக்கப்பட்டுள்ளது. மேலும் தனி மனிதனிடம் ஏற்படும் பாதிப்பின் வெளிப்பாடாக இலக்கியம் தோன்றுகிறது. தனி மனிதனும் அதிகார வர்க்கத்தினை எதிர்க்க இயலா இருப்பினும் அதிகார வர்க்கத்தின் கட்டுப் பாட்டில்தான் இலக்கியமும் அடக்கி ஆளப்பட்டுள்ளது. அல்லது மறைமுகமான வெளிப்பாடாக தோன்றுகின்றது. சமூக விஞ்ஞானத் துறைகள் பலவற்றுள்ளும் இலக்கியத்துடன் மிக நெருங்கிய தொடர்பு உடையது சமூகவியலாகும். இலக்கியத்திற்கும் சமுதாயத்திற்கும் உள்ள உறவுகளையும் அவற்றைப் புரிந்து கொள்வதற்கான வழிமுறைகளையும் அடிப்படையாகக் கொண்டு "சமுதாய அணுகு முறைக்குத் துணைச் செய்யக்கூடிய அதன் பரிமாணங்களைப் பின்வரும் பகுப்புகளாக அமைக்கின்றது.

அவையான,

1. சமுதாயப் பின்னணி அல்லது களம் *(Social context / Background)*
2. எதிர்கோள் அல்லது ஏற்பு *(Social / Reader Response)*
3. சமுதாயச் சித்தரிப்பு *(Social Content)*
4. சமுதாய மதிப்புகள் *(Social Values)*
5. சமுதாயச்சிக்கல்கள் *(Social Problems)*
6. சமுதாய மாற்றங்கள் *(Social Changes)*

படைப்புலகின் இக்கோணங்களும் சரி, அவை உணர்த்துகின்ற சமுதாய அமைப்பின் கூறுகளும் சரி, தனித்தனியானவை அல்ல. அவை காரணகாரியத் தொடர்புடன் கூடியவை. எந்தச் சமுதாய நிகழ்வும் அப்படித்தான் பிணைந்து அமைந்திருக்கின்றது என்று கூறுகிறார்.''[11]

## இலக்கியச் சமூகவியலின் மூவகைநிலை

இலக்கியச் சமூகவியலை மூவகைப்படுத்தலாம். அவையானவை,

1. இலக்கியம் காலத்தை வெளிப்படுத்தி நிற்கும் தன்மை
2. இலக்கியத்தை விட்டுச் சற்று விலகிப்படைப்பாளனின் சமுதாயச் சூழல்
3. ஒரு குறிப்பிட்ட இலக்கியப் படைப்பு குறிப்பிட்ட இனத்தவரால் அல்லது சமூக பிரிவினரால் எவ்வாறு வரவேற்கப்பட்டது.

இவையாவும் எல்லா இலக்கியத்திற்கும் பொருந்தும் என்பது இல்லை. சமகால இலக்கியங்களின் அவற்றின் வகைமைக்கும் பொருந்தும் வகையில் இருக்கலாம். ஆனால் சங்க இலக்கியத்திற்குப் பொருந்துவனல்ல.

## இலக்கியமும் சமூக உருவாக்கமும்

''சமூக உருவாக்கம் என்பது சமூக உறவுகளின் பன்முகப்பட்ட கட்டமைவினை, சமூகத்தின் பொருளாதார கருத்துநிலை மட்டங்களினதும் சிலவிடங்களில் அரசியல் மட்டத்தினமும், ஒருங்கிணை நிலையைக் குறிப்பதாகும். இந்த ஒருங்கிணை நிலையில் பொருளாதாரத்தின் தொழிற்பாட்டுப் பங்கு முக்கியமானதாகும்.''[12]

நாகரிக வளர்ச்சி அடையாத காலங்களில் வேட்டையாடி உணவினைச் சேகரித்து உண்ட கற்கால மனிதன் உபரி உற்பத்திப் பொருட்களைப் பகிர்ந்து உண்ணும் பழக்கத்தினை ஏற்படுத்திக்கொண்டு அவற்றின் வாயிலாக உறவு முறையை வளர்க்கும் கருத்தினைப் பிரதானபடுத்தி இருந்தனர்.

உபரி உற்பத்தியின் பங்கீடு, உறவுக்கு வழிவகுத்தது; உறவுகள் ஏதேனும் ஒரு தேவையின் பொருட்டே உண்டானவை. வேட்டையின் பொருட்டுக் குழு ஒற்றுமை ஏற்பட்டது. விலங்குகளிடம் இருந்து தம்மைப் பாதுகாத்துக் கொள்ளவும், அவற்றை வேட்டையாடவும் முதலில் கற்றுக் கொண்டனர். அதிக உபரியைப் பங்கிட்டு கொண்டதில் தான் பிரிவினையாகச் சமூக வர்க்கம் பெற்றது. அப்படியான சூழலில் ''கால் நடை வளர்ப்போர் இனம் பிரிக்கப்பட்டதுதான் முதல் பிரதான சமுதாய

உழைப்புப் பிரிவினையாகும். இந்தக் கட்டத்தில் கால்நடை வளர்ப்போர், பெரிய மந்தையுடையோராய் இருந்ததால், தமது பயனீட்டுக்கும் மேலே உபரி வைத்திருந்தனர். முன் காலத்தில் அதிகப்படியாக விட்டுப்போன பொருள்களைக்கொண்டு தற்செயலாக நடந்து வந்த பண்ட மாற்று இப்போது கால்நடை வளர்ப்பு இனத்திற்கும் விவசாயம் செய்யும் இனத்துக்கும் இடையில் முறையாக நடைபெறத் தொடங்கியது. இதன் விளைவாகச் சமுதாயச் செல்வம் அதிகரித்தது, அதிகப்படியான அடிமை உழைப்பு உபயோகப் படுத்தப்பட்டது.''[13]

தமிழ்ச் சமூக உருவாக்கத்தில் மருத நிலத்தில் நெல்லினைப் பெற நெய்தல் நில மீனைக்கொடுத்துப் பெற்றுள்ளனர். மீன் பிடிக்கும் வலைத் தொழிலிலேயே வல்லவனாகிய பாண்மகன் நெல்லைப் பெற்றுள்ளான். இதனை, சின் மீன் சொரிந்து பன்னெற் ஐங்.(புலவி 49) என்பதன் மூலம் அறியலாம். இரண்டாவது வந்த பெரிய சமுதாய உழைப்புப் பிரிவினை கைத்தொழில்கள் விவசாயத்திலிருந்து பிரிந்த போது ஏற்பட்டது. இதன் விளைவாகச் சமுதாயத்துக்குள் பண்டமாற்று நுழைந்தது பொருளாதார ஏற்றத்தாழ்வு அதிகரித்தது. பண்டமாற்றுக்காகவே தனியாகப் பொருள்கள் மேலும் மேலும் உற்பத்தியாகவே தனிதனி உற்பத்தியாளர்களிடையே நடந்து வந்த பண்டமாற்று ஒரு சமுதாயத் தேவையாகிறது. இதனை,

> **''விலைவல் பாண்மகன் வாலெயிற்று மடமகள்**
> **வராஅல் சொரிந்த வட்டியுண் மனையோள்''**[14]

என்னும் அடிகளின் மூலம் பண்டமாற்று நிலவியதை அறிய முடிகிறது.

### வர்க்க உறவு

``Class'' என்ற வார்த்தை மனிதச் சமுதாயம் பெரிய குழுக்களாகப் பிரிக்கப்பட்ட பொழுது இந்தக் குழுக்களைக் குறிப்பதற்குப் பயன்படுத்தப் படலாயிற்று. ''திட்ட வட்டமான ஆய்வுகளிலிருந்து பொதுவான முடிவுகளைப் பெற்று, சமுதாயம் வர்க்கங்களாகப் பிளவுபட்டது என மார்க்சியம் வழங்குகிறது. ஆதிகாலச் சமுதாய அமைப்பு அழிவுற்ற போது

*முதல் வர்க்கப்பிரிவு ஏற்பட்டது''.[15] லெனினும், மார்க்சும் அவற்றிற்கு வழிவகுத்தனர். ஆதிகாலச் சமுதாய அமைப்பு அழிவுற்றதும், வர்க்கச் சமுதாயம் தோன்றியதும் ஒரு நெடிய நிகழ்ச்சிப் போக்காகும். இது ஒரே காலத்தில் எல்லா இடங்களிலும் தோன்றவில்லை. பண்டைய இந்திய சீனாவில் கி.மு மூவாயிரம் ஆண்டுகளில்தான் உருவாயிற்று. ''பொருளாதார ரீதியில் பார்க்கும் போது உபரி உற்பத்திப் பொருள்தான் வர்க்கப் பிரிவுக்குக் காரணம். இந்த உபரி உற்பத்திப் பொருள் காலம் செல்லச் செல்லத் தனியார் சொத்தாக மாறியது.''[16] தமிழகத்தில் வர்க்க உறவு சங்க காலத்திலயே தோன்றியது. ஐவகை நில மக்களும் அவர்அவர் செய்த தொழில்களின் அடிப்படையில் வர்க்கமாக பிரிந்து வாழ்ந்துள்ளனர். தொல்காப்பியத்தில் உயர்ந்தோர் தாழ்ந்தோர் என பிரிக்கப்பட்டுள்ளனர்.*

**''மேலோர் மூவர்க்கும் புணர்த்த காரணம்**
**கீழோர்க்கு ஆகிய காலமும் உண்டு''** [17]

*என்னும் வரிகள் மூலம் அறியலாம். மேலோராகிய அந்தணர் அரசர் வணிகர்களுக்கு என்று ஏற்பட்ட இந்தச் சடங்குகள், அவர்களுக்குக் கீழ்ப்பட்ட மற்ற தமிழர்களுக்கும் உரியன என்று தொல்காப்பியம் சுட்டுகின்றது. மேற்குறிப்பிட்ட செய்திகளின் மூலம் சங்க இலக்கியங்களில் வரும் ஐந்திணை மக்களுக்கும் இது பொருந்துவனவாக உள்ளது. திருமண உறவுகளில்தான் வர்க்க பிரிவினை ஏற்பட்டுள்ளது புலனாகிறது.*

*"காரல் மார்க்ஸ் மனித வரலாற்றை வர்க்கப்போராட்ட வரலாறு என்கிறார். இதுவரை இருந்து வருகிற சமூகத்தின் வரலாறு வர்க்கப் போராட்டங்களின் வரலாறே என்கிறார். பொருட் செல்வத்தின் பகிர்வில் சமத்துவமின்மை ஏற்பட்டு, அதன் விளைவாக வர்க்கங்கள் ஏற்பட்டன. ஆகவே மனித வரலாற்றின் ஒவ்வொரு கட்டத்திலும் சமூகம் - உடைமைகள் கொண்டவர்கள், உடைமைகள் இல்லாமல் போனார்கள். சுரண்டுபவர்கள் - சுரண்டப்படுகிறவர்கள் ஆளுவோர் - ஆளப்படுவோர் என்று பிரிந்து நிற்கிறது என்கிறார்.''[18] வர்க்க பேதத்திற்குப் பொருளாதாரக் காரணியே அதிமுக்கியமான காரணியாக விளங்குகிறது. உற்பத்தி சாதனங்களை*

வைத்து உடைமையுரிமை அமையும் போது ஒருவன் உடையோர் வர்க்கத்தினனாகவும், உடைமையுரிமை இல்லாத நிலையில் இல்லாதோர் வர்க்கத்தினனாகவும் அமைகிறான். நிலப்பிரபுத்துவ அமைப்பு முறையில் நிலம் உற்பத்திச் சாதனமாகும். எனவே அந்த உற்பத்திச் சாதனத்தை உடையவர்கள் உடையோராகவும் நிலமில்லாத தொழிலாளர்கள் இல்லாதோராகவும் அமைகின்றனர்.. எனவே முரண் பாட்டினால் எதிர்த்தல் நிலை ஏற்படும்போது பழைய அமைப்பு வீழ்ச்சியடைந்து கூட்டிணைப்பு நிலையில் புதிய அமைப்பு உருவாகிறது. எனவே அந்தப் புதிய அமைப்பு பழைய அமைப்பின் கர்ப்பத்திற்குள்ளிருந்து வெளிவருவதால் அது பழைய அமைப்பின் இயல்புகளையும் கொண்டு விளங்குகிறது.

## இலக்கிய உருவாக்கமும் சமூகத்தின் பங்களிப்பும்

மனிதனுடைய முதலாவதும் முதன்மையானதுமான நடவடிக்கை பொருளாதார நடவடிக்கையாகும். இயற்கையின் மீது ஆதிக்கம் செலுத்தி இயற்கையின் பொருளாதார உற்பத்திச் சக்திகளைத் தனது கட்டுப்பாட்டுக்குள் மனிதன் கொண்டு வர முயற்சி செய்கிறான். மனித வரலாற்றில் இந்த நடவடிக்கை ஊடுருவி, நிற்கிறது. விலங்குகளும், மனிதர்களும் இயற்கைச் சூழ்நிலையில் தான் வாழ்கிறார்கள். ஆனால் விலங்குகள் இயற்கைச் சூழ்நிலைக்கு ஏற்பத் தன்னை தகவமைத்துக் கொள்கின்றன. ஆனால் மனிதன் மட்டும் கருவிகளைக் கொண்டு இயற்கை சூழ்நிலையை உருமாற்றுகிறான். வரலாற்றை உருவாக்குகிறான்.

மனிதன் தனது அடிப்படைத் தேவைகளான உணவு, உடை, உறைவிடம், இவற்றிற்காக இயற்கையோடு போராட வேண்டியிருக்கிறது. அவனுடைய அடிப்படைத் தேவைகளை நிறைவேற்றக் கூடிய மூலாதாரங்கள் இயற்கையிடமே இருப்பதால், அவர் அந்த மூலாதாரங்களைப் பெற இயற்கையோடு மோதிப் போராடுகிறான். ஒரு போரில் ஆயுதங்கள் பயன்படுத்தப்படுவதைப் போல இயற்கைக்கு எதிராக போராட்டத்தில் சில கருவிகள் தயாரிக்கப்பட்டு, அவற்றைக் கொண்டு இயற்கையிடமிருந்து தங்கள் தேவைகளை நிறைவேற்றக் கூடிய பொருள் பெறப்படுகின்றது. இதனை அறிய தமிழ்ச் சமூகம் வகுத்த

நிலக்கொள்கைகளும், உழவு, கருவிகளும் ஆதாரங்களாக உள்ளன. சமுதாய மாற்றம் என்பது சங்க இலக்கியத்தைப் பொறுத்த அளவில் புலவர்களின் சமுதாய உணர்வினையும், உலகக் கண்ணோட்டத்தினையும் பொறுத்தே அமைகின்றது. பொதுவாகச் சமுதாயம் என்பதே அதன் தன்னிலைகளினாலும் புறவயத்தாக்கங்களினாலும் மாறுதலுக்குரியது. இம்மாற்றம் முன்னோக்கி அமைவது நல்லது இலக்கியம் சமுதாயத்தின் மாற்றத்தை உள்வாங்கியிருக்க வேண்டும். அந்த வகையில் சங்க இலக்கியங்கள் இம்மாற்றத்தை உள் வாங்கியுள்ளது.

## தொல்காப்பிய உருவாக்கத்தில் சமூகத்தின்பங்கு

தமிழனத்தின் முதல் நூல் தொல்காப்பியமாகும். தொல்கால மக்களின் இலக்கிய நூலாகவும், இலக்கண நூலகவும், பழமையைக் காத்து நிற்கும் கருவூலமாகத் திகழ்கிறது. இலக்கிய உருவாக்கத்தில் அக்கால சமூக மக்களின் பங்கு இன்றியமையாததாகும். அவர்களின் வாழ்வினை அகவாழ்வு, புறவாழ்வு என பகுத்துரைக்கப்பட்ட நூலாக தொல்காப்பியம் உள்ளது. “இலக்கியம் கண்டதற்கு இலக்கணம் இயம்பலின் என்ற நூற்பாவின் மூலம் இந்நூலுக்கு முன்பே இலக்கிய உருவாக்கம் ஏற்பட்டுள்ளதை அறியலாம்.’’[19]

இந்தத் தெளிவான வரையறையை முன் வைத்து தொல்காப்பியத்தை ஒரு வழி நூலாகக் கொள்வதற்கும், அடுத்த தலைமுறையினருக்கும் எவ்வாறு இலக்கண, இலக்கியங்களைக் எடுத்துக் கூற வேண்டும் என்பதைக் கருத்தில் கொண்டு முன்மொழியப்பட்ட நூலாகவும் இருந்துள்ளதை அறிய முடிகிறது. வட வேங்கடம் முதல் குமரி வரை உள்ள சமூக மக்களை மையமிட்டு அவர்கள் பேசிய தமிழ் மொழியைக் கருத்தில் கொண்டு உருவாக்கம் செய்யப்பட்டுள்ளது. தமிழிலக்கிய நூல்களை எல்லாம் அகப்பொருள், புறப்பொருள் என பகுக்க அடித்தள மிட்டுள்ளது. அவற்றில் ஆணும் பெண்ணும் அன்போடு ஒன்றுபட்டுக் கூடிவாழும் காதல் வாழ்வே அகவாழ்வாகும். அகத்திலே நிகழும் ஒழுக்கம் அகத்திணை என்றும் அவற்றை ஐவகை திணையாக பாகுபடுத்தி ஒவ்வொரு திணைகளிலும்

அக்கால சமூக மக்களின் வாழ்வியல் நெறியை விளக்கி, கற்பு, களவு என்னும் கைகோளினை முறைபடுத்தி வரையறுத்துள்ளனர். புறத்திலேயுள்ள அரசாட்சி, போராட்டம், விவசாயம் வணிகம் மற்ற தொழில்கள் இவை எல்லாம் பிறர் அறியும் வண்ணம் நிகழ்வதால் புறத்திணை என வகைப்படுத்தியுள்ளார். இவையாவும் பொருள் கருத்தின் அடிப்படையில் வகுக்கப்பட்டுள்ளன. இதனை,

**“புறத்திணை மருங்கின் பொருந்தின் அல்லது**
**அகத்திணை மருங்கின் அளவுதல் இலவே’’[20]**

இவற்றில் அகப்பாடல்களில் சுட்டிக்கூறும் ஒருவரது இயற்பெயர் வாராது என்கிறார். ஏனெனில் அது மக்கள் அனைவரையும் பொதுவாகக் கருதிப் பாடப்படுவது, மக்களுள் ஒருவரை மட்டும் கருதிப் பாடப்படுவது அன்று. இக்கொள்கையின்படி அகப்பாடலே யாயினும் ஒருவரது இயற்பெயர் அறியப்பட்டால் அது புறமாகிவிடும். ஏனெனில் அது மக்கள் நுதலியதாகாது ஒருவரை மட்டும் நுதலியாகிவிடும் என்ற பொதுமையில் வைத்து விளக்கப் பட்டுள்ளது. இவ்வாறாக தொல்காப்பியரின் இலக்கிய உருவாக்கம் அக்கால சமூக மக்களின் வாழ்வியல் நெறியிலிருந்து எடுக்கப்பட்டு இதனை,

**“செந்தமிழ் சேர்ந்த பன்னிரு நிலத்தும்**
**தம் குறிப்பினவே திசைச்சொற் கிளவி’’ [21]**

என்பவற்றிலிருந்து தொல் தமிழக மக்களின் பன்னிரு நாடுகளுக்கும் பொருந்துவதாக உருவாக்கப்பட்டுள்ளது. பல்வேறு இலக்கியமும் அக்காலத்தில் முகிழ்த்துள்ளன. இதனை,

**“பாட்டு உரை நூலே வாய்மொழி, பிசியே**
**அங்கதம் முதுசொல்லோடு அவ்வேழ் நிலத்தும்**
**வண்புகழ் மூவர் தண்பொழில் வரைப்பின்**
**நாற்பெயர் எல்லை அகத்தவர் வழங்கும்**
**யாப்பின் வழியது என்மனார் புலவர்’’[22]**

*என்ற நூற்பாவின் வழியில் இலக்கிய வகைகள் குறித்து அறிய முடிகிறது. பாட்டு, உரை, நூல், வாய்மொழி (மந்திரம்), பிசி (விடுகதை), அங்கதம், முதுசொல் (பழமொழி) என்ற ஏழு அடிப்படையிலும் இலக்கிய உருவாக்கம் பெற்றுள்ளதை அறிய முடிகிறது.*

## சங்க இலக்கிய உருவாக்கத்தில் சமூகத்தின் பங்கு

*சங்கம் வைத்து தமிழை வளர்த்தவர்கள் பாண்டியர்கள் ஆவர். சங்க இலக்கியம் உருவாக முதல், இடை, கடைச்சங்கங்கள் முக்கிய பங்கு வகித்தன. இது பதிணென் மேற்கணக்கு நூல்கள் எனவும் அழைக்கப்படுகின்றன. "அகம் எனும் பிரிவுக்குத் தமிழைத் தவிர உலகில் வேறெந்த மொழியிலும் இலக்கண நூல்கள் இல்லை. உலகையே முதல், கரு, உரி என மூன்றாகப்பகுத்து ஓர் ஒழுங்கமைவினை உண்டாக்கியவர்கள் சங்க கால மக்களாவர்.''[23] இவற்றில் வாழ்விற்கு அடிப்படையாக அமைகின்ற தெய்வம், உணவு, வளர், மக்கள், தொழில், பறவை, விலங்கு முதலான பதினான்கு பொருள்களைக் கருப்பொருளில் அடக்கி அதனை ஒவ்வொரு திணைப்பாடலிலும் பயின்று வருமாறு தெளிவான இலக்கிய வகைமையைத் தமிழர்கள் உருவாக்கியுள்ளது நுட்பமானதாகும். தொல்காப்பியர்,*

**"மக்கள் நுதலிய அகன் ஐந்திணையும்**
**சுட்டி ஒருவர்ப்பெயர் கொளப் பெறாஅர்''[24]**

*என்ற நூற்பாவின் வழி தலைவன், தலைவியர், பெயர் குறித்து கூறாமல் சொல்லப்பட்டுள்ள இலக்கிய உத்தியைக் கருத்தில் கொண்டு ஆயுமிடத்து சங்க கால பண்பாட்டு நெறியினை உணரமுடிகிறது. "இலியட், ஓடிசி, காப்பியங்களும், வடமொழியின் இராமயண, மகாபாரதங்களும், இன்னபிற மொழிகளிலும் கடவுளரைப் பற்றி முதல் நூல்கள் தோன்றியிருக்க, தலைவன், தலைவி, தோழி, நற்றாய், செவிலித்தாய், பாங்கன், கண்டோர் என்றவாறு மனிதர்களின் கூற்றுகளை அடிப்படையாக வைத்துக் கூற்றிலக்கியம் என்ற மெச்சத்தக்க வகையில் சங்க இலக்கியங்களைக்*

கருவூலமாகக் கொண்டவர்கள் சங்க கால மக்களாவர்.''[25] சங்க கால இலக்கிய உருவாக்கத்தில், மன்னர்களுக்கும், புலவர்களுக்கும் முக்கிய பங்குண்டு. தொகையாக தொகுக்கப்பட்டும், வகையாக வகுக்கப்பட்டும் முறைப்படுத்தி வைத்து அக்கால மக்களின் செம்மையான பண்பாட்டினை வெளிப்படுத்தியுள்ளனர்.

"சங்க இலக்கியத்தின் மையம் மானிட வாழ்வே என்னும் கருத்தை பழந்தமிழ் இலக்கியத்தில் இயற்கை என்ற நூலில் மு.வ குறிப்பிடுகிறார்.''[26] சங்க தமிழ் மக்கள் இயற்கையோடு இயைந்து வாழும் வாழ்க்கை உடையவர்கள். அவர்கள் வாழும் நிலத்தை குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை எனப் பிரித்து அந்நிலத்தில் வாழும் மக்களை குறவர், இடையர், உழவர், பரதவர், எயினர் எனப்பெயரிட்டனர். அந்நிலத்தின் கருப்பொருளும், அவர்களின் ஒழுக்கமாகிய உரிப்பொருளும் அகத்திணை இலக்கியத்தில் பாடுப்பொருளாக அமைந்துள்ளது. கூத்தர், பாணர், விறலியர், பொருநர், போன்ற மக்களின் வாழ்வியலை மையமாக வைத்து ஆற்றுபடை இலக்கியங்கள் உருவாகியுள்ளது.

அக்கால சமூக மக்களின் வறுமை நிலை, வாழ்வு, புலவர்களின் அறவாழ்வு, மன்னர்களின் செங்கோன்மையான வாழ்வு ஆகியவையே இவ்உருவாக்கத்திற்கு காரணமாகவும் அமைந்துள்ளது.

### நீதி இலக்கிய உருவாக்கத்தில் சமூகத்தின் பங்கு

சங்க மருவிய காலத்தில் தோன்றியது நீதி நூல்கள் ஆகும். கி.மு.250முதல் கி.பி.250 வரை சங்க காலமாகும். அவற்றின் இறுதியில் தோன்றியது நீதி இலக்கியமாகும் சங்க இறுதிக் காலத்தில் தமிழ்நாட்டு மூவேந்தர்களும், குறுநில மன்னர்களும், வள்ளல்களும் தம்முள் பகைமைக் கொண்டதால் பிற நாட்டினர் தமிழ் நாட்டிற்குள் நுழையும் சூழல் ஏற்பட்டது. அவ்வாறு வந்தவர்கள், களப்பிரரும், பல்லவரும் ஆவர். களப்பிறர் பாலி மொழியினையும் பல்லவர் பிராகிருத மொழியினையும் ஆதரித்தனர். பாண்டிய நாட்டையும், சோழ நாட்டையும் கைப்பற்றிய இக்களப்பிரர் பௌத்த சமயத்தைத் தென்னகத்தே பரப்ப முயன்றனர்.

*"கி.பி. 4 ஆம் நூற்றாண்டளவில் சோழநாட்டு உறையூரினனாகிய புத்தகத்தின் அபிதம்மாவதாராம் விநயவி நிச்சயம் என்ற இரு நூல்களைப் பாலி மொழியில் எழுதி வெளியிட்டான் என தமிழிலக்கிய வரலாற்றில் தமிழண்ணல் குறிப்பிடுகிறார்.''[27] இவற்றிலிருந்து நீதி இலக்கிய காலத்தில் வேற்றுமொழி வரவினையும் தமிழ் இலக்கிய செல்வாக்கு குறைந்தமையும் உணரலாம். "கி.பி. மூன்றாம் நூற்றாண்டில் பாண்டிய நாட்டில் பஞ்சம் நிலவியது. இப்பஞ்சம் பாண்டிய நாட்டை வருத்திற்று அக்கால பகுதியில் பல்லவர்கள் தொண்டையும் நடு நாட்டையும் ஆண்டனர் என உரையாசிரியர் மு.வை அரவிந்தன் கூறுகிறார்.''[28] இதன் மூலம் வடமொழியின் செல்வாக்கு மிகுந்து காணப்பட்டது புலனாகிறது.*

*கி.பி.7ஆம் நூற்றாண்டிலிருந்து வடமொழி தமிழ் ஆகிய இருமொழிகளும் கலந்து மணிப்பிரவாளநடை தோன்றியது. முன்னர் சங்க கால மன்னர்கள் ஆட்சி நிலைபெற முடியவில்லை கி.பி. 6-ல் பல்லவர் ஆண்டனர். அவர்களுக்கு உள்நாட்டு பூசல் ஏற்பட்டு பௌத்தம் சமணம் செல்வாக்குடன் திகழ்ந்தது. நீதி இலக்கியம் உருவாக இதுவே காரணமாகும். இதனை இருண்ட காலம் என அழைக்க இதுவே காரணமாகும். இக்காலக்கட்டத்தில் நீதி கருத்துகளின் தேவை ஏற்பட்டது எனவே நீதி நூல்களின் அவசியம் ஏற்பட்டு சங்க மருவிய இலக்கியங்களான பதினெண் கீழ்கணக்கு தோன்றியது. இதனை,*

***"நாலடி நான் மணி நானாற்பது ஐந்திணைமுப்***
***பால் கடுகம் கோவை பழமொழி மாமூலம்***
***இன்னிலைய காஞ்சியோடு ஏலாதி என்பவே***
***கைந்நிலைய வாங் கீழ்க் கணக்கு''[28]***

*ஆகியனவாகும். இவற்றுள் நானாற்பது நாலைந்திணை என்பது எட்டு நூல்களைக் குறிக்கும். இன்னிலை அடங்கிய நீதி நூல்களாவன, 1. திருக்குறள் 2.நாலடியார், 3. நான்மணிக் கடிகை 4. இனியவை நாற்பது, 5.இன்னாநாற்பது 6. திரிகடுகம், 7. ஆசாரக்கோவை, 8. பழமொழிநானூறு, 9.சிறுபஞ்சமூலம் 10. முதுமொழிக்காஞ்சி, 11. ஏலாதி, 12. இன்னிலை ஆகிய நூல்கள் தோன்றின.*

## காப்பிய இலக்கிய உருவாக்கத்தில் சமூகத்தின் பங்கு

தொல்காப்பியர் காலத்திலே காப்பியங்கள் இருந்துள்ளன. "தொன்மைதானே உரையொடு புணர்ந்த பழைமையின் மேற்றே''[29] தொன்று தொட்டு வழங்கும் பழங்கதைகளைத் தழுவிய காப்பியங்களையும், கதை தழுவிய நூல்களையுமே இது குறிப்பிடுகின்றது.

"சமுதாயம் நாகரிகத் தொடக்க காலத்திலிருந்து மெல்ல மெல்ல வளர்ச்சிப் பெறத் தொடங்கிய காலகட்டமே காப்பிய எழுச்சிக் காலம் என ந. காசிராஜன் குறிப்பிடுகிறார்.''[30] அக்கால சூழ்நிலையில் தனிமனிதனின் ஒப்புமை, உயர்வு, கொடை, வீரம், புகழ் ஆகியவற்றை நிலைநாட்டி அவனை ஒரு குழுவின் உறுப்பினன் என்று அங்கீகரிக்கப்பட்டு பின்பு அவன் வீர தீர செயல்களின் மூலம் முன்னோனாக வணங்கதக்கவனாது சிறப்பிக்கப்படுகிறான். இவை விழாக்களிலும், வழிபாடுகளிலும் அவனுடைய வாழ்க்கை வரலாறு பாடு பொருளாக்கப்பட்டு நிகழ்த்தி நடித்துக்காட்டப்பட்டு வந்தன.

இதுவே காப்பியமாக உருவாக காரணமாயிற்று "தமிழகம் முழுவதும் கண்ணகி வழிபாடு மாரியம்மன் மற்றும் காளி, கொற்றவை வழி பாடாகவும் மதுரையில் செல்லத்தம்மன் வழிபாடாகவும் உரு பெற்றுள்ளது. என நா.காசிராஜன் எடுத்துரைக்கிறார்.''[31] கோவலன் கண்ணகி இவர்களின் வாழ்க்கை வரலாறு சிலப்பதிகாரமாக முகிழ்வித்தது. இவ்விரு பாத்திரங்களும் அக்கால வணிக சமூகத்தைப் பின்புலமாக கொண்டு உருவாக்கப்பட்டன. மணிமேகலை இவர்களின் புதல்வி ஆவாள்.

இவள் பௌத்த மதக் கருத்துக்களை அக்கால சமூகத்திற்கு எடுத்துக்கூற படைக்கப்பட்ட பாத்திரமாக இருந்து தவ வாழ்வினை மேற்கொண்டாள். இவ்விரு காப்பியங்களும் 'இரட்டைக்காப்பியங்கள்' என்னும் நிலைப்பாட்டில் தொடர்ச்சியாகப் படைக்கப்பட்டது. சீவக சிந்தாமணி சமண மதக் கருத்துக்களையும் குண்டலகேசி பௌத்த மதக்

கருத்துக்களையும், வளையாபதி சமணக் கருத்துக்களையும் கூறுவதால் அக்கால காப்பிய உருவாக்கம் பெற சமணமும், பௌத்தமும் வழிகோழியது புலனாகிறது. மற்ற ஐஞ்சிறுகாப்பியங்கள் யாவும் சமண மதகொள்கையிலே தோன்றின. இவற்றின் மூலம் சமண சமயமும், பௌத்தமும் காப்பிய காலத்தில் மேலோங்கியிருந்தமை புலனாகிறது.

## பக்தியிலக்கிய உருவாக்கத்தில் சமூகத்தின் பங்கு

கி.பி. 250 முதல் 600 வரை நீதி இலக்கியம் முகிழ்த்த காலமாகும். காப்பிய காலத்தில் சமணமும், பௌத்தமும் செல்வாக்கில் இருக்க களப்பிரர் காலத்தில் தமிழ்மொழியின் வளர்ச்சி குறைந்திருந்தது. இக்காலத்தில் துறவறநிலை மிகுதியாக பேசப்பட்டது. "கடுங்கோன் என்ற பாண்டியன் படையெடுப்பாலும், பல்லவர்களின் தாக்குதலாலும் களப்பிரர் ஆட்சி அடிச்சுவடு தெரியாமல் அழிந்தது. புத்த, சமண மதங்களின் மீது மக்களுக்கு வெறுப்பு ஏற்பட்டது. அச்சூழலில் நாயன்மார்கள், ஆழ்வார்களின் பாடல்கள் எழுந்தன. தமிழுக்கு மறுமலர்ச்சிக் காலமாக இப்பக்தி இலக்கியக்காலம் அமைந்தது. என சா.வே. சுப்ரமணியன் குறிப்பிடுகிறார்.''[32] நாயன்மார்கள் 63 பேரும் ஊர் ஊராகச் சென்று பதிகங்களைப் பாடி தமிழைத் தழைக்கச் செய்தனர். திருஞானசம்பந்தர், சுந்தரர், அப்பர் போன்ற சிவனடியார்கள் 1, 2, 3-ஆம் திருமுறைகளைப் பாடி மக்களுக்கு சைவ சமயத்தினை பரப்பி பௌத்த, சமண சமயங்களின் செல்வாக்கை அகற்றினர்.

நாயன்மார்களாகிய மூவர் முதலிகளும் மாணிக்கவாசரைச் சேர்த்து நால்வரும் சைவ சமயத்தின் ஆணி வேர்களாக இருந்து காத்தனர். அதே போன்று வைணவத்தின் பெருமைகளை ஆழ்வார்கள் பாடினர். அவர்களுள் நம்மாழ்வார், திருமங்கையாழ்வார், பொய்கையாழ்வார், பூதத்தாழ்வார், பேயாழ்வார் ஆகியோர் குறிப்பிடத்தக்கவராவர். அக்கால சமூகசூழலில் சமய பூசல் நிலவி சைவ / வைணவம் வளர்ந்தது.

*கி.பி 10-ஆம் நூற்றாண்டில் இராசராசனின் முயற்ச்சியால் திருமுறைகள் தொகுக்கப்பட்டன. இவ்வேலையை நம்பியாண்டார் நம்பி, செய்து முடித்தார். ஆழ்வார்களின் பாசுரங்களை நாதமுனி தொகுத்தார். இவ்வாறாக பக்தி இலக்கிய உருவாக்கம் சமூக விளைபயனாக கிடைத்தது.*

**சிற்றிலக்கிய உருவாக்கத்தில் சமூகத்தின் பங்கு**

*சிற்றிலக்கியத்திற்கான விதை தொல்காப்பியர் காலமுதற்றே தோன்றிற்று. இதன் காலம் நாயக்கர்காலமாகும். ஆற்றுப்படை, உலா, பிள்ளைத்தமிழ், அந்தாதி, பதிகம், மடல், கோவை, குறவஞ்சி, பள்ளு, போன்ற இலக்கிய வடிவம் இருந்துள்ளன. இதனை,*

***“ஊரொடு தோற்றமும் உரித்தென மொழிப’’[33]***

*என்ற அடியில் உலாவையும்,*

***“குழவி மருங்கினும் கிழவ தாகும்’’[34]***

*என்ற அடியில் பிள்ளைத் தமிழும்,*

***“கூத்தரும் பாணரும் பொருநரும், விறலியும்***
***ஆற்றிடைக் காட்சி உறழத் தோன்றி’’[35]***

*என்ற அடியில் ஆற்றுப் படையையும் குறிப்பனவாகும்.*

*பிற்காலத்தில் தோன்றிய பன்னிருபாட்டியல் எனும் நூலில் 96-வகை சிற்றிலக்கியம் இருப்பதை தெரிவிக்கிறது. பிரபந்தம் எனவும் அழைக்கப்படுகிறது. “தொல்காப்பியர் காலத்தில் இடம் பெற்ற சிற்றிலக்கிய வித்து சங்க காலத்தில் ஆற்றுப்படையாக முளைவிட்டு ஐந்தாம் நூற்றாண்டில் அந்தாதியாகத் துளிர்த்து, ஏழாம் நூற்றாண்டில் உலாவாக மரமாகி, ஒன்பதாம் நூற்றாண்டில் கலம்பகமாகக் கிளைத்து பதினோராம் நூற்றாண்டில் சதகமாகவும், பரணியாகவும் அரும்பிப் பன்னிரண்டாம் நூற்றாண்டில் பிள்ளைத் தமிழாக மொட்டாகி பதினான்காம் நூற்றாண்டில் தூதாகப் பூத்து பதினாறாம் நூற்றாண்டில் பள்ளாகக்*

*காய்த்து பதினெட்டாம் நூற்றாண்டில் குறவஞ்சியாகக் கனிந்தது என ந.வீ. செயராமன் தம் சிற்றிலக்கியச் செல்வம் என்ற நூலில் கூறுகிறார்.''[36] இவற்றின் மூலம் சிற்றிலக்கியம் உருவாக்கத்தினை அறியலாம்.*

## 20–ஆம் நூற்றாண்டில் இலக்கிய உருவாக்கத்தில் சமூகத்தின் பங்கு

*சிற்றிலக்கிய உருவாக்கத்தை அடுத்து அகராதி, நிகண்டுகள், உரைநடைகள் தோன்றின. மேலைநாட்டவரான ஐரோப்பியரின் வருகையால் இலக்கிய உரைநடைக்கு வித்திட்டன. தமிழ் நூல்கள் யாவும் அச்சேரின குறிப்பாக கிருத்தவ சமயம் பரப்பும் நோக்கில் இந்தியாவிற்கு வந்த கால்டுவெல், வீரமாமுனிவர், இராஸ் பாதிரியார், ஜி.யு. போப், சாமுவேல் ஜான்சன், போன்றோரின் வருகை தமிழுக்கு புத்திலக்கியத்திற்கு வழிகோழின. இவர்களின் வருகைக்கு முன் 17, 18-ஆம் நூற்றாண்டில் தமிழும், வடமொழியும் கலந்த மணிபிரவாளம் என்ற நடை வழக்கில் இருந்தன. உ.வே.சா சிவஞானமுனிவர் உரைநடையின் தந்தையெனும் சிறப்பினைப் பெற்று தொடர்ந்திருந்தனர். பின்னர் திரு.வி.க மறைமலையடிகளின் தனித்தமிழ் இயக்கம் தழைத்தஉடன் வடமொழியின் செல்வாக்கு குறைந்தன. இருபதாம் நூற்றாண்டில் புதுக்கவிதை வரவால் இலக்கிய மறுமலர்ச்சி ஏற்பட்டது.*

> ***"சுவை புதிது பொருள்புதிது வளம்புதிது***
> ***சொற்புதிது சோதிமிக்க நவகவிதை''[37]***

*என்ற பாரதியின் கூற்று புதிய இலக்கியக் கொள்கையை வெளிப்படுத்துவதோடு, கவிதைக்கு எளிமை தேவை என்கிற சிந்தனையைக் காட்டுகிறது. இந்திய சுதந்திர போராட்டம் நடைபெற்ற காலக்கட்டத்தில் சுதந்திர கருத்துக்களை வெளியிட புதுக்கவிதை பாரதியாருக்கு நல்ல ஊடகமாக இருந்தது. தம் கருத்துக்களைத் தெள்ள தெளிந்த தமிழில் எடுத்து கூறி விடுதலை உணர்வை ஊக்குவிக்க எடுத்த முயற்சியில் வெற்றிகண்டார். அதனைத் தொடர்ந்து மேலைநாட்டு இலக்கியத் தாக்கம், நாவலும், சிறுகதையும் வடிவம் பெற பிரதாம முதலியார் சரித்திரம் மூலம் மாயூவரம் வேதநாயகம்பிள்ளையும், வ.வே.சு.அய்யர் போன்றோர்கள் பல்வேறு*

இலக்கியங்கள் நாடகங்களாக தெருக்களில் நடிக்கப்பட்டு மக்களிடையே விழிப்புணர்வை ஏற்படுத்தின. விடுதலைப் போராட்டத்தில் இதழ்களும் தனி வடிவம் பெற்று சுதந்திர உணர்வை ஊட்டி வளர்த்து வந்தன.

**அரசுருவாக்கம்**

சமூக மாற்றத்தில் அரசுருவாக்கமும் இன்றியமையாததாகும். சங்க இலக்கியங்களில் காணப்படும் திணைக் கோட்பாட்டை அடிப்படையாகக் கொண்டு ஐந்திணைகளில் ஏற்படுகின்ற, ஏற்பட்ட பல்வேறு சமூகச் சூழல்களைச் சுட்டிக்காட்டி அதனடிப்படையில் எழுந்த அரசு உருவாக்கத்தை விளக்கி உள்ளனர். ''இத்திணை மரபுகளின் அடிப்படையில் வளமான பகுதியான மருத நிலப் பகுதியிலேயே முதன் முதலில் அரசு உருவாகியிருக்க வேண்டும் என்ற கருத்திணை முன் மொழிகின்றனர். இது உழவுத் தொழிலைப் பெரிதும் நம்பி அதன் மூலம் ஏற்பட்ட உபரி உற்பத்திப் பெருக்கத்தை மனத்தில் கொண்டு இந்நிலைபாட்டை ஆய்வாளர்கள் எடுத்திருக்க வேண்டும். வளமான பகுதிகளிலயே அரசு உருவாகியிருக்க முடியும் என்ற கருதுகோளின் அடிப்படையில் எழுந்த முடிவாகும்.''[38] குழு வாழ்விலிருந்து வர்க்க நிலைக்கு மாறிச் செல்லும் நிகழ்வுப் போக்கைச் சங்க இலக்கியங்கள் சிறப்பான முறையில் பதிவு செய்துள்ளது.

மருதமே திணைகளில் விரைவாக வளர்ச்சியுற்ற நிலம் என்பதும், அதிக செல்வ உடமை பெற்ற நிலம் என்பதும் வேந்தராட்சி பெற்ற இடம் என்பதும் பல ஆராய்ச்சியாளர்களால் கூறப்பட்டுள்ளது.''[39] (பெ.மாதையன், கா. சிவதம்பி) ஆற்றங்கரையோரமாகவே கிரேக்கம், மெசபடோமியா, எகிப்து, சிந்து போன்ற நாகரிகங்கள் தோன்றி வளர்ச்சி பெற்றது போல தமிழர் நாகரிகம் சிந்துவரை பரவி காவிரியாற்றின் கரையில் வளமுடன் தோன்றியுள்ளமை சங்கப்பாடல்கள் புலப்படுத்துகின்றன.

''உடமைச் சமுதாயமாக விளங்கிய மருத நிலம் ஆட்சி உச்ச பெற்றிருந்தது. காவிரி, பேரியாறு, வைகைக் கரையோரங்கள் என்பன பண்டைத் தலைநகரங்களைக் கொண்டிருந்தன. சோழநாடு, சேரநாடு, பாண்டியநாடு, என்பன இவற்றின் வளத்தால் உயர்ந்தன. மூவேந்தர்

*ஆட்சிக்கு இவை வழிவகுத்தன, ஆற்றங்கரைகளுக்கு அப்பால் அமைந்த குறிஞ்சி, பாலை, நிலங்களுடன் ஆற்றங்கரைகளை ஒப்பிடும் போது அவை வளர்ச்சி பெற்றது என்பது முன்னரும் அவதானிக்கப்பட்டது.''[40] ஏரிகள் அல்லது ஆறுகளைச் சார்ந்திருந்தது மருத நிலம்.*

*நில வளமும் நீர் வளமும் உள்ள மருத நிலத்தில் மண் வளம் மிக்க வயல்களில் நெல்லைப் பயிரிட்டார்கள். எருதுகளையும், எருமைகளையும் பூட்டிய ஏர்களினால் நிலத்தை உழுது, பண்படுத்தி எருவிட்டு விதை விதைத்து நீர் பாய்ச்சி நெல்லை விளைத்தார்கள். கரும்பையும் பயிரிட்டார்கள். காய்கறி முதலான உணவுப் பொருட்களையும் பயிரிட்டு உணவுக்கு தட்டுப்பாடில்லாமல் வாழ்ந்தப் படியினால் மருத நிலத்து மக்களின் வாழ்க்கை மற்ற நிலத்து மக்கள் வாழ்க்கையை விட பல மடங்கு உயர்ந்திருந்தது. வாழ்க்கையில் அதிகம் கவலைப்படாமல் இருந்த இவர்களுக்கு ஓய்வும் கிடைத்தது. ஆகவே இவர்கள் நாகரிகமும் பண்பாடும் பெற்று வாழ வாய்ப்பிருந்தது.*

**ஆற்றங்கரை நாகரிகங்கள்**

*உலகிலுள்ள நாகரிகங்கள் பெரும்பாலும் ஆற்றங்கரைகளிலேயே தோன்றியுள்ளன. அவை,*

1. ***கிரேக்கம் (பால்கன்)***
2. ***சீனா நாகரிகம் (ஹீவாங்கோ, யாங்சி நதி)***
3. ***ரோம் (இத்தாலி)***
4. ***மெசபடோமியா – யூப்ரடீஸ், டைகிரீஸ் நதி***
5. ***எகிப்து – நைல் நதி***
6. ***சிந்து – ஹரப்பா***

*மேற்கண்ட நாகரிகங்கள் அனைத்தும் ஆற்றங்கரையிலே தோன்றியுள்ளமை புலனாகிறது. பழங்கால நாகரிகங்கள் யாவும் ஆற்றங்கரைகளில் தோன்ற காரணம் பின்வருமாறு.*

## திராவிட நாகரிகம்

*உலக நாடுகளில் பழைமையான நாகரிகங்களுள் இந்திய நாகரிகமும் ஒன்று என்பது மொகஞ்சதாரோ – ஹரப்பா அகழ்வாய்வுக்குப் பிறகு நிறுவப்பட்டுள்ளது. கி.மு.3000 ஆண்டுகளுக்கு முன்னரே பரந்து விரிந்திருந்த இந்திய நாகரிகம் உலக நாகரிகங்கள் அனைத்துக்கும் தாயாகவும் வழி காட்டியாகவும் விளங்கி இருக்கிறது. இவ்வாறு இந்தியா முழுவதும் பரந்து விரிந்திருந்த அப்பழம்பெரும் நாகரிகத்தையே திராவிட நாகரிகம் என கருதுகின்றனர்.*

*“திராவிடர் பேசிய மொழியே திராவிட மொழியாகும். திராவிடம் என்னும் சொல் திராவிடநாடு என்னும் பொருளைத்தருவது. திராவிட மொழிகள், திராவிட இனம், திராவிட நாகரிகம் என்னும் சொற்றொடர்களுள் திராவிடம் என்னும் சொல் பெயரடையாக வந்துள்ளது எனக் கால்டுவெல், தமது திராவிடமொழிகளின் ஒப்பிலக்கணம் என்னும் நூலில் குறிப்பிட்டுள்ளார்.’’[41] குமரிலபட்டர் திராவிடம் என்னும் சொல்லை முதன்முதலில் உருவாக்கினார். கால்டுவெல் அதனைப் பயன்பாட்டுக்கு கொண்டு வந்தார்.*

*“மொழியில் அறிஞர் தொடக்கக் காலத்தில் தமிழையும் அதன் கிளைமொழிகளான மலையாளம், தெலுங்கு, கன்னடம் ஆகிய தென்னிந்திய மொழிகளையும் தமிளியன் (Tamilian) அல்லது தமுலிக் (Tamulic) என்று வழங்கினர். அவற்றுள் தமிழ் மிகுந்த சிறப்பும் பழைமையும் வாய்ந்தது. எனினும் பல திராவிட மொழிகளுள் தமிழையும் ஒன்றாகக் கொண்டனர். ஆகவே இவ்வின மொழிகள் அனைத்தையும் இணைத்துத் திராவிட என்னும் சொல்லைக் கையாண்டதாகக் கால்டுவெல் கூறி உள்ளார். திராவிட என்னும் சொல்லே தமிழ் என்னும் சொல்லிருந்து உருவானது. தமிழ் திரமிள திரவிட திராவிட என உருவாயிற்று எனக் கூறுகிறார் ஏ.ராஸ்பாதிரியார்.’’[42]*

திராவிட மொழி என்றாலே தமிழ் மொழியையே குறிக்கும். திராவிட மொழிகளுள் மிகவும் தொன்மையான, பண்பட்ட மொழி தமிழே, திராவிட மொழிகள் அனைத்துக்கும் மூலமான மொழியை, முன்னைத் திராவிட மொழி, மூலத் திராவிடமொழி, தொன்மைத் திராவிட மொழி எனப் பல்வேறு சொற்களால் குறிப்பர். அம்மூல மொழியை தமிழ் மொழி ஏனைய திராவிட மொழிகள் தமிழிலிருந்து தோன்றி வளர்ந்தவை. எண்பது விழுக்காடு அளவுக்குத் திராவிட மொழிக் கூறுகளைக் கொண்டுள்ள ஒரே திராவிடமொழி தமிழ் இத்தகு தலைமைச் சிறப்புக்குரிய மொழி தமிழாகும் என மொழியியல் அறிஞர்கள் குறிப்பிடுகின்றனர்.

**முதல் மக்களினம்**

முதல் முதலில் இந்தப் பரந்த நிலவுலகில் ஒரு பகுதியில் மக்கள் தோன்றி வளர்ந்தனர். அவர்கள் பேசிய மொழியே முதல் மொழி. அந்த மக்கள் பின்னர்ப் பல்வேறு இடங்களில் குடியேறினர். குடியேறிய மக்கள் அவ்வவ்விடங்களில் அந்த மொழியைப் பல்வேறு வகையாகத் திரித்துப் பேசினர். அதனால் தான் மொழிகள் பலவாக ஏற்பட்டன. நாளடைவில் அந்த மொழிகளில் ஒவ்வொன்றும் பல்வேறு கிளைமொழிகளாகப் பிரிந்து வளர்ந்தன. அதனால் தான் மொழியினங்கள் என்றும், ஒவ்வொரு இனத்திலும் இன மொழிகள் என்றும் பலவாக உள்ளன.

அவ்வாறு மக்கள் முதல் முதலில் தோன்றிய நிலப்பகுதியே லெமூரியா என்பர். அது இந்தியக் கடலில் இருந்து அழிந்தது என்றும் அழிந்தபின் மக்கள் பல்வேறு திக்குகளில் சிதறி ஆங்காங்கே குடியேறினர் என்றும், ஐரோப்பாவில் சேர்ந்தவர் ஐரோப்பியர் என்றும், ஆப்பிரிக்காவில் சிதறிச் சென்றவர் ஆப்ரிக்கா என்றும், இந்தியாவைச் சேர்ந்தவர் இந்தியர் என்றும், ஜாவா சுமத்தா வழியாகச் சீனா முதலிய பகுதிகளுக்குச் சென்றவர் மங்கோலியர் என்றும் இவ்வாறு பலவகை மக்களாக வாழ நேரிட்டது என்றும் கூறுவர். அந்தந்த நாட்டுத் தட்ப வெப்ப நிலையாலும் உணவு வகையாலும் நிறமும் உடலமைப்பும் வேறுபடலாயின என்பர்.

*லெமூரியா என்று கூறப்படும் அந்த நிலப்பரப்பே குமரிக்கண்டம் என்று தமிழிலக்கியத்தால் அறியப்படும் பகுதியாகும். அங்கே குமரிமலை என்ற பெருமலை இருந்தது என்றும், பஃறுளியாறு என்றும் ஆறு ஓடியது என்றும் பழந்தமிழ்ப் பாட்டுக்களில் சிலம்பு புலப்படுத்துகிறது. இதனை,*

> **“வடிவேல் எறிந்த வான்பகை பொறாது**
> ***பஃறுளி யாற்றுடன் பன்மலை அடுக்கத்துக்***
> **குமரிக் கோடும் கொடுங்கடல் கொள்ள ’’[43]**

*என்ற வரிகள், மலையும் ஆறும் இருந்த பழங்காலம், இமயமலையும் கங்கையாறும் தோன்றாமல் இந்தியாவின் வடகோடி கடற்பகுதியாக இருந்த காலமாகும். “அத்தகைய குமரிக்கண்டத்தில் முதல் முதலில் மக்கள் இருந்தனர் என்றும், அவர்கள் பேசிய மொழியே உலகமுதல் மொழி என்றும் கொண்டால் பழந்தமிழரே முதலில் தோன்றிய மக்கள் என்றும் பழந்தமிழ் முதலில் பேசப்பட்ட மொழி என்றும் உலகில் ஆங்கிலேயர் முதலான ஐரோப்பியரும் மற்ற இனத்தவர்களும் பழந்தமிழரின் வழித் தோன்றியவர்களே என்றும் மொஹஞ்சதாரோவில் வளர்ந்த பழந்தமிழ் நாகரிகமே மத்தியதரைக் கடலில் அடுத்த பகுதிகளில் எகிப்து நாகரிகம், பாபிலோனியநாகரிகம் கிரேக்க நாகரிகம் முதலியன வளரக் காரணமாக இருந்தது. என்றும் கருத இடம் உள்ளது.’’[44]*

*தென்னிந்திய மலைகளிலும் மேடுகளிலும் உள்ள கற்கள் உலகிலேயே மிகப் பழைய கற்களாய்க் கோடிக்கணக்கான ஆண்டுகட்டு முற்பட்டனவாய் இருந்தவை ஆய்ந்தறிந்து வியப்புறுகின்றனர். தென்னிந்திய நிலப்பகுதி, ஒரு புறம் மடகாஸ்கர் தென் ஆப்பிரிக்கா தென் அமெரிக்கா முதலியவற்றோடும் சேர்ந்ததாய்ப் பெரிய நிலப்பரப்பாய் ஒரு காலத்தில் விளங்கியிருந்தது, என்பதற்கு நிலநூல் பல சான்றுகள் காட்டுகின்றது.*

*“இந்தியாவிற்குள்ளும், வட இந்தியாவில் காணப்படுவனபோல் எரிமலைக் குழம்புகள் எழுந்து படிந்தமைக்கோ, பூகம்பங்கள் ஏற்பட்டமைக்கோ அறிகுறிகள் ஒன்றும் தென்னிந்தியாவில் காணப்படவில்லை. ஆதலின், உலகம் தோன்றிய காலத்தில் குழம்பாக இருந்தமண் முதலில் குளிர்ந்து அமைந்த நிலப்பகுதி தென்னிந்தியாவே என்றும் இங்கு தான் மனிதன் முதலில் தோன்றியிருக்கக் கூடும் என்று ஆராய்ச்சி புலப்படுகின்றது.”*[45] *இவ்வாறாக மனித சமூக உறவுகள் திராவிடரொடான தமிழகமே ஊற்றுல்களாக இருந்துள்ளது என்பதை சங்க இலக்கியம் புலப்படுத்துகின்றன.*

## சங்க காலம்

*தமிழகம் மிகத் தொன்மை வாய்ந்த வரலாற்றைக் கொண்டதாகும். பண்டையத் தமிழகம் சேர, சோழ, பாண்டியர் ஆட்சி செய்துள்ளனர். சங்க காலம் என்பது கி.மு. 300 முதல் கி.பி. 300 வரை நிலவியது என்று வரலாற்று அறிஞர்கள் கூறுகின்றனர். இக்காலத்திலிருந்த பல சிறிய அரசுகளில் சில வலிமை பெற்று, பெரும் அரசுகளாக உருவாகின. வடக்கில் வேங்கடம் என்கிற திருப்பதி முதல் தெற்கில் கன்னியாகுமரி வரையிலும் மற்றும் மேற்கில் அரபிக்கடல் வரையிலும் கிழக்கில் வங்காள விரிகுடா வரையிலும் சங்க காலத் தமிழகம் பரவியிருந்தது. அசோகரது கல்வெட்டுகள், உத்திர மேரூர், ஆதிச்சநல்லூர், கல்வெட்டுக்கள், சாணக்கியரின் அர்த்த சாஸ்திரம், ரோமனிய நாணயங்கள் ஆகியன சங்க காலத்தைப் பற்றி அறிய உதவும் சான்றுகளாகும்.*

## முச்சங்கம்

*தமிழகத்தில் மூன்று சங்கங்கள் வெவ்வேறு காலக்கட்டங்களில் இருந்தன. முதற்சங்கம் இன்று கடலுள் மூழ்கியுள்ள குமரிக் கண்டத்தில் இருந்த தென்மதுரை ஆகும். இது பஃறுளி ஆற்றங்கரையில் இருந்தது. காய்சின வழுதி முதல் கடுங்கோன் வரை 89 அரசர்கள் ஆதரித்தனர். இச்சங்கத்தில் பாடல் இயற்றிய அரசர்கள் 7 பேர் ஆவார். இதன் காலம் 4440 ஆண்டுகள் இச்சங்கத்தில் இருந்த புலவர்களின் எண்ணிக்கை 549 ஆகும். 4449 பேர் பாடிய பாக்கள் இடம் பெற்றுள்ளன.*

முடத்திருமாறன் முதல் உக்கிரப் பெருவழுதி வரை 49 பேர் ஆதரித்த அரசர்களாவர். இவற்றில் 3 பேர் பாடிய மன்னர்களாவர். இதன் காலம் 1850 ஆண்டுகளாகும். இவற்றில் புலவர்கள் 49 பேர் இருந்தனர். 449 பேர் பாடிய புலவர்களாவர். இச்சங்கள் இருந்துள்ளதை உணர்த்தும் அகச்சான்றுகளாக தொல்காப்பியம் பாயிரம் வழி அறியலாம். இதனை,

**"நிலந்தரு திருவின் பாண்டியன் அவையத்து''**

என்று தொல்காப்பியம் குறிப்பிடுகின்றது மருதத்திணைப் பாடலிலும் இதனை,

**"செது மொழி சீத்த செவி செறுவாக**
**முதுமொழி நீராப் புலன் நா உழவர்**
**புதுமொழி கூட்டுண்ணும் புரிசைசூழ் மதுரை''**[46]

என சங்கம் பற்றி குறிக்கிறது. "புலன் நா உழவர்கள்'' என புலவர்களைக் செப்புகின்றது. இங்கு புதுமொழிகளை கூட்டுண்ணும் புரிசை சூழ் மதுரையில் அமைந்திருந்ததைக் காணலாம். இவைகள் மட்டுமல்லாது மகாவம்சம், ராஜாவளி ராஜரத்னாகிரி ஆகிய வெளிநாட்டு நூல்களும் குறிப்பிடுகின்றது.

## மருதம்

உலகத்திலே எல்லாத் தேசங்களிலும் மக்கள் நாகரிகம் பெற்ற இடம் ஆற்றங்கரைகளிலும் ஏரிக்கரைகளிலுந்தான் என்று வரலாறு கூறுகிறது. இது உண்மையே தமிழ் நாட்டிலும் மக்கள் நாகரிகம் பெற்று வளர்ந்த இடம் ஆற்றங்கரைகளும் ஏரிக்கரைகளும் ஆகவே மருத நிலத்திலே தான் தமிழருடைய நாகரிகமும் பண்பாடும் வளம் பெற்று வளர்ந்தன. கைத்தொழில்களும் கல்வியும் கலைகளும் வாணிகமும் செல்வமும் அரசியலும் அமைதியான வாழ்க்கையும் மருத நிலங்களிலே செம்மையாகச் செழித்து வளர்ந்தன.

மருத நிலத்து மக்கள் கட்டடங்களும் மாளிகைகளையும் அரண்மனைகளையும் அமைத்துக் கொண்டு நாகரிமாகவும் நன்றாகவும் வாழ்ந்தார்கள்.

“தமிழ்ப் பிறப்பிடம் என்பது சுதந்திரமான பண்பாட்டு கலாச்சாரம் திராவிடனின் பிறப்பிடம் ஆகும். பழைய கலாச்சாரம் கிழக்கு கடற்கரை நோக்கி புலம் பெயர்ந்தவர்கள் தென்னிந்தியர் பேசும் ஒரே மொழி திராவிடம் என் தாழ்ந்த ஆய்வறிக்கை கலாச்சாரம் என்பது கடற்கரையால் சூழப்பட்ட மத்திய தரைக்கடல் மற்றும் கடல் பகுதியில் பலம் பொருந்திய காவேரி, தாமிரபரணியில் பிறந்தது என வி.ஆர்.ராமச்சந்திர தீட்சிதர் கூறுகிறார்.’’[47]

சமுதாயம் சித்தரிக்கும் சமூக உறவுகள் சங்க காலத்தில் இனக் குழுவாக இருந்தன. ஐவகை நில மக்களுக்கும் ஒருவருக்கொருவர் அதாவது குறிஞ்சி, முல்லை, நெய்தல், மருதம், பாலை, நிலத்தில் வாழ்ந்த மக்களிடையே சமுதாய உறவுகள் ஏற்பட்டிருந்தது. ஒரு குறிப்பிட்ட காலத்தில் குறிப்பிட்ட இடத்தில் பிறந்த மனிதர்களின் சிந்தனைப் போக்குகளும் சமுதாய உறவுகளும் எப்படியெல்லாம் இருந்தன என்பதை ஏனையத் துறைகளை விட கால படைப்புகளே தெளிவுறுத்துகின்றன.

“இனக்குழு சமூகம் திணை வாழ்வை அடிப்படையாகக் கொண்டது. சங்க கால பாணச் சமூகத்தின் கல்லறைகள் மேல்தான் புலமைச் சமூகம் சங்க இலக்கியமாகக் கட்டமைக்கப்படுகிறது. பாணர்களின் பாடல்களை மிக விழிப்பாகத் தவிர்த்து விட்டது. என்னும் கருத்தை பிரபஞ்சன் உயிர்மை இதழில் கட்டுரையாக்கியுள்ளார்.’’[48]

இக்கருத்து மாறாக உள்ளது. களவு, என்னும் வாழ்வில் அடித்தளம் அமைத்தவர்கள் பாணர்களே அவர்கள் சமூக உறவுநிலையில் தனித்த இடத்தில் வைத்து போற்றத்தவர்கள்.

அதிகார வர்க்க நிலையில் அடித்தளத்திற்கு தள்ளப்பட்டாலும், அவர்களின் பாடல்களையும் மக்களையும் புறக்கணிக்காது அவர்களுக்காவே சிறுபாணாற்றுப்படை, பெரும்பாணாற்றுப்படை என்னும் இலக்கிய வடிவங்கள் வரமலில்லை. அவர்கள் இயற்றிய பாடல்கள் அனைத்தும் வாய்மொழியாக அதாவது வாய்ப்பாடாக நாட்டார் வழக்காற்றியலாக அமைந்திருக்கலாம். அவர்களும் இனக்குழு கலைஞர்களாக வாழ்ந்திருக்கலாம். அவர்கள் மருதத்திணையுடன் நெருங்கிய தொடர்புடையவர்களாக இருந்தனர் என்பது பின்னால் விளக்கப்பட்டுள்ளது.

## தொகுப்புரை

- ‘சமூகவியலும் இலக்கியம்’ என்ற இவ்வியலில் திரட்டப்பட்ட தகவல்களின் அடிப்படையில் இதுகாறும் கூறியவற்றிலிருந்து தொகுப்புரையாக விளக்கப்படுகிறது.

- இலக்கியமும் சமூகமும் பிரிக்க முடியாத தகவமைப்பினைப் பெற்றுள்ளது. ஒன்றோடு ஒன்று நெருங்கிய தொடர்புடையனவாக இருக்கின்றன என்பதை விளக்கி சமூகத்தில் இலக்கிய உருவாக்கம் சமூக பின்புலத்தைச் சார்ந்து இயங்கி வருவது அறிமுகப்படுத்தப் பட்டுள்ளது.

- சமூகவியல் அறிஞர்களின் கொள்கை ஆராய்ந்து அளிக்கப் பட்டுள்ளது. தொடக்க நிலையில் சமூகம் என்பது உறவுகளால் பின்னப்பட்டுள்ளது. உறவுகளுக்கு அடிப்படையான உயிர்களின் தோற்றக் கொள்கையில் உலக அறிஞர்களின் கருத்தாக்கங்களை விட தொல்காப்பியரின் உயிரி தோற்றக் கொள்கை மேம்பாட்டுடன் திகழ்ந்துள்ளது.

- இலக்கிய உருவாக்கத்தில் சமூகத்தின் பங்களிப்பு என்னும் நிலையில் தொல்காப்பியர், சங்ககாலம், சங்கம் மருவிய காலம், நீதிகாலம், காப்பிய காலம், பக்திகாலம், சிற்றிலக்கிய காலம், இருபதாம் நூற்றாண்டு இலக்கிய உருவங்களான புதுக்கவிதை, உரைநடை, சிறுகதை, நாவல், நாடகம் ஆகியவற்றில் சமூகப் பின்புலங்கள் மூலம் உருவாக்கம் பெற்ற இலக்கிய வடிவங்கள் அறிமுகப்படுத்தப் பட்டுள்ளன.

- இலக்கியங்களின் மூவகை நிலைப்பாட்டை விளக்கி, அவை சங்க இலக்கியத்திற்குப் பொருந்தும் விதத்தில் விளக்கப்பட்டுள்ளது.

- இலக்கியங்களில் வர்க்க உறவுகளை ஆராய்ந்து அவற்றின் மூலம் ஏற்பட்ட சமுதாய மாற்றங்கள் கண்டு தெளியப்பட்டுள்ளன.

- சங்க இலக்கிய மருதத்திணைப் பாடல்களில் சமூக உறவுகள் என்னும் ஆய்வுப் பொருளை மையமிட்டு சங்ககால சங்கங்களும் அவற்றில் தோன்றிய தொகை நூல் தொகுப்புகளும் அறியப்பட்டுள்ளன.

- மருதநிலத்தின் தோற்றமும் அதன் முந்தையகால நிலைப்பாட்டையும், அவை பஃறுளி ஆற்றுடன் இருந்துள்ள இடத்தினை மருத நிலமாகக் கருத்தில்கொண்டு விளக்கப்பட்டுள்ளன.

- உலக மக்களினம் தோற்றம் ஆற்றங்கரையில் தோன்றிய விதமும், அவர்கள் திராவிடர்களாக இருக்க வாய்ப்புள்ளமையும் அறியப் பட்டுள்ளன.

# மேற்கோள்கள்

1. தொல்காப்பியம், மரபியல், நூ..35
2. சுப்பையா. அரங்க., சமூகவியல் அறிஞர்களும் கோட்பாடுகளும், ப.11
3. ஐ. கிருஷ்ணமூர்த்தி சமூகவியல் கோட்பாடுகள், ப.32
4. மேலது, ப.42
5. மேலது, ப.13
6. மேலது, ப.64
7. மேலது, ப.65
8. மேலது, ப.100
9. குணசேகரன். அ., தமிழ் ஆய்வு முறைமையியல், ப.120
10. கைலாசபதி. க., இலக்கியமும் சமூகவியலும், ப.1
11. நடராஜன், தி.சு., திறனாய்வுக்கலை, ப,.54
12. குணசேகரன், அ., தமிழ் ஆய்வு முறையியல், ப.127
13. நியூசெஞ்சுரியின் சிறுநூல் வரிசை, வர்க்கங்களும் வர்க்க உறவுகளும் ப.14
14. கழக வெளியீடு, ஐங்குறுநூறு : (புலவி.49)
15. நியூசெஞ்சுரி, சிறுநூல்வரிசை., வர்க்கங்களும் வர்க்க உறவுகளும் ப.10
16. மேலது., ப.10
17. தொல்காப்பியம் (பொருளதிகாரம்), கற்.நூ.ப.எ.13
18. நியூசெஞ்சுரி, சிறுநூல்வரிசை., வர்க்கங்களும் வர்க்க உறவுகளும் ப.9
19. நன்னூல். பதவியல், நூ.141
20. மேலது., அகத்திணை, நூ.58
21. நன்னூல் பெயரியல், நூ.273
22. தொல்காப்பியம், (பொருளதிகாரம்) செய்யுளியல், நூ.384
23. அலிபாவா., (ப.ஆ), செம்மொழித் தமிழ், ப.102
24. தொல்காப்பியம் (பொருள்) அகத்.57
25. அலிபாவா., (ப.ஆ), செம்மொழித் தமிழ், ப.161
26. மு. வரதராசன்., பழந்தமிழ், இலக்கியத்தில் இயற்கை, ப.161
27. தமிழண்ணல், புதிய நோக்கில் தமிழிலக்கிய வரலாறு, ப.151
28. அரவிந்தன். மு.வை., உரையாசிரியர்கள், ப.154
29. தொல்காப்பியம், (பொருள்.) செய்யுளியல், நூ.237

30. காசிராசன். ரா., காப்பியத் தோற்றமும் வளர்ச்சியும், பக்.24

31. மேலது., ப.78

32. சுப்ரமணியன். ச.வே., தமிழலக்கிய வரலாறு, ப.146

33. தொல் (பொருள்). புறத்.நூ.83

34. மேலது., நூ.82

35. மேலது., நூ.88

36. ஜெயராமன். ந.வீ., சிற்றிலக்கிய செல்வம், ப.27

37. பாரதியார், சீட்டுக்கவி

38. ராஜன்.கா., தொல்லியல் நோக்கில் சங்க காலம், ப.5

39. அம்மன்கிளி முருகதாஸ், சங்க கவிதையாக்க மரபும் மாற்றமும், ப.282

40. மேலது., ப.282

41. கோவிந்தன்.கா., ரத்னம் (தமிழாக்கம்), திராவிடமொழி ஒப்பிலக்கணம், ப.2

42. மு. வரதராசன், மொழிவரலாறு, ப.324

43. சிலம்பு. காடுகாண், 18-20 அடி

44. மு. வரதராசன், மொழிவரலாறு, ப.319

45. மேலது., ப.320

46. கலித்தொகை, மரு.3அடி (4-5)

47. V.R Ramachandra Dikshitar says. ''The Thamils were The Original in habitants of the Land. who had evoluedan Independent Culture of their own which is generally known as Dravidian. Further he States, the ant ours of the early cultures in the East Mediterranean were emigrants from South India Speaking the Dravidian dialects. The Language migrated and with it the peoples who spoke that Language. So my humble thesis is that civilization of the future was born not on the shores of the Mediterranean but on the Coasts of the India Peninsula and on the Banks of its mighty vivers, the Kaveri Tamraparni, the periyar and Amaravati, not to Speake of the Krishna, Godavari and Narmad- A.Ramasamy A History of Ancient Tamil Civilization:41

48. உயிர்மை (இதழ் 84) ஆகஸ்ட், 2010 பக்.36

# இயல்–2

## திணை இலக்கியமும் அகப்புற வெளிப்பாடும்

*சங்க இலக்கியம் திணை இலக்கியமாகும். 'திணை' நிலத்தை அடிப்படையாக கொண்டது. தொல்காப்பியர் காலத்திற்கு முன்பே மரபுவழிச் செய்யுள் ஓங்கி இருந்ததோடு, புலவர் பலராலும் கையாளப்பட்டிருக்கிறது. ஒரு காலத்தில் இத்திணைப்பாடல்கள் அரசர்களின் அவைகளிலும் பொது மக்கள் கூட்டங்களிலும் விழாக்காலங்களின் போதும் சடங்கு நிகழ்வுகளின் போதும், ஆங்காங்குத் திரிந்து கொண்டிருந்த பாணர்களாலும் கூத்தர்கள் விறலியர்களாலும் பாடல்களாகவும், ஆடல்களாகவும், நிகழ்த்தப்பட்டு வந்தன. பின்னர் இயற்கையையும், காலச் சூழலையும் பின்னனியாகக் கொண்டு மனித வாழ்வுடன் இயைபுபடப் புனையப்பட்டதே திணை இலக்கியமாக உருவாகிற்று.*

*இவற்றின் பாடுபொருளாக அகமும், புறமும் என இலக்கிய வகைமையாகியது. இவ்வாறு உருவாக்கம் பெற்ற திணை இலக்கியங்கள் எல்லா நிலத்திற்கும் அந்தந்தச் சூழலுகேற்ற வண்ணம் உருவாகியதையும், அவை புலவர், தலைவன், தலைவி, தோழி, பாங்கன், சுற்றத்தார் ஆகியோரின் கூற்றுகளாகியதையும், இவ்வியல் முன்னெடுத்துச் செல்கிறது. ஆய்வுப் பொருளான மருதத்திணைப்பாடல்களில் அமைவிடப் பாங்கினைச் சுட்டி, மருத நிலத்தில் பிற திணை மாந்தர்களின் உறவும், நிலங்களுக்கு இடையேயான உறவுகளையும் விளக்குகிறது. இவற்றில் மருத நிலமும், முல்லை நிலமும், மருதமும் நெய்தலும் உறவுடையனவாக இருந்துள்ளதைக் காணமுடிகின்றது.*

அகமும், புறமும் என்னும் உத்தியைக் கருத்தில் கொண்டு, அகத்தில் புறஉறவுகளும், புறத்தில் அகஉறவுகளும் விளக்கப் பட்டுள்ளன. இறுதியில் ஒவ்வொரு புறப்பாடல்களின் திணைத் துறைகளை நீக்கினால் அவையும் அகப்பாடல் தன்மையுடையதையும் எடுத்துக்காட்டி, இவையே பிற்கால காப்பிய வகை இலக்கிய உருவாக்கம் பெற வழிசெய்த முறையும் ஆராயப்பட்டுள்ளது.

## சங்க இலக்கியத்தில் அகத்திணை நூல் பதிப்பு

பழமை வாய்ந்த சங்க இலக்கியத்தை முன்னையோர் அகத்திணை, புறத்திணை என இருவகை படுத்தியுள்ளனர். "சங்கப் பாடல்களுள் ஏறத்தாழ முக்கால் பகுதி அகத்திணைப் பாடல்கள் 2381 பாடல்களுள் 1862 பாடல்கள் அகப்பாடல்கள் சங்கப் புலவர்களின் எண்ணிக்கை 437 அதில் அகப்பாடல்கள் பாடியோர் 368 எனவே சங்க இலக்கியப் பாடல்களுள் முதன்மையாகத் திகழ்வது அகத்திணையாகும்.

- சங்க நூல்களுள் கலித்தொகை 1887-ம் ஆண்டில் முதன் முதலாக அச்சிடப்பட்டது. சி.வை.தாமோதரம் பிள்ளை பதிப்பித்தார்.
- உ.வே.சா அவர்கள் ஐங்குறுநூறு நூலை 1903-ல் பதிப்பித்தார்.
- சௌரிப்பெருமாள் அரங்கனார் அவர்கள் குறுந்தொகை நூலினை 1915-ல் பதிப்பித்தார்.
- பின்னத்தூர் நாராயணசாமி அய்யர் அவர்கள் நற்றிணை நூலினை 1915-ல் பதிப்பித்தார்.
- ரா.இராகவையங்கார் அவர்கள் அகநானூறு நூலினை 1918-ல் பதிப்பித்தார்.

சங்கப்பாடல்களை சந்திப் பிரித்து பதிப்பிக்கும் முறையினை பேராசிரியர் வையாபுரிப் பிள்ளை அவர்கள் அறிமுகம் செய்தார். இவர் "சங்க இலக்கியம் பாட்டும், தொகையும் எனும் சமாஜப் பதிப்பு 1940-ல் இலக்கியப் பதிப்பு வரலாற்றில் திருப்பு முனையாக அமைந்தது.''[1]

## சங்க நூல்களின் திணைநிலையமைப்பு

*விரிப்பின்பெருகும், விரிவஞ்சி விடுத்தாம், வல்லார்வாய்க் கேட்டுணர்க, வந்தவழிக் காண்க என இடையில் எழுதப்பட்டுள்ளது. நூல்களுக்கு உரை எழுதாமல் செவிவழி செய்தியாகவே அமைந்தது. நாளடைவில் எழுத்துருவம் பெற்றன. இறையனார் அகப்பொருள் உரை பல தலைமுறையாக வாய்மொழியாகவே வந்தது. உரைகளின் விளக்கம் கருத்தாழம் கொண்டு இருப்பதால் விளக்கவுரை மலர்ந்தது.*

*எட்டுத்தொகை நூல்களில் ஒவ்வொரு தொகுப்பும் ஒவ்வொரு திணைநிலையமைப்பை உடையனவாகும். பாத்திரங்களின் கூற்றாகவே காணப்படுகின்றன. பல்வேறு கால நிலைகளில் தொகுக்கப்பட்டனவாகும். தொல்காப்பியரின் திணை நிலைக் கொள்கையின் அடிப்படையில் தொகுக்கப்பட்டனவாகும். ஆய்விற்குட்படும் திணை நிலையின் மருதத்திணைப் பாடல்கள் ஒவ்வொரு தொகுப்பிலும் காணப்படுகின்றன. ஐங்குறுநூறு தொகுப்பில் மருத்திணைப்பாடல் முதலில் வைத்துத் தொகுக்கப்பட்டன. ஏனைய அகத்திணைத் தொகுப்பில் ஒவ்வொரு சிறுமாறுபாட்டுடன் அமைக்கப் பட்டுள்ளன. அவற்றின் அடிப்படையான காரணங்களையும் அமைந்துள்ள நிலைப்பாட்டிளையும் ஆராய முற்படலாம்.*

## சங்கப் பனுவல்

*தமிழின் பழம்பெரும் பனுவல் சங்க இலக்கியமாகும். ஒரு நாட்டின் சிறப்பிற்கு நற்சான்றாய் நின்று திகழ்வன அந்த நாட்டின்கண் தோன்றிய இலக்கியங்களே என்பார்கள். ஐயமில்லை. இலக்கியங்கள் பல்லாயிரம் ஆண்டுகளாக வாழ்ந்து வருகின்ற மக்கட் கூட்டத்தின் பண்பாட்டினில் தோன்றுவனவாகும். நன்கு பண்பட்ட சமூகத்தினர் இவர் என ஒரு சமூகத்தை அயல்நாட்டினர் அவர்தம் பழைய இலக்கியங்களைக் கண்டே பாராட்டுதல் கூடும். ஒரு சமூகத்தின் பண்பாடும் பழம் பெருமையும் அவர்தம் இலக்கியங்களின் வாயிலாகவே வரையப்படும். இத்தகைய பெருஞ் சிறப்புடைய சங்கப் பழம் பனுவல்களை பாட்டாகவும், தொகையாகவும், கீழ்க்கணக்காகவும் உளப்படுத்தியுள்ளனர்.*

*சங்கப்பனுவல்களாவன,*

***நற்றிணை நல்லகுறுந் தொகை ஐங்குறு நூறு***
***ஒத்த பதிற்றுப்பத் தோங்கு பரிபாடல்***
***கற்றறிந்தா ரேத்துங் கலியோ டகம் புறமென் று***
***இத்திறத்த எட்டுத் தொகை***

*என வரும் இன்னிசை வெண்பா உணர்த்துகின்றது. இவற்றில் மருதத்திணை ஆய்வுப் பொருளாக இருப்பதால் ஐங்குறுநூற்றில் மருதம் முதலாவதாக இருப்பதால் அவற்றின் திணையமைப்பினை ஆராயலாம்.*

## ஐங்குநூறு திணை நிலையமைப்பு

*கடைச்சங்க காலத்தே திகழ்ந்தோங்கியவர் மூவேந்தர்கள் ஆவார்கள். பழம் பெருங்குடியினராகிய சேரமன்னர் குடியில் கோச்சேரமான் யானைக்கட்சேஎய் மாந்தரஞ்சேரல் இரும்பொறை புகழ்மிக்க முடிவேந்தராவார். இம்மன்னர் தமிழ்ப் புலவர்க்குத் தாய் போன்றவர். தமிழ்ப் புலவரையும் தமிழ் இலக்கியங்களையும் நன்குப் போற்றிப் புகழ்ந்து காத்துவந்தார். இவர்க்குத் தமிழ் இலக்கியங்களில் இன்ப நுதலிய அகப்பொருட் பனுவல்களில் பெரிதும் ஈடுபாடுண்டு, அவற்றின் சுவைத் தேர்ந்த இவர் அவ்வகப்பொருள் மருங்கில் அமைந்த ஐந்து திணைகட்கும் தனித்தனியாக நூறு நூறு செய்யுள்களாக நல்லிசைப் புலவர்களைக் கொண்டு பாடுவித்து அவற்றை ஒரு நூலாக்கித் தமிழ்க்கூறு நல்லுலகத்திற்கு வழங்குதல் வேண்டும் என்று பெரிதும் விரும்பி இருந்தார். தன் கருத்தினை நிறைவேற்றுவதற்குத் தகுதியுடையப் புலத்துறை முற்றியக் கூடலூர் கிழாரிடம் கூறினார். அப்புலவர் கடைச் சங்கப் புலவர்களுள் ஒருவர். அச்சேரமானுக்கும் ஆருயிர் நண்பராவார்.*

*கூடலூர் கிழார் தாமே புலத்துறை முற்றியவராக இருந்து அந்த நற்பணியினைத் தாமே செய்து முடித்திருக்க எண்ணி, ஐந்து திணைகளைப் பாடுதல் வேண்டும் ஒவ்வொரு நல்லிசைப்புலவர் "ஒவ்வொரு திணையாகப் படுவதிலே சிறப்பு ஆற்றல் உடையவராக விருத்தல் இயல்பு இந்நூலைச்*

*சிறந்த நூலாகச் செய்வித்தல் வேண்டும். ஆதலால் ஒவ்வொரு திணையையும் அவ்வத் திணையைப் பாடுவதிலே சிறப்பாற்றலுடைய புலவர் ஐவர்களைத் தேர்ந்தெடுத்து அவர்களைக் கொண்டு தனித்தனியே திணைக்கு நூறு நூறாகப் பாடுவித்தால் அத்தொகை ஒப்பற்றதாகத் திகழும் என்று கருதினர். அவ்வாறே ஐந்து நல்லிசைப் புலவர்களை ஆராய்ந்து கொண்டனர். அவர்பாற் சென்றுத் தங்கருத்தினைக் கூறி அவர்களாலேயே தனித்தனி நூறு நூறு பாடலாகப் பாடுவித்து அவற்றை ஒருங்கே தொகுத்து ஐங்குறுநூறு எனப் பெயரிட்டு மன்னருக்கு வழங்கி மகிழ்வித்தார்''*[2]. *இத்தொகை நூலில் அமைந்த செய்யுள்களைப் பாடிய நல்லிசைப் புலவர்களையும் வைப்பு முறையையும் உணர்த்தும் பழம்பாடல்,*

***மருதமோ ரம்போகி நெய்தல் அம்மூவன்***
***கருது குறிஞ்சி கபிலன் கருதிய***
***பாலையோத லாந்தை பனிமுல்லை பேயனே***
***நூலையோ தைங்குறு நூறு***

*குறிப்பிடுகிறது.*

*"இவ்வாய்வில் ஏன் ஐங்குறுநூறை முதலில் கூறுகிறேன் என்றால், எட்டுத்தொகை நூல்களுடன் இன்பம் நுதலிய நற்றிணையும், குறுந்தொகையும் அகநானூறும் பரிபாடலிற் சில செய்யுளும் தனிநிலைச் செய்யுளும் தனிநிலைச் செய்யுள்களைத் தொகுத்த நூல்களாகும். ஐங்குறுநூறும் கலித்தொகையும் தொடர் நிலைச் செய்யுளாகும் என்னும் பட்சத்தில் ஐங்குறுநூறை முதலில் வைத்துள்ளேன்'' என்று பொ.வே. சோமசுந்தரனார் வைப்புமுறையை விளக்குகிறார்.''*[3]

*தொடர் நிலைச் செய்யுள் என்று பொருளானதால் சொல்லானதால் ஒன்றனோடு ஒன்று தொடர்புடையனவாக அமைவதாகும். இத் தொடர்நிலைச் செய்யுட்கெனச் சிறப்பு விதியாக 'வனப்பு' என்பதை,*

**“அம்மை அழகு தொன்மை தோலே**
**விருந்தே இயைபே புலனே இழைபெனாஅப்**
**பொருந்தக் கூறிய எட்டு’’[4]**

என்னும் தொல்காப்பிய நூற்பா மூலம் அறியமுடிகிறது. தொடர்நிலைச் செய்யுள்கள் இவ்வெட்டனையும் பெற்றிருத்தல் வேண்டும் என்பதில்லை இவ்வெட்டனுள் தத்தமக்கு ஏற்ற வனப்புக்களை ஏற்று வருதல் வேண்டும் என்பதே விதி. இவற்றுள் தொடர்நிலைச் செய்யுள்களுக்கு தலைச் சிறந்த வனப்பு ‘அம்மை’ என்னும் வனப்பாகும். இரண்டாவதாகச் சிறந்தது ‘அழகு’ என்னும் வனப்பாகும். தொடர் நிலைச் செய்யுள்கள் குறுகிய செய்யுள்களாக இருத்தல் வேண்டும் என்பது முன்னிருத்தப்பட்ட கருத்தாகும். அழகென்பது செவ்விய தேர்ந்த சீரிய தீஞ்சொற்களையே கொண்டு செய்யுள் புனைவதால் உண்டாவதாகும்.

இவ்விருவகை வனப்பினும் கலித்தொகை அடி நிமிர்ந்தோடலின் அம்மை என்னும் வனப்பைப் புறக்கணித்து விட்டது. இந்த ஐங்குறுநூறுச் செய்யுள் ஐந்நூறுமே இவ்வம்மை என்னும் தலைச்சிறந்த வனப்பினையும், அழகு என்னும் வனப்பினையும் குறிக்கொண்டு புனையப்பட்டிருத்தல் ஏனைய நூல்களைக் காட்டிலும் தனக்கென தனிச்சிறப்பைப் பெற்றுத் திகழ்கிறது. இவ்வைங்குறு நூற்றின் கண் அமைந்துள்ளச் செய்யுள்களில் சிறு செய்யுள் மூன்றடியில் அமைந்தனவாகும், பெருஞ் செய்யுள்கள் ஆறடியிலுயராதனவாகவுமே அமைந்துள்ளன அம்மை என்றதற்கு அமைதி என்பதுதான் பொருளாகும்.

“இந்நூல் ஐந்து திணைகளையும் தனித்தனி நூறு நூறு பாடல்களால் பாடப்பட்ட ஐந்து நூறுகளின் தொகுதியாகலின் ஐங்குறுநூறு எனக் குறியிடப்பெற்றது. பண்டைத் தமிழ் நூலோர் தொல்காப்பியர் காதலொழுக்கத்தினை ஏழு வகையாகப் பிரித்துக் கூறுவர்.’’[5] அவை கைக்கிளை குறிஞ்சி, முல்லை, பாலை, மருதம், நெய்தல் பெருந்திணையாகும். கைக்கிளை என்பது ஒருதலைக் காதல், பெருந்திணை என்பது பொருந்தாக் காதல் என்பதாகும்.

*ஐந்து திணைகளையும் முறைப்படுத்தோதுங்கால் குறிஞ்சி, முல்லை, பாலை, மருதம், நெய்தல் என்றே சொல்லப்படுகின்றது. எட்டுத்தொகை நூல்களில் இவ்வைப்புமுறை நூல்தோறு மாறுபட்டு காணப்படுகிறது.*

***"மயோன் மேய காடுறை உலகமும்,***
***சேயோன் மேய மைவரை வுலகமும்***
***வேந்தன் மேய தீம்புனல் உலகமும்***
***வருணன் மேய பெருமணலுலகமும்***
***முல்லை குறிஞ்சி மருதம் நெய்தலெனச்***
***சொல்லிய முறையாற் சொல்லவும் படுமே (அகத்.6)***

*என முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தல் என சொல்லிய முறையாற் சொல்லவும் படுமே. இங்கு சொல்லப்படாத வேறு முறையானும் சொல்லவும் படும் என்பது புலப்படுகிறது.''[6] அடுத்து உரிப்பொருளுக்கு இலக்கணம் வகுத்து,*

***புணர்தல் பிரிதல் இருத்தல் இரங்கல்***
***ஊடல் இவற்றின் நிமித்தம் என்றிவை***
***தேருங்காலை திணைக்குரிப் பொருளே***

*என இவற்றில் குறிஞ்சி, பாலை, முல்லை, நெய்தல் மருதம் என வேறுபடுத்திக் கூறுகிறார். "மேற்கூறிய இரண்டு நூற்பாவின் மூலம் பாலை என்ற நிலபாகுபாடு முதற்நூற்பாவில் கூறவில்லை. ஆனால் 2வது நூற்பாவில் 'பிரிதல்' என்ற உரிப்பொருளைச் சுட்டுமிடத்துக் கூறுகிறார். இது ஏனென்றால் பாலை என்னும் நிலம் தனியாக இல்லை. இது எல்லா நிலங்களுக்கும் பொதுவாக ஏற்படும் நில மாறுபாடாகும். ஆனால் ஒழுக்கத் திணையான உரிப்பொருளில் இரண்டவதாகக் பாலை இடம் பெறுவது புணர்ந்த உடன் பிரிதல் என்பது தலைவன் தலைவியின் ஒழுக்க நிலை பிரிதலை இரண்டாவதாகக் கூறியுள்ளார்.''[7] இந்த ஐங்குறுநூறு நூல் இத்திணை மரபுகளைத் தவிர்த்து மருத்திணையை முதலில் வைத்து தொகுக்கப்பட்டுள்ளது.*

இந்நூலைத் தொகுத்தோறும் தொகுப்பித்தோறும் முறையே மலை நாட்டுப் புலவரும், மலை நாட்டசருமாதலால் ஆதனவினியென்னும் சேரனைத் தலைவனாகப் பெற்ற முதற் பத்தையுடைய மருதம் முதலிலும் தொண்டிப் பத்தையுடைய நெய்தல் மருதத்தின் பின்னும் மலை நாட்டரசர்களைப் பாடி மலை நாட்டற்மலை நாட்டிற் பெரும்பாலும் சுட்டியே மலைவளம் பாடுதலிற் புகழ்பெற்ற கபிலன் பாடிய குறிஞ்சி நெய்தலின் பின்னும் சேர்க்கப் பெற்றனவென்று கூறப்பட்டுள்ளது. இவ்ஐங்குறுநூற்றின் பேரிய உறுப்பாகிய ஒவ்வொரு திணையும் பத்துப் பத்து புதுப்பாடலாக வகுக்கப்பட்டுப் பத்து என்னும் அக உறுப்புகளாக அமைக்கப்பட்டிருக்கின்றன. செய்யுளைப் பத்துப் பத்தாக வகுத்தோதும் முறையும் நூறு நூறாக வகுத்தோதும் முறையும் திருக்குறள் திருவாசகம், தேவாரம், பிரபந்தம் முதலிய ஏனைய நூல்களிலும் இம்முறைக் காணப்படுகிறது. எட்டுத்தொகை நூல்களுள் வைத்து, பத்துப் பத்துக்களாக வகுத்துத் தொகுக்கப்பட்ட நூல் ஒன்றும் உள்ளது. அது பதிற்றுப் பத்து நூலாகும்.

## கலித்தொகை திணை நிலையமைப்பு

கலித்தொகைப் பாடல்கள் கலிப்பாவில் அமைந்தவை இவற்றுள் சில 80 அடி நீளமுள்ளவை. தொல்காப்பியர் பொருளியலில் கூறியுள்ள விதிகட்கு இலக்கியமாக அமைந்தவை. அதனால் கைக்கிளை, பெருந்திணை பற்றிய பாடல்களும், மடலேறுதல் பற்றிய பாடல்களும் கிழிந்தோர் காதல் பற்றிய பாடல்களும் மிகுதியாக இடம் பெற்றுள்ளன. கலித்தொகையில் வந்துள்ள உவமைகளுள் பெரும்பாலானவை நற்றிணை முதலிய நூல்களில் காணப்பெறாத இதிகாச புராண கதைகளாகவே அமைந்துள்ளன. கலித்தொகை என்பது கடவுள் வாழ்த்து உட்பட 150 கலிப்பாக்களைக் கொண்டதாகும்.

இவை பாலை, குறிஞ்சி, மருதம், முல்லை, நெய்தல் என்னும் ஒழுக்க வகையில் அமைந்துள்ளன. பாலைத்திணைப் பற்றிப் 35 செய்யுள்களும் குறிஞ்சித்திணைப் பற்றிய 29 செய்யுட்களும், மருதத்திணைப் பற்றி 35 பாக்களும், முல்லைத்திணைப் பற்றி 17 பாடல்களும் நெய்தல் திணைப்

*பற்றி 37 பாடல்களும் இதன்கண் அமைந்துள்ளன. "ஏறத்தாழ கி.பி 14 ஆம் நூற்றாண்டிற்குப் பிற்பட்டவர் எனக் கருதத்தகும். கலித்தொகையை முதலில் வெளியிட்ட திரு. சி. வை.தாமோதரம்பிள்ளை அவர்கள் இந்நூல் இயற்றியோர் ஒருவரே எனக் கருதினார். அதன்பின்,*

**பெருங்கடுங்கோண் பாலை கபிலன் குறிஞ்சி**
**மருதனிள நாகன் மருதம் - அருஞ்சோழன்**
**நல்லுருத் திரன் முல்லை நல்லந்துவனெய்தல்**
**கல்விவலார் கண்டகலி**

*என்னும் வெண்பா வெளிகொணர்கிறது.''[8] அது முதல் ஐந்து கலியும் புலவர் ஐவரால் பாடப்பட்டன எனக் கருதப்பட்டது. கலித்தொகை ஆசிரியர் ஐவரே என்பதற்கு மேற்காட்டிய வெண்பாவைத் தவிர வேறு சான்று இல்லை. ஏனைய தொகை நூல்களில் பாலைத் திணை பற்றிப் பல செய்யுள்களைக் கடுங்கோன் பாடியிருத்தலாலும், குறிஞ்சித்திணைப் பற்றிப் பல செய்யுட்களைக் கபிலர் பாடியிருந்தாலும், முதலிரண்டு கவிகளை இவர்கள் பாடினார்கள் எனக் கொள்ளும் ஏனைய மூன்றையும் பிற புலவர் மூவரும் பாடத் தகுதி வாய்ந்தவர் என்பதற்குரிய சான்று ஏனைத் தொகை நூல்களில் காணவில்லை. மருதன் இளநாகனார் பிற நூல்களில் பாடியனவாகக் காணப்படும். 39 செய்யுட்களில் பாலைப்பற்றி 17-ம் குறிஞ்சி பற்றி 9-ம், முல்லைப்பற்றி 5ம், நெய்தல் பற்றி 5ம், மருதம் பற்றி மூன்றுமே உள்ளன. இவர் மருதக் கலியைப் பாடியுள்ளார்.*

### குறுந்தொகை திணைநிலையமைப்பு

*குறுந்தொகை நான்கடிச் சிறுமையும், எட்டடிப் பெருமையும் உடைய நானூறு செய்யுட்களின் தொகுதியாகும். குறுகிய அடிகளை உடைய செய்யுட்களின் தொகையாகலின் இது குறுந்தொகை என வழங்கப்பட்டது. தொகை என வழங்கும் நெடுந்தொகை (அகநானூறு) நானூறு செய்யுள்களின் தொகை நற்றிணையை விட இது அளவு சிறுமையில் சிறந்து காணப்படுகிறது. (307, 391) இரண்டு பாடல்கள் ஒன்பது அடி பெருமையுடன் காணப்படுகிறது.*

இக்குறுந்தொகையில் செய்யுள்களை இயற்றிய நல்லிசைப் புலவர்கள் இருநூற்றவர் ஆவர் என இந்நூலின் இறுதியில் அமைந்த பழையக் குறிப்பால் அறியலாம். பாரதம் பாடிய பெருந்தேவனாரை விலக்கி இருளற்றவர் பெயரே உள்ளன. எனினும் இடை இடையே உள்ள பத்துச் செய்யுள்கள் ஆசிரியர் பெயர் காணப்படாதனவாகவும் உள்ளன. “ஆசிரியர் பெயர் காணப்படாத செய்யுள்களை இச்செய்யுளின் முன்னிலை ஆசிரியரே பாடினர் என்று ஒரு பெயர்த்து எழுதுவோர் எழுதிவிட்டனர்.”[9] என சா.வே.சுப்பிரமணியன் குறிப்பிடுகிறார். இக்குறுந்தொகையில் காணப்படும் சீரிய கருத்தோவியங்கள் எழிலானே தம்மை ஆக்கி நல்லிசைப் புலவர்களின் நுண்மான் நுழைபுலனின் சிறப்பினை நன்கு புலப்படுத்துகின்றன.

இப்பாடல்களைத் தொகுத்தவன் பூரிக்கோ என்பவன் பெயரால் இவன் ஓர் அரசன் என்பது தெரிகிறது. இவனைப் பற்றி வேறு ஒன்றும் அறியுமாறு இல்லை. இந்நூற் பாடல்கள் அகப்பொருள் பற்றியவை குறிஞ்சி, பாலை, முல்லை, மருதம், நெய்தல் என்னும் ஐவகை ஒழுக்கங்களைப் பற்றிய பாடல்கள் இதன்கண் இடம் பெற்றுள்ளன. இந்நூலின் மூலத்தை மட்டும் முதன்முதலில் வெளியிட்டவர் சி.வை.தாமோதரம்பிள்ளை என்பவர், திணைப்பாடல்கள் கூற்று அடிப்படையில் விளக்கப்பட்டுள்ளன. முதற்பொருள் இன்னது என்பதை அறிய உரிப்பொருள், கருப்பொருள் அடிப்படையில் முடிவு செய்யப்பட்டுள்ளன என்பது தெரிகிறது.

## நற்றிணையில் திணை நிலையமைப்பு

நற்றிணை நானூறு அகவற்பாக்களையுடையது. பாக்கள் ஒன்பதடிச் சிறுமையும் பன்னிரண்டு அடிப்பெருமையும் உடையன. இந்நூல் மிகச்சிறந்த அகத்திணை இலக்கியமாகும். “175 புலவர்கள் பாடிய பாக்கள் இந்நூலில் அடங்கியுள்ளன. இந்நூலைத் தொகுப்பித்தவன் பன்னாடு தந்த பாண்டியன் மாறன் வழுதி என்பவாவன். தொகுத்தவர் இன்னவர் என்பது

தெரியவில்லை. காலஞ்சென்ற பெரும்புலவர் பின்னத்தூர் அ.நாராயணசாமி ஐயராவர் இந்நூற் பாடல்கட்குப் பொழிப்புரை முதலியன எழுதியுள்ளார்.''[10] திணை நிலையமைப்பில் நற்றிணை நல் + திணை என்றும் அடையொடு குறிப்பிடப்பட்டுள்ளன.

## அகநானூறு திணை நிலையமைப்பு

அகநானூற்றுப் பாடல்கள் 13 அடி சிறுமையும், பெருமையும் முப்பத்தொன்று கொண்டது. இதற்கு நெடுந்தொகை என்ற பெயர் உண்டு. இதனைத் தொகுப்பித்தவன் பாண்டியன் உக்கிரப் பெருவழுதி, தொகுத்தவன் மதுரை உப்பூரிகுடிகிழான் மகன் உருத்திரசன்மன். "இந்நூலில் முதல் நூற்றிருபது பாக்கள் களிற்றியானை நிறை எனவும், 121 முதல் 300 வரை உள்ளன. மணிமிடை பவளம் எனவும், இறுதி மேற்படி இது நித்திலக்கோவை என்றும் பெயர் பெற்றுள்ளன. இங்ஙனம் இவன் கூறிய புலவர் எண்ணிக்கையில் இலக்கிய வரலாறு எழுதியோர் அனைவரும் தத்தம் நூலில் குறித்துள்ளனர்.''[11] புலவர் பெயர்களை எழுதிக் கணக்குப் பார்க்கும் போது அவர்கள் தொகை நூற்றைம்பத்தெட்டு ஆகிறது. மூவர் பெயர்கள் தெரியவில்லை. ஐந்திணை பற்றிய இப்பாடல்களின் வைப்புமுறை கவனத்திற்குரியது.

1. ஒற்றைப்படை எண்களாக உள்ளவை. அதாவது 1, 3, 5, 7, 9 என அமைந்தவை பாலைத்திணை.
2. 2, 8, 12, 18 என்பது போல் 2, 8 ல் முடியும் எண்கள் கொண்டவை குறிஞ்சித்திணை.
3. 4, 14, 24, 34 என்பது போல் 4ல் முடியும் எண்கள் கொண்டவை முல்லைத்திணை.
4. 6, 16, 26, 36 என்பது போல் 6ல் முடியும் எண்கள் கொண்டவை மருதத்திணை.

5. 10, 20, 30, 40 என்பது போல் 10-த்தின் கூடுதல்கள் நெய்தல் திணை.

1. பாலைத்திணைப் பாடல்கள் -200
2. குறிஞ்சித்திணைப் பாடல்கள் – 80
3. முல்லைத்திணைப் பாடல்கள்-40
4. மருதத்திணைப் பாடல்கள் – 40
5. நெய்தல் திணைப் பாடல்கள் – 40

பாடிய புலவர்கள் -145

பெயர் தெரிந்தவை -142

பெயர் தெரியாதவை – 3

## திணைக் கொள்கை

"திணை என்பதற்கு நிலம், இடம், வீடு, குலம், ஒழுக்கம் எனப் பல பொருள்கள் உண்டு என்று சென்னைப் பல்கலைக் கழகத் தமிழ்ப் பேரகராதி குறிக்கின்றது.''[12] (ப.1874). பொருளியல் நோக்கில் திணை என்பதற்கு நிலம், ஒழுக்கம் என்னும் பொருளையே எடுத்துக் கொள்ளப்படுகிறது. அது அகத்திணை ஏழு, புறத்திணை ஏழு என்பது பழந்தமிழ் இலக்கண ஆசிரியரின் கொள்கை. அவை,

**''கைக்கிளை முதலாப் பெருந்திணை இறுவாய்**
**முற்படக் கிளந்த எழுதிணை என்ப''** [13]

என தொல்காப்பியம் அகத்திணைகளை ஏழாகக் கூறுகின்றது. அவையாவன, கைக்கிளை, முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தல், பாலை, பெருந்திணை என்பன. இவ்வேழு அகத்திணைகளில், முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தல், பாலை என்ற ஐந்தும் நடுவண் ஐந்திணை எனப்பட்டன. கைக்கிளை என்று சொல்லப்படும் பொருள் முதலாகப் பெருந்திணை என்று சொல்லப்படும் பொருள் ஈறாக முற்படக் கூறப்பட்டன என்று சொல்வர். முற்படக் கிளந்த என்றமையால் அவை ஏழும் அகப்பொருள் என்று கூறினாருமாம். அகம், புறம் எனப் பொருளை வரையறுத்தல் இவர் கருத்தாகும். இதனை,

**"அகத்திணை மருங்கின் அரில்தப உணர்ந்தோர்**
**புறத்திணை இலக்கணம் திறம்படக் கிளப்பின்''[14]**

என்பதால் 'பொருள்' இலக்கணம் அகத்திற்குப் பக்கத்தில் புறம் என்னும் பொருளும் உள்ளது. அதனால் முற்ப்பட கிளந்த எழுதிணை எனவே பிற்படச் சொல்லப்படுவன எழுதிணையான புறத்திணையும் உள்ளது. அவையாவன, வெட்சி முதலாகப் பாடாண்டினை ஈறாகக் கிடந்த எழுதிணையும் சேர்த்து பதினான்கு உள. அவை,

**"வெட்சிதானே குறிஞ்சியது புறனே'' [15]**

என்ற பாட்டில் அமையும் என இளம்பூரணர் கூறுகின்றார்.

உலக தோற்றத்தின் அடிப்படை பொருளாகும். அவை முதற், கரு, உரி, என தொல்காப்பியம் சுட்டுகின்றது. இவை உலக பொருளியல் அறிஞர்களும் வகுக்க இயலா கொள்கை ஆகும். அதாவது பொருள் இன்னது என அறிய, அவற்றிற்கு தேவையான கருவி இடமும், காலமும் முதற்பொருள்களாகும் என அறிவியல் அடிப்படையில் தொல்காப்பியர் விளக்குகிறார். முதற் பொருளாவது நிலம், காலம் என இருவகைப்படும் அவை,

**''முதற் எனப்படுவது நிலம் பொழுதிரண்டின்**
**இயல்பென மொழிய இயல்புணர்ந்ததோரே'' [16]**

முதல் என்று சொல்லப்படுவன நிலமும், காலமும் ஆகிய இரண்டின் இயற்கை என்று சொல்வர் உலகின் இயல்பினை உணர்ந்தவர்கள் கூறுகின்றார்கள். இவற்றிலிருந்து நிலம் என்பதற்கு முதன்மை அளித்துள்ளது தெரிகிறது. நிலம் எவ்வாறு தோன்றின? இயற்கை அண்டவெளியில் மூன்று பக்கம் நீராலும், ஒரு பக்கம் நிலத்தாலும் சூழப்பட்ட ஒட்டு மொத்த இயற்கை நில பாகுபாடுகளுக்கும் பொருந்தும் வண்ணம் சிந்தித்து அமைக்கப்பட்டுள்ளதைக் காணமுடிகின்றது.

ஐவகை நில அமைப்பு முறை காலச் சூழ்நிலையோடு தொடர்புடையனவாக வகுக்கப்பட்டுள்ளன. நடுவண் ஐந்திணை நடுவனது ஒழிய என்பது நானில பாகுபாட்டினுள் இரு சம நிலங்களுக்கு நடுவில் பாலைத்திணையைப் பொதுவாக வைத்துள்ள நுண்மையான முறையில் வகுத்து கூறியுள்ளார். பாலைத்திணை எல்லா நிலங்களிலும் தோற்றம் பெறும் என்பதனாலேயே பொதுவில் வைத்துள்ளது சிந்திக்கத் தக்கதாக உள்ளது.

***"முல்லையுங் குறிஞ்சியுங் முறைமையிற் றிரிந்து***
***நல்லியல் பழிந்து நடுங்குதுய ருறுத்துப்***
***பாலையென்பதோர் படிவங் கொள்ளும்''[17]***

இவ் ஐவகை நிலப்பாகுபாடுகள் அனைத்தும் இலக்கண நூல் விதிகளின் படி உரையாசிரியர்கள் வகுத்தனவாகும்.

உலகத்தைப் படைக்கின்றக் காலத்துக் காடும், மலையும், நாடுங் கடற்கரையுமாகப் படைத்த நால்வகை நிலத்திற்கும் ஆசிரியன் தான் படைத்த ஐவகை ஒழுக்கத்திற் பாலையொழிந்தனவற்றைப் பகுத்துக் கொடுத்தான். அப்பாலை ஏனையபோல ஒருபாற்படாது. நால்வகை நிலத்திற்கும் உரியவாகப் புலனெறி வழக்கஞ் செய்து வருவதால் பாலைக்கு நடுவனனென்னும் பெயர் ஆட்சியுங் குணனுங் காரணமாகப்பெற்ற பெயர். "நடுவுநிலைத் திணையே நண்பகல் வேனில்'' என சொல்வதால் புணர்தல், இருத்தல், இரங்கல், ஊடல் என்பவற்றிற்கு இடையே பிரிவு நிகழ்தலானும், நால்வகையுலகத்திற்கிடையே,

***''நடுவண் ஐந்திணை நடுவண தொழியப்***
***படுதிரை வையம் பாத்திய பண்பே'' [18]***

என முதற்பொருள் பற்றிப் பாலை நிகழ்தலானும், நடுவனதாகிய நண்பகற் காலந் தனக்குக் காலமாகலாலும், புணர்தற்கும் இருத்தற்கும் இடையே பிரிவு வைத்தலானும், உலகியற்பொருளாகிய அறம் பொருளின்பங்களுள் நடுவணதாய பொருட்குத்தான் காரணமாகலானும், நடுவனது என பண்புக்கு காரணமாயிற்று என்கிறார்.

“நடுவண் ஐந்திணை நடுவண தொழிய என்பதற்கு முல்லை, குறிஞ்சி பாலை, மருதம், நெய்தல் என்பனவாம். படுதிரை வையம் பாத்திய பண்பே என்பதற்கு ஒலிக்கின்ற திரைகடல் சூழ்ந்த உலகம் பகுக்கப்பட்ட நில அமைப்பினை சுட்டுவதாக அமைந்துள்ளன.’’[19] கடலால் சூழ்ந்த நிலப்பகுதிக்கு இயல்பாக உள்ளதை உணர்த்த மொழிப்பட்டுள்ளது.

**மருத நிலத் தோற்றம்**

புவியியல் அமைப்பில் நிலமானது மூன்று பக்கம் நீரால் சூழப்பட்டுள்ளது. ஒருபகுதி மட்டுமே நிலமாக அமைந்து காணப்படுகிறது. இயற்கை நிலவியல் அமைப்பானது ஒரு பகுதி மட்டும் மனித உயிர்கள் வாழ்வதற்கானத் தகவமைப்பினைப் பெற்றுக் காணப்படுகிறது. தமிழிலக்கியங்களான சங்க இலக்கியம் உலக நோக்கில் ஆராய்ந்து நில அமைப்பினை ஐவகையான நிலங்களாகப் பாகுபடுத்தப்பட்டுள்ளது. திணை இலக்கியங்களில் காணப்படும் நில அமைப்பு முறையில் முல்லை, காடும், காடு சார்ந்த பகுதிகளாகவும், குறிஞ்சி மலையும் மலை சார்ந்த பகுதிகளாகவும், மருதம் வயலும் வயல் சார்ந்த பகுதிகளாகவும் நெய்தல் , கடலும் கடல் சார்ந்த பகுதியாகவும் பாலை மணலும் மணல் சார்ந்த பகுதியாகவும் என பாகுபடுத்தப்பட்டுள்ளன.

இவையாவும் ஒரு பொதுமையான நிலப் பாகுபாட்டளவில் இரு நிலமாகவே காட்சியளிக்கின்றன. ஒன்று கடல் மற்றொன்று நிலம் (மலை, வயல், காடு, மணல்) என்பவையாகும். கடல் என்பது இயற்கையமைப்பில் தோன்றி மற்ற நிலப் பகுதிகளில் காணப்படும் யாவும் செயற்கையாக வடிவம் பெற்றன. காடு, மலை, மணல், வயல் ஆகிய அனைத்தும் தோன்றுவதற்கு அடிப்படையாக கடல் அமைந்துள்ளது. பருவ மாற்ற நிகழ்வுகளால், ஏற்பட்ட மழைப் பொழிவே இந்நில அமைப்பு முறை தோன்றக் காரணமாகும்.

## நிலம் கலந்து உறவாதல்

நிலக்கலப்பு ஏற்படுவது இயற்கை மாறுதலாகும். ஐவகையான நிலங்கள் ஒன்றுடன் ஒன்றுக் கலந்து வேறு நிலமாக மாறுதல் என்பது பருவ, கால, நிலைகளால் ஏற்படும் மாற்றமாகும். நிலத்திலுள்ள மக்கள் பக்கத்திலுள்ள நில மக்களுடன் மணம், காதல், ஆகிய செயல்பாடுகளின் மூலம் உறவினை ஏற்படுத்தி கொள்வதால் உறவு ஏற்படுகிறது.

அகநானூற்றுப் பாடலில் குறிஞ்சி, முல்லை ஆகிய நிலங்களுக்குள் உறவு கலந்துக் காணப்படுகிறது. தேன் அடைகள் பொருந்திய மலையுச்சியின் பக்கத்தில் குவிந்த இலைகளையுடைய முசுண்டையின் வெண்மையான மலர்கள் வானில் மீன் பூத்தாற்போல குழைந்திடப் பூத்து உள்ளன. நடு இருளில் ஆட்டுக் குட்டிகளை ஒன்றாய்த் தொகுத்துள்ள ஓலைப்பாயை முதுகில் உடைய இடையன் முல்லைப்பூக்களைத் தோன்றிப் பூவுடன் இணைத்து மாலையாக அணிந்தவனாய் கொள்ளிக்கட்டையைக் கையில் கொண்டு நரிகளையும் பன்றிகளையும், ஓட்டும் போது ஏற்படும் ஒலியும் ஊது கொம்புகளைக் கையில் வைத்து திணைப்புனம் காப்பவர் ஊதும் ஒலியும் ஒருங்குபட ஒலிக்கும் என உரைக்கப்பட்டுள்ளன. இவற்றில் முல்லைப்பூக்களை அணிந்தத் தலைவனையும், மலை உச்சியாகியக் குறிஞ்சி நிலத்தையும் உறவுடையனவாக காட்டப்பட்டுள்ளது. இதனை,

**''துற நரி யுளம் புங் கூரிருள் நெடுவிளி**
**சிறுகட் பன்றிப் பெருநிரை கடிய''** [20]

என்னும் பாடல் வரிகள் புலப்படுத்துகிறது. தொடர்ந்து அகநானூற்றின் 284ஆம் பாடலிலும், குறிஞ்சி, முல்லை நிலங்களின் கலப்புக் காணப்பெருகின்றது. முல்லை நிலத்து விலங்காகிய முயல்கள், மருத நிலத்தில் விளையக்கூடிய நெல், வரகு, ஆகியவற்றின் குருத்துக்களைத் தின்று, வளைந்த காய்களையுடையச் செடிகளுக்கு இடையே படுத்து உறங்கும். பின்னர் வீட்டின் முன்னர் வைக்கப்பட்டு உள்ள சால்களில் உள்ள நீரை குடித்துவிட்டு செல்லும் இயல்பினை உடையது முல்லை நில ஊர்கள்.

இந்நில அடிவாரத்தில் மறவர்கள் கள் உண்டு மான்களையும் வேட்டையாடி உண்பர். இதில் முல்லை நிலத்து நெல் உண்ட முயல் குறிஞ்சி நிலத்திற்குக் குன்றுகளுக்கு அடிவாரம் வரை சென்று மறவர்களால் வேட்டையாடப் பட்டுள்ளது. இதனை,

**''விசைத்த வில்லர், வேட்டம் போகி**
**முல்லைப் படப்பைப் புல்வாய் கெண்டும்''** [21]

என்ற வரியில் காணலாம். தம்முடைய சிறுகுடியான குறிஞ்சியும், முல்லையும் கலந்து உறவாதல் காணமுடிகிறது.

### மருதம் – முல்லைக் கலப்பு

மருதத்திணையும், முல்லைத்திணையும் கலந்து வருவதை மருதம் முல்லைக் கலப்பு என்கிறோம். அகநானூற்றுப் பாடலில் முல்லை, மருத நிலங்கள் ஒழுங்கு கூறப் பெற்றுள்ளன. மலையினது உச்சியில் வளைந்த நிறம் பொருந்திய இந்திரவில்லையும், முரசு போன்ற ஒலியையும் உடையமேகம், கடலினது நீரைக்குடித்து உலகை வலமாக எழுந்து வளைத்து இறங்கிப் பெய்யும் மிகுந்த மலையைத் திசைகள் எல்லாம் பெய்கின்றது. இதனால் பெரிய நிலம் அழகு பெற்று கார்காலம் இன்பமடைகின்றது. இக்கார்ப் பருவத்தில் தீயைப்போன்ற கண்களையுடையப் பன்றி நுண்ணிய மணலில் உள்ள சிறியப் புதரில் உறங்குகின்றது. அதன் முதுகு மறைய முல்லை மலர்கள் உதிர்ந்து மூடி காணப்படுகிறது இத்தகைய காடு சார்ந்தப் பகுதியில் தலைவி இருக்கிறாள். கள்ளினை உண்டு நெல்லரிப்பவர்கள் நெல்கட்டினைச் சுமந்துச் செல்லும் போது ஏற்படும் ஓசையினை உடைய மருத நிலத்தினையும் கொடுத்தாலும் ஏற்காதப் போர்பாசறையிலே வீற்றிருக்கும் தலைவன் அந்நிலத் தலைவியை நினைத்துள்ளான். இங்கு மருதநிலத்து தலைவன் முல்லைநில தலைவியுடன் காதல் கொள்வதாக இடம் பெறுகிறது. வர்ணணையில் ஐவகை நில ஒருங்கு கற்பனையாக வடிவமைக்கப்பட்டுள்ளது. இதனை,

**''இரு நிலம் கவினிய எமுறு காலை**
**நறுவீ முல்லை நான் மலர் உதிரும்''** [22]

என்ற பாடலில் கார்கால பிரிவில் முல்லை நிலத் தலைவியின் நினைவுகளை மருத நிலச் செயல்களினால் மகிழ்ந்திருந்ததை பற்றி தலைவன் நினைவு கூர்தலைக் காணமுடிகிறது.

**மருதம் – நெய்தல் உறவு**

வலிய வில் பொருந்திய வலிய தோள்களையுடையப் பரதவரின் தலைவன் மத்தி என்பான். அவனது 'கழார்' என்ற ஊரில் அமைந்த துறையில் நீண்ட வெண்மையான மருத மரத்துடன் வஞ்சி மரத்தையும் சாய்த்து விடியற்காலையில் பெருகி வந்த வெள்ளத்தை உடைய காவிரியாற்றில் வளையை அணிந்த நின்னால் விரும்பப்பட்ட பரத்தையுடன் நீ நேற்று விளையாடினாய் அதனால் எழுந்தது அலர் என தலைவனைச் சாடுகிறாள். இதனை,

**"..................பரதவர் கோமான்**
**பல்வேல் மத்தி, கழாஅர் முன்துறை**
**நெடுவெண் மருதொடு வஞ்சி சாஅய''** [23]

என்னும் வரிகள் புலப்படுத்துகிறது. இதில் மருத நில பரத்தையுடன், நெய்தல் நில மத்தி என்னும் தலைவனின் வரவால் காதல் உறவு ஏற்பட்டது.

மருதநிலம் பல ஓடைகளோடு மிகுந்த வளமுடையது. ஆறுகடலோடு கலக்குமிடத்தில் பல ஊர்கள் தோன்றி வளமடைகின்றன. எனவே நெய்தல் நில மக்களின் வாழ்வியல் மருத நிலத்தின் தாக்கத்தைக் காண முடிகிறது. இதனை,

**"வறப்பின், மாநீர் முண்டகம் தாஅய்ச்சேறு புலர்ந்து**
**இருங்கழிச் செறுவின் வெள் உப்பு விளையும்''**[24]

*என்ற வரிகளின் மூலம் உணரமுடிகின்றது. நெய்தற்பாடல்களில் இவ்விரண்டு நிலங்களும் ஒன்றாகவே பிணைக்கப்பட்டுள்ளன. தோழிதனது ஊரைப் போற்றுகையில் மழைபெய்யின் நெல்லிருந்து வருவாய் கிடைக்கும் என்கிறாள். இவ்வாறாக் காலநிலை வேறுபாடுகள் இருப்பினும் முறையான வருவாய் பெறுவதை அவள் கூறுகின்றாள். மருதத்தில் பயிர் செய்வதற்குரிய ஈர நிலம் கழனி (வயல்) எனப்படும். நெய்தலிலும் உப்பங்கழி கழிச்செறு உப்பு (வயல்) என்பதனை,*

***“வெண்கல் உப்பின் கொள்கை சாற்றி***
***என்றூழ் விடர குன்றம் போகும்***
***கதழ்கோல் உமணர் காதல் மடமகள்***
***சில்கோள் எவ்வளை தெளிர்ப்ப வீதி***
***நெல்லி நேரே வெண்கல் உப்பு எனச்***
***சேரி விளைமாறு’’*** [25]

*என்னும் வரிகள் எடுத்துரைக்கின்றன. உப்பு விளை கழனி என்றும் கூறப்பெறுவர் இதனை,*

***“உப்பை மாறி வெண்ணெல் தரீஇய***
***உப்புவிளை கழனிச் சென்றனள் அதனால்***
***பனி இரும் பரப்பின் சேர்ப்பதற்’’*** [26]

*உப்பு விளைத்தல் வானம் வேண்டா உழவு; மழை வேண்டாத உழவு என்றும் உப்பு விளைப்போர் உழா உழவர் என்றும் கூறப்பெறுவர் “நற்(331)’’*[27] *மீனவர்கள் பெருந்தன்மையிலும், வறியவர்களுக்குத்தாம் பிடித்து வந்த மீனை வழங்குவதிலும், உழவர்களோடு ஒப்பிடப் பெறுகின்றனர்.*

***“உறுகழிச்சிறுமீன் முனையின் செறுவில்***
***கள்நாறு நெய்தல் கதிரொடு நயக்கும் ’’*** [28]

*நாரை சிறிய மீனை நெய்தற் பூ உடனும் நெற்கதிரையும் சேர்த்து உண்ணும் சிறப்பினை உடைய நாட்டின் துறைவனுடன் என வருகிறது. நெய்தற் நில சுருக்கமான வர்ணனை, மருதநில பாடலில் இடம் பெற்றுள்ளது.*

*தொல்காப்பியர் ஓர் அகப்பாட்டில் பருவம் பொழுது கருப்பொருள் என வெவ்வேறு திணைக்குரியவை வந்து மயங்கினாலும், நிலம் மயங்குதல் இல்லையென மொழிவர்.*

**"திண்ணைமயக்குறுதலும் கடிநிலை இலவே''[29]**

*இவற்றில் ஒருதிணைக்கு உரிய முதற்பொருள் மற்றோர் திணைக்குரிய முதற்பொருளோடு சேரக்கூடாது என்று கூறி அடுத்த நூற்பாவில்,*

**"உரிப்பொருள் அல்லன மயங்கவும் பெருமே''[30]**

*இவற்றில் உரிப்பொருள் அல்லாத கருப்பொருளும், முதற்பொருளும் மற்றொரு திணையோடு சேர நிற்கும் என இளம்பூரணர் கூறுகிறார். திணை மயக்கமின்றியும் மருதநில உவமைகள் நெய்தற் பாடல்களில் பயன்படுத்தப்படுகின்றது. நற் 35, (கறு 117 வழக்கமாகத்திணைப் புலவர்கள் தங்களின் உவமைகளையும், உருவங்களையும் அவ்வத்திணைக்குரிய நிலங்களிலிருந்தே புனைவது மரபாகும். ஆனால் இங்கு இந்தப் பொருள் மரபுக்கு மாறான தன்மைக் காணப்படுகின்றது. மேலும் இருவரின் கற்பனையான அணுகுமுறைகளில் சில ஒப்புமைகள் உள்ளன. (நெய் நற் 275, மருதம் குறுந்309) காலப்போக்கில் இரு நிலங்கள் இயற்கையில் ஒன்றாக இணைவதன் காரணமாக இவ்விருதிணையின் பாடல்களில் இடம்பெறும் கற்பனைப் பாங்கு ஒன்றையொன்று ஒத்திருக்கும் நிலையைப் பெறுகின்றது. இவ்வாறாக, இயற்கை, வாழ்க்கை ஆகிய இரண்டின் ஒளிக்காட்சியாகத் திணைச் செய்யுள், நடப்பியல் சார்ந்த நிலையில் சித்தரிக்கப் பெறுகின்றன. பனுவலாக்க மரபு சங்க திணைக் குழு வளர்ச்சிக்கு காரணமாக இருந்துள்ளன.*

ஒவ்வொரு திணை செய்யுட்களும் ஒன்றுடன் ஒன்று தொடர்பினை ஏற்படுத்திக் கொண்டு கட்டமைக்கப்பட்டுள்ளதைக் காணமுடிகிறது. இயற்கை நெறியும் சமூகத்தொடர்பு ஏற்படுத்திக்கொண்டு புலனமைக்கும் மரபும் வழி வகுத்துள்ளதாக காணமுடிகின்றது. இவ்வகையான திணைமயக்கம் புறப்பாடல்களிலேயே பொதுவாக நிகழும், ஆற்றுப்படைச் செய்யுட்களில் ஐந்து நிலங்களும் ஒன்றன் பின் ஒன்றாய்க் கூறப்பெறும், ஆனால் அகத்தில் இது தொல்காப்பியரால் தடைச் செய்யப்பட்டுள்ளது. இவ்விதிக்கு மாறாக, நெய்தற் பாடல்களில் மருத நிலத்தின் சுருக்கமான வருணனையும் நெய்தல் நிலக்காட்சிகளும் ஒரே பாடலில் இயைந்து வரக் காண்கிறோம்.

**"வெண்ணெல் அரிநர் பின்றைத் ததும்பும்**
**தண்ணுமை வெரீஇய தடந்தோள் நாரை''** [31]

நெல்லரியும் உழவர்கள் களைப்பு தீர தண்ணுமை கருவியை இசைத்தனர். அதைக்கேட்ட நாரை மயங்கி நின்றது. மீனை உண்ணும் பறவைக் கூட்டங்களும் சென்றன. இருநில தொடர்பை பறவைக்கூட்டம் ஏற்படுத்தியது தெரிகிறது.

**"வைகுறு விடியல் போகிய எருமை**
**நெய்தல் அம்புதுமலர் மாந்தும்''** [32]

குளிர்ந்த இருள் புலர்தலை உடைய விடியற்காலையிலேயே எருமை வெளிவந்துப் புதிதாக பூத்த நெய்தல் மலர்களைத் திண்கிறது. இவ்வர்ணனை நெய்தல், மருதக் காட்சியை புலப்படுத்துகிறது.

கடற்கரையில் வசிக்கும் உப்பு வணிகர் வெண்கல் போன்ற உப்பை விலைபேசிப் பெறுவர். பின்னர் அதனை விற்க நீண்ட வண்டிகளில் ஏற்றிச் செல்வர். அப்போது வழியில் படுத்திருக்கும் ஆநிரைகளை விலக்க ஓசை எழுப்புவர். இவ்வோசையைக் கேட்டு மருத நில நாரைகள் அஞ்சி ஒடுவதாக அமைந்துள்ளது.

***“வெண்கல் உப்பின் கொள்ளை சாற்றி***
***கண நிரை கிளர்க்கும் நெடு நெறிச்சகடம்’’[33]***

*இவ்வடி மருத நில வர்ணனைக் கலந்துள்ளது.*

***“செந்நெல் அரிநர்கூர் வாப்புண்ணுறக்***
***காணார் முதலொடு போந்தென பூவே’’[34]***

*இதில் செந்நெல் அறுக்கும் உழவர் கூறிய அரிவாள் கொண்டு வயலில் இருக்கும் நெற்கதிரோடு நெய்தல் மலரையும் அறுப்பர். இம்மலர் சூரியனின் கதிர் பட்டவுடன் வாயைத் திறந்தாற் போல இருக்கும். இவ்வாறானக் கடற்கரை ஊருக்குத் தலைவன் என இவ்வடி புலப்படுத்துகிறது.*

***“இரைதேர் நாரை எய்தி விடுக்கும்***
***துறை கெழு மரந்தை அன்ன***
***கயிறு அரி எழுத்தின் கதழும் துறைவன்***
***வாராது அமையினும் அடைக’’[35]***

*வண்டுகள் மணற்பரப்பில் விழுந்துக் கிடப்பதைக் கண்ட நாரைகள் நாவல்பழம் என எடுத்து உண்டன என்ற உவமையும், மருத நிலத்து எருமை, கடற்கரை பரப்பில் உள்ள நண்டுக்கு ஒப்புமையாக்கப் பட்டுள்ளது. இவ்வாறாக இருநில உவமைகளும் இடம் பெற்றுள்ளன.*

***“பொங்கு திரை பொருத வார்மணல் அடைகரைப்***
***புன்கால் நாவல் பொதிப்புற இருங்கனி’’ [36]***

*மேலெழும் அலைகள் தாக்கிய, நீண்ட மணல் பறந்த கரையிலே புல்லிய காம்புடைய நாவலின் கரியகனி களி பொருந்திய மேற்புறமுள்ளதொன்று உதிர்ந்தது. அதை தும்பி வண்டுகள் தம் இனம் எனக் கருதி மொய்த்தன. பல கால்களையுடைய அலவன் என்னும் நண்டு எடுத்துண்ணச் சென்றது.*

***“மாரி ஆம்பல் அன்ன கொக்கின்***
***பார்வல் அஞ்சிய படுவரல் ஈர்ஞாண்டு’’[37]***

என்ற அடிகளில் கார்காலத்திலே ஆம்பல்மலர் போன்ற தோற்றத்தை உடைய கொக்கினது. பார்வையை அஞ்சிய துன்பத்தையுடைய ஈரிய நண்டு அங்குள்ள வலையில் புகுந்து கொள்ள நேரிட்டது. இவ்விரு உவமைகளின் கருப்பொருள், முதற்பொருள் ஒப்புமையைக் கண்டு தெளியலாம்.

திணை மயக்கமின்றியும் மருதநில உவமைகள் நெய்தற் பாடல்களில் பயன்படுத்தப்படுகின்றது (நற்.35). வழக்கமாகத் திணைப் புலவர்கள் தங்களின் உவமைகளையும், உருவங்களையும் அவ்வத்திணைக்குரிய நிலங்களிலிருந்தே புனைவது மரபாகும். ஆனால் இங்கு இந்த பொருள் மரபுக்கு மாறானத் தன்மை காணப்படுகின்றது. மேலும் இருவரின் கற்பனையான அணுகுமுறைகளில் சில ஒப்புமைகள் உள்ளன.

**“செந்நெல் அரிநர் கூர் வாட் புண்ணுறக்**
**காணார் முதலொடு போந்தென பூவே ’’[38]**

இவற்றில் செந்நெல் அறுக்கும் உழவர் கூறிய அரிவாள் கொண்டு வயலில் இருக்கும் நெற்கதிரோடு நெய்தல் மலரையும், அது அறுபடுமே என காணாது சேர்த்து அறுப்பதைக் கொண்டு இவ்விரு உறவுகளைக் காணலாம். மேலும்,

**“கொடியோர் நிலம் பெயர்ந்து உறைவேம் என்னாது**
**பெயர்த்தும் கடிந்த செறுவில் பூக்கும்**
**நின் ஊர் நெய்தல் அனையேம் பெரும் ’’[39]**

இதில் கையாலே தொழில் செய்யும் உழவர்கள் தமது சுளைதல் தொழிலை முடிப்பாராய். வண்டுகள் உண்ணும்படி மலர்ந்த நெய்தல் மலரை எல்லாம் பறித்து ஒதுக்குவர். அவர்கள் ஒதுக்கி வைத்தனர் என்றும் எண்ணாத நெய்தல் மலர் திரும்பவும் அக்கழனியிலே களைகளாகத் தோன்றுவதை போல மீண்டும் மீண்டும் தலைவி அன்பு கொள்கிறாள் என்பதைச் சுட்டுகின்றது.

காலப்போக்கில் இரு நிலங்கள் இயற்கையில் ஒன்றாக இணைவதன் காரணமாக இவ்விருதிணையின் பாடல்களில் இடம்பெறும் கற்பனை பாங்கு ஒன்றையொன்று ஒத்திருக்கும் நிலையைப் பெறுகின்றது. இவ்வாறாக, இயற்கை, வாழ்க்கை ஆகிய இரண்டின் ஒளிக்காட்சியாகத் திணைச்செய்யுள், நடப்பியல் சார்ந்த நிலையில் சித்தரிக்கப் பெறுகின்றன. பனுவலாக்க மரபு சங்க திணைக் குழு வளர்ச்சிக்கு காரணமாக இருந்துள்ளன. ஒவ்வொரு திணை செய்யுட்களும் ஒன்றுடன் ஒன்று தொடர்பினை ஏற்படுத்திக் கொண்டு கட்டமைக்கப்பட்டுள்ளதைக் காணமுடிகிறது. இயற்கை நெறியும் சமூகத்தொடர்பு ஏற்படுத்திக்கொண்டு புலனமைக்கும் மரபு வழி வகுத்துள்ளதாக காணமுடிகின்றது.

## மருதம் – உழிஞை உறவு

"உழிஞைத்திணை மருதத்திணைக்குப் புறமெனக் கூறபெறும் இளம்பூரணர், மருததிற்கு விடியற்காலம் உரித்ததால் போலவே போருக்கும் அவ்விடியலே பொருந்தும் என விளக்குவார்.''[40] உண்மையில் மருதம் ஆற்றங்கரைகளில் அமைந்தச் செல்வ வளமும், நாகரிகமும் மிக்க நிலமாகும். மூவேந்தர்களின் தலை நகரங்களும் சிறப்புடை நகரங்களும் பெரும்பாலும் இந்நிலத்திலேயே காணப்பெரும் இந்நகரங்கள் உயரமான மதில்களால் பாதுகாக்கப் பெறுகின்றன. உழிஞைப் போர் கோட்டைச் சுவரைத் தகர்த்தலை உட்கொண்டது. கோட்டையைக் காத்தல் மருத நிலத்திலேயே நிகழ்வது எனவே நில அடிப்படையில் இவ்விரு திணைகளும் பொருந்துதற்குரியன. "நச்சினார்க்கினியர் கோட்டைகள் மருத நிலத்தின் அண்ணவாகளின் என்று கூறுகையில் ஒரு குறிப்பைக்காட்டுவர்''[41] இவ்வற்றின் மூலம் உழிஞைத் திணைக்கும், மருதத்திணைக்கும் உறவு ஒழுங்கு இருக்கின்றது. இவ்விரு திணைகளுக்கும் உறவு ஏற்பட்டு இருப்பதைக் காணமுடிகிறது.

## அகமும் – புறமும்

அகம் என்பது காதல், புறம் என்பது கொடை அளி, செங்கோல் மற்றும் போர்த்தொடர்பானது என்ற விளக்கம் பொதுவாக கூறப் பெறுகின்றது.

இளம்பூரணர், “அகப்பொருளாவது போக நுகர்ச்சியாகலான் அதனால் ஆய பயன் தானே அறிதலின் அகம் என்றார் என்றும், புறப்பொருளாவது, மறஞ் செய்தலும் அறஞ் செய்தலும் ஆகலான் அவற்றான் ஆய பயன் பிறர்க்குப் புலனாதலின் புறம் என்று விளக்குகிறார். ஒத்த அன்பான ஒருவனும் ஒருத்தியும் கூடுகின்ற காலத்துப் பிறந்த பேரின்பம் அக்கூட்டத்தின் பின்னர் அவ்விருவரும் ஒருவருக்கொருவர் தத்தமக்குப் புலனாக இவ்வாறு இருந்ததெனக் கூறப்படாததாய்யாண்டும் உள்ளத்துணர்வே நுகர்ந்து இன்பமுருவதோர் பொருளாதலின் அதனை அகம் என்றார். இதனை ஒழிந்தன ஒத்த அன்புடையார் தாமேயன்றி எல்லார்க்கும் துய்த்துணரப் படுதலானும், இவை இவ்வாறிருந்ததெனப் பிறர்க்குக் கூறப்படுதலானும் அவை புறமெனவே படும், என நச்சினார்க்கினியர் விளக்குகிறார்.’’[42] இவ்விரு கருத்தாக்கங்களும் அகம் மற்றும் புறம் இவற்றினை விளக்க முன்மொழியப் படுகின்றது.

**அக புற உறவு**

அகத்திணை ஏழினையும் முதற்கண் விளக்கிவிட்டுப் புறத்திணைகளை அவை ஒவ்வொன்றோடும் இணைத்துக் கூறுகிறார் தொல்காப்பியர்,

***“குறிஞ்சியது புறம் வெட்சி***
***முல்லையது புறம் வஞ்சி***
***மருதத்துப் புறம் உழிஞை***
***நெய்தலது புறம் தும்பை***
***பாலையது புறம் வாகை***
***பெருந்திணைப் புறம் காஞ்சி***
***கைக்கிளைப் புறம் பாடாண்’’[43]***

அகம் என்பதும் புறம் என்பதும் ஒவ்வோர் உணர்வுநிலை பற்றியன. சில கற்பனை மரபுகள் பற்றியன. ஒரு சில பொருட் சார்புடையன. அகம் கூற்றாய் பல்குகிறது புறம் துறையாய் விரிகிறது. முற்றுகைப்போர் மதிற்போர் ஆகியன உழிஞைக்குரியன, மதிலைச் சிதைத்தல், கதவை உடைத்தல், மதிற்குடுமி கொள்ளுதல், வாள் மண்ணுதல் எனப்பல துறைகள்

இத்திணையில் பாடற்குரியன. "அகமும், புறமும் நாணயத்தின் இரு பக்கங்கள் போன்றன அகப்பொருளை ஆராய்ந்த அறிஞர் வ.சு.ப.மாணிக்கனார் புறப் பொருளினும் அகப் பொருள் சிறந்ததென்பர். காமமும் வீரமும் சிறந்த வாழ்க்கையுணர்ச்சிகளேத் தவிர வேறில்லை. இவ்விரண்டிற்கும் இரண்டு இலக்கியங்கள் கண்ட தமிழ் மொழியின் திறம் பெருமிதம் தருவதாகும். இவ்விரண்டு உணர்ச்சியுள் வீரம் ஒரு பாலாக்கிடையே நிகழ்வது காமம் பால்மாறி நிகழ்வதாகலின் ஓவியக் காட்சிக்கும் கற்பனைத் தொகுப்புக்கும் சுவை மிகுதிக்கும் அகத்திணை இலக்கியமே இடங்கொள்வது என்று புலவோர்கள் போற்றினர் என அகத்திணை இலக்கணம் விழுமியது என்று கூறுவதற்குக் காரணங்காட்டுகிறார்.''[44] என இவரின் கருத்தை மறுகிறார் கு.வெ.பாலசுப்ரமணியன் அவ்வகைப் பாடல்களில் இடம் பிடித்துக் கொண்ட புறப் பொருட்செய்திகள் பற்பல உண்டென்பதை எண்ணுதல் வேண்டும். புறத்திணைப் பனுவல்கள் பண்டைத் தமிழகத்தின் அரசியல் நெறியையும், சமுதாய அமைப்பையும், மக்கட் பண்பையும் எடுத்துரைக்கும் வரலாற்றுக் கருவூலம், அறிவியல் கலையியல், உளவியல், நில இயல், ஆட்சியியல், குடியியல் எனப் பன்னெறித்தான துறையறிவுகளை வழங்கும், கருவூலம், அகம்போல உயர்ந்ததே என புறத்திணையை உயர்த்திக் கூறுவார்.

இவ்விருவரும், அகத்தையும், புறத்தையும், உயர்த்திபிடிக்க முனைகின்றனர். இவ்விரு பாகுபாடுகளும் இலக்கிய சுவை கருதி படைக்கப்பட்டிருந்தாலும் மனித உணர்வுகளுக்கு அடிப்படையான ஒன்றாகும். ஒன்றை ஒன்று தாங்கிநிற்கும் இயைபு உடையவனவாக இருப்பது அவசியம் ஆகும்.

### மருதமும் அகப்புறவெளிப்பாடும்

ஒருவனின் அக வாழ்வுச் செம்மையாக அமைந்தால் அவனது புற வாழ்க்கை செம்மையாக அமையும். இவ்வாறாக அகமும், புறமும் செம்மையாக அமைய வேண்டும் என்பது பண்டைய தமிழரின் குறிக்கோளாகும். மருதப்பாடல்களில் புறச்செய்திகள் இடம் பெற்று அகத்திற்கு அழகு ஊட்டுவதைக் காணமுடிகிறது. மருதத்திணையில்

பரத்தையருடன் மாறுபட்டு ஊடல் கொள்ளும் தலைவன் பற்றிய செய்திகள் இடம் பெற்றுள்ளன. அவற்றில் நீ பரத்தையுடன் விளையாடியதால் எழுந்த அலர், மிக்க சினமும் வலியும் உடைய பெரும் புகழ் பொருந்திய கரிகால் வளவன் ஆரவாரிக்கும் கள் வளம் வாய்ந்த வெண்ணிவாயில் என்னுமிடத்தே, சிறப்புடைய பகை மன்னர் பகை கொண்டு எழுந்த போரில், மிக்க ஒலியுடைய வீர முரசம் போர்க்களத்தில் கிடக்க வேளிர் பன்னிருவருடன், இரு பெரு வேந்தரும் நிலைகெட அவர்களின் வலிமையைக் கெடுத்த நாளில் அழுந்தூரில் எழுந்த குறையாத ஆரவாரத்தை விடப் பெரியதாய் உள்ளது என்பதை,

**முரசு**

> ***"........................ கரிகால்***
> ***ஆர்கலி நறுவின் வெண்ணிவாயில்***
> ***சீர்கெழு மன்னர் மறலிய நாட்டின்***
> ***இமிழ் இசை முரசம் பொருகளத்து ஒழிய***
> ***பதினொரு வேளிரொடு வேந்தர் சாய''***[45]

என்னும் பாடலில் கூறப்படுகிறது. இவற்றில், முரசு என்பது படையெடுப்பின் போது முழங்கப்படும் கருவியாகும். இது மன்னனின் பிறந்த நாள் விழாவின் போதும் ஒலிக்கப்பட்டு மக்களுக்கு செய்தியைத் தெரிவிக்கும் ஒலிப்பானாகவும் இருந்துள்ளது. மருத அகப்பாடலில் போர் பற்றிய தொடக்கத்தினை வெளிப்படுத்தும் 'முரசு' இடம் பெறுவதால் புறச் செய்தியாக கருதப்படுகிறது. அலர் என்பது முரசுடன் ஒப்புமையாக இயைபு படுத்தப்பட்டுள்ளது.

**வேல்**

சங்க கால படைகளில் வேற்படையும் ஒன்றாகும். வேல் வடித்துக் கொடுத்தல் கொல்லற்கு கடனே என்பதன் மூலம் வேல் செய்யும் தொழிலை கொல்லர்கள் மேற்கொண்டுள்ளனர் என்பது தெரிகிறது. இவ்வேலினை தரைப்படையினர்கள் எடுத்து போர் புரிவர். இவற்றில், பழையன் என்பான் வெற்றியுடைய வேலையும், அணிகலன் அணிந்த யானையையும் உடைய

சோழமன்னனின் படைத்தலைவன் ஆவான். ஓடக்கோலால் ஆழத்தை அளந்தறியாதக் காவிரிக்கரையினைச் சார்ந்த தோட்டங்களை உடையவன் நீர் நிறைந்த ஓடும் மதகுகளை உடையவன். போர் என்ற ஊர்க்குத்தலைவன் அத்தகையவன் பகைவர் மீது செலுத்திய வேலைப் போல அப்பரத்தையால் பார்க்கப் பெற்றவர் அவள் கண்களால் தைக்கப்பெறுவது தவறாது. என்பதை,

***“பழையன் ஓங்கிய வேல் போல்***
***பிழையல கண், அவள் நோக்கியோர் திறத்தே!’’*** [46]

என்ற வரிகள் புலப்படுத்துகிறது. ‘வேல்’ போன்ற தலைவியின் அவத்தை சித்தரிக்கின்றதை காணமுடிகிறது.

### ஓடக்கோல்

திருச்சிராப்பள்ளியின் ஒரு பகுதியான உறையூர் முற்காலத்தில் சிறப்புடன் விளங்கிற்று என்பதை ஊர் எனப்படுவது உறையூர் என்ற விடத்துப் பிறவும் ஊருண்மை சொல்லி அவற்றுள் எல்லாம் உறையூர் சிறப்புடைமை சொல்லுப என்ற பகுதி மூலம் விளங்குகிறது. இழைகள் அணிந்த பருத்த தோள்களையுடைய ‘ஐயை’ என்பவளின் தந்தை சிறந்த வள்ளன்மை உடைய தித்தன் அம் மன்னனுக்குரிய மழை வளத்தால் உண்டான குவியலான நெல்லை உடைய உறையூரில் ஓடக்கோல் நிலை பெறாத காவிரியாற்று வெள்ளத்தில் நேற்று விரும்பி நீராடினாய். ஓடக்கோல் மூழ்காது இருப்பதால் வெள்ளம் அதிகமாகப் பெருகியது. அவற்றால் செல்வசெழிப்பு ஏற்பட்டு நாட்டில் மக்களின் உயர்வினைக் குறிப்பதாகவும், இது தித்தன் என்ற மன்னனின் ஆட்சியில் நிலவியதாகவும் கூறுவதால் இது புறப்பகுதியாகியது. இதனை,

***“மழைவளம் தரூஉம் மாவண் தித்தன்***
***பிண்ட நெல்லின் உறந்தை ஆங்கண்***
***கழை நிலை பெறா அக் காவிரி நீத்தம்’’*** [47]

என்பதன் மூலம் அறியலாம் முட்கள் பொருந்திய தண்டை உடைய பிரம்பின் பழையப் புதர்களில் தங்கியிருக்கும் இடங்களை உடைய பல வேற்படை களையுடைய 'மத்தி' என்பவனின் கழாஅர் என்ற ஊரைப் போன்று எம் இளமை கழிந்து பழையதாயிற்று இதனை,

**"பல் வேல் மத்தி கழாஅர் அன்ன எம்**
**இளமை சென்று அவத் தொல்ல தே [48]**

இவ்விரு வரிகளின் மூலம் உறையூரில் 'கழாஅர்' என்ற பழைய ஊர் உவமையாகப் பயின்று வந்துள்ளன. தலைவியின் அழகுக்கு ஊர் எடுத்து உரைக்கப்படுவதை காணமுடிகின்றது.

## வெண்குடை

குதிரைகள் பூட்டப்பட்ட தேரையுடைய வன்பாண்டியன் நெடுஞ்செழியன், தலையாலங்கானம் என்ற ஊரின் அகன்ற இடம் எல்லாம் செந்நிறம் கொள்ள சேரன், சோழன், சினம் மிகுந்த திதியன், போரில் வல்ல, யானைகளையுடையப் பொன்னணி அணிந்த எழினி, பன்னாடையால் அரிக்கப்பெற்ற கள்ளையுடைய எழுமையூரின் தலைவன், தேன் மணம் கமழும் மார்பிடத்தே பூசியுலர்ந்த சந்தனத்தையுடைய இருங்கோ வேண்மான் நன்கு அமைந்தத் தேரையுடைய பொருநன் என்று கூறப்படும் எழுவர் அதுவரை பெற்றிருந்த வெற்றிப் புகழ் யாவும் அழியும் படி ஒரு நாளிலேயே அவர்களின் முரசுகளுடன் வெண்குடைகளைப் பற்றிக் கொண்டான் அதனால் தனது வெற்றிப் புகழ் எங்கும் பரவி மறக்கலி வேள்வி செய்தான். போர் வீரர் ஒலியை விட அலர் பெரிது, இதனை,

**"கொய் சுவல் பரவிக் கொடித் தேர்ச்சிசெழியன்**
**ஆலங்கானத்து அகன் தலை சிவப்ப**
**சேரல், செம்பியன் சினம் கெழுதிதியன்'' [49]**

என்னும் வரிகள் புலப்படுத்துகின்றன.இவ்வெண்குடையைப் போன்று அலர் ஊரெங்கும் பரவியுள்ளது என கூறுகின்றனர்.

**வாட்படை**

*பகைவரின் யானைகளைக் கொண்ட அரிய போரினைச் சிதைந்திடக் கொல்லும் ஒளிரும் வாட்படையை உடைய வெற்றி பொருந்திய செழியனின் நெற்குவியலையுடைய அள்ளூர் போன்று எனது நலம் உள்ளது என கூறுகிறாள் பரத்தை இதனை,*

> ***"ஒன்று வாட் தானைக் கொற்றச்செழியன்***
> ***பிண்ட நெல்லின் அள்ளூர் அன்னஎன்''*** [50]

*என்னும் பாடல் வரிகள் புலப்படுத்துவதை அறியமுடிகிறது. நெல் குவிந்தால் வளம் பெறும் அலர் குவிந்தால் மணம் ஏற்படும் என்பதான கருத்து செழியனின் வாட்படையோடு ஒப்பிடுவதால் புறமாயிற்று.*

**மதுரைபோர்**

*நீண்ட தேரையும் அணியை அணிந்த யானையையும் உடையவன் பாண்டியன் பழையன் மாறன் ஆவான். அவனை மாளிகைகள் மிக்க தெருக்களையுடைய மதுரையிலேயே மிக்க படையுடன் வேற்றுப்புலத்தில் போர் செய்ய வந்து தங்கியிருந்த கிள்ளிவளவன் நல்ல போரில் சாய்த்தான், அவனுடைய விரைந்த செலவையுடைய குதிரைகளுடன் ஆண் யானைகள் பலவற்றையும் பற்றிக் கொண்டு பகை மன்னரின் ஊரைக் கவர்ந்து கொள்ள, கோதை மார்பன் என்றுச் சேர மன்னன் மகிழ்ச்சி அடைந்தான், அவன் மகிழ்ச்சியை விட நின் பரத்தையார் பெரிதாய் மகிழ்ந்தாள். இதனை,*

> ***"இழையணி யானைப் பழையன் மாறன்***
> ***மாட மலி மறுகின் கூடல் ஆங்கண்***
> ***வெள்ளத் தானையோடு வேறு புலத்து இறுத்த***
> ***கிள்ளிவளவன் நல் அமர் சா அய்***
> ***கடும் பரிப் புரவியொடு களிறு பல வவ்வி***
> ***ஏதில் மன்னர் ஊர் கொள***
> ***கோதை மார்பன் உவகையின் பெரிதே''*** [51]

*என்னும் பாடல் மூலம் அறியலாம். இங்கு பரத்தையரின் மகிழ்ச்சிக்கு சேர மன்னனின் மகிழ்ச்சி உவமிக்கப்பட்டுள்ளது என்பது புலனாகிறது.*

### முள்ளூர்

பெரிய புகழை உடைய முள்ளூர்ப் போர்க்களத்தில் ஆசிரியர்கள் நெருங்கியப் புல எண்ணிக்கையில் இருந்தவர்கள், ஒள்ளிய வாளாயுதத்தையுடைய மலையமான் திருமுடிக்காரியின் ஒரு வேற்படைக்கு ஆற்றாது தோற்றோடினர் அது போல நம் பன்மை என்ன செய்ய முடியும்? அழிந்து பயனில்லாது போகும் எனப் பரத்தையர் புலம்புவதாக அமைகின்றன. இதனை,

**"ஆசியர் துவன்றிய பேர் இசை முள்ளூர்**
**பலர் உடன் கழிக்க ஒன்வாள் மலையனது''**[52]

என்ற பாடல் வரிகள் புலப்படுத்துகின்றன. இவற்றினைப்போன்று மற்றொரு பாடலில் தோழிப் பொய்கையில் வாளை மீன் வாள்போல் பிறழும், அப்பொய்கையிலுள்ள நீர்நாய் நாளும் இடையறாத துயிலை ஏற்கும் அவ்வாறாய் பொய்கைகள் உள்ள ஊர் கோயில் வெண்ணி, அதன் அரசன் கை வண்மையுடைய கிள்ளிவளவன், அவ்வூரைச் சுற்றியுள்ள வயலில் வெள்ளையான ஆம்பல் மலர் நிரம்பியிருக்கும் அம்மலரின் அழகிய நெளிவையுடையத் தழையுடைய மெல்லிதாய் அல்குலில் அழகுபெற அணிந்து விழாவுக்கு செல்வதை,

**"பொய்கை நீர்நாயம் வைகுதுயில் ஏற்கும்**
**கை வண் கிள்ளி வெண்ணி சூழ்ந்த''** [53]

என்னும் பாடல் வரிகளின் மூலம் புலனாகிறது.

### மாந்தை நகர்

சங்க காலத்தில் மாந்தை என்னும் நகரம் சிறப்பு வாய்ந்து காணப்பட்டுள்ளது. இது சேரன் செங்குட்டுவனின் தலை நகரமாக விளங்கியுள்ளது. மாந்தரஞ் சேரல் இரும்பொறை என்னும் பெயர் இவனுடைய முன்னோன் இணைத்து இந்நகரை அவனுடைய பெயருக்கு அடைமொழியாகவும் வைத்துள்ளனர். இந்நகர் வளர்ச்சி பெற்று இருந்துள்ளதை,

**"குட்டுவன் மாந்தை அன்னனம்**

**குழை விளங்காய் றுதற் கிழவனுமவனே''** [54]

என்னும் பாடல் விளக்குகின்றது. அதாவது, புலவர் இந்நகர் வளர்ச்சி பெற்று இருந்துள்ளதை உவமையாக்கியுள்ளார். தலைவனின் நுதலுக்கு ஒப்பாக்கி கூறியுள்ளார். இந்தக் கிழவன் மருத நிலத்து தலைவன் ஆவான். இவ்வாறாகச் சங்க பனுவலில் அகப்புற செய்திகள் ஒன்றையொன்று இயைந்து நின்று உறவுடையனாவாக காட்சிப்படுத்தியுள்ளனர். ஆகவே அகமும், மறமும் உறவுடையனவே ஆகும்.

## புற–அக–உறவு

வீரம் நிலவியுள்ள நாட்டிலேதான் மனிதனது காதல் வாழ்க்கை சிறப்புறும். ஒரு நாடு மாட்சியைப் பெற்று விளங்கவேண்டுமாயின், அந்நாட்டு மக்களுடன் பலர் மறவராயிருத்தல் வேண்டும். அங்ஙனம் இருத்தற்கு அவர்க்குப் போர்ப்பயிற்சி இன்றியமையாதது. ஆதலின் பண்டைத் தமிழர் அதனை ஒரு கலையாகவே வளர்த்து வந்தனர் என்பது தொல்காப்பியப் புறத்திணை இயலால் அறியலாம். பண்டைத் தமிழர் போரில் அற நெறியைக் கையாண்டனர். ஒரு நாட்டின் மீது படையெடுக்க விரும்பிய அரசர் முதலில் பகைவனது நாட்டிலுள்ள ஆனிரைகளைக் கவர்வான். இம்முயற்சியின் போது பகை வீரர் வெட்சி வீரரின் முயற்சியைத் தடுப்பர். இங்ஙனம் தடுக்கும் முயற்சி கரந்தைத் திணை எனப்படும். வெட்சித் திணையார், வெட்சி மலர்களைச் சூடுவர்.

ஒரு நாட்டின் மீது நடைபெறும் படையெடுப்பு எதிர்த்து நிற்றல் காஞ்சித் திணை எனப்படும். கோட்டையை முற்றுகையிடல் உழிஞைத் திணை எனப்படும். கோட்டையுள் இருந்து எதிர்த்தல் நொச்சித்திணை எனப்படும். கோட்டைக் அப்பால் வெட்ட வெளியில் நடைபெறும் கடும்போர் தும்பைத் திணை எனப்படும். போரில் வெற்றி பெறுதல் வாகைத்திணை எனப்படும். ஒவ்வொரு திணைச் செயலிலும் ஈடுபட்ட வீரர்கள் அத்திணைக்குரிய மலர்களை அணிந்து கொள்ளுதல் மரபு

கூறப்பெற்ற ஒவ்வொரு திணைப் போரும் பல படிகளையுடையது. அப்படிகள் துறைகள் எனப்படும். இப்போர்களைப் பற்றிய விளக்கம் தொல்காப்பியம் - புறத்திணை இயலில் தெளிவாகத் தரப்பட்டுள்ளது. இக்கலை வளர்ச்சி தொல்காப்பியர் காலத்தில் திடீரென ஏற்பட்டிருத்தல் இயலாது – தொல் வாழையடி வளர்ந்து வந்த போர்க்கலையின் விரிவே தொல்காப்பியத்தில் காணப்படுகிறது.

புறப்பாடல்களில் அகச்செய்தி இடையிடையே ஊடாடிக் காணப்படுகின்றது. புறத்திணைப் பாடல்களை எல்லாம் அவற்றில் வரும் பாட்டுடைத் தலைவனின் பெயரை நீக்கிப் பார்த்தால் அவை அகப்பாடலின் தன்மைப் பெறுவதைக் காணமுடிகிறது. ஒவ்வொரு புறப்பாடல்களின் கீழே தரப்பட்டுள்ள அடிக்குறிப்புகளான திணைத் துறைகளையெல்லாம் நீக்கினால் அவை அகப்பாடலின் தன்மையுடன் காணப்படுகிறது. மருதத்திணையின் புறத்திணையானது உழிஞையாகும். இத்துறையில் அமைந்த பாடல்கள் புறநானூற்றில் இல்லை.

ஆனால் மற்றொரு புறநூலான பதிற்றுப்பத்தில் மட்டும் ஒரு பாடல் இடம் பெற்றுள்ளன. அது எட்டாம் பத்தாக இடம்பெற்றுள்ள 77வது செய்யுளாகும். இதன் ஆசிரியர் அரிசில் கிழார் ஆவார். இவர் தகடூர் எறிந்த பெருஞ்சேரலாரும் பொறையைப் பற்றி பாடியுள்ளார். இப்பாடலாவன,

***“எனைப்பெரும் படையனோ சினப்போர்ப் பொறையன்***
***என்றனி ராயி னாறு சொல் வம்பலிர்***
***மன்பதை பெயர வரசுகளத் தொழியக்***
***கொன்றுதோ ளோச்சிய வென்றாடு துணங்கை***
***மீபிணத் துருண்ட தேயா வாழியற்***
***பண்ணமை தேரு மாவு மாக்களும்***
***எண்ணற் கருமையி ணெண்ணின்றோ விலனே***
***கந்துகோ ளீயாது காழ்பல முருக்கி***

***உகக்கும் பருந்தி னிலத்து நிழல் சாடிச்***
***சேண்பரண் முரம்பி னீர்ம் படைக் கொங்கர்***
***ஆபரந் தன்னபல் செலவின்***
***யானைகாண் பலவன் றானை யானே''*** [55]

*இப்பாடலில் உழிஞை அரவம் என்னும் துறையால் அமைந்துள்ளது. இப்புறத்திணைப் பாடலில் வரும் அகச்செய்தியாவது,*

*இவ்வழியே செல்லும் புதியவர்களே சினத்துடன் போரை வெற்றியுண்டாகச் செய்யும் பெருஞ்சேரலாரும் பொறையின் எத்துணைப் பெரிய படையையுடையவனோ என்று கேட்கின்றீராயின் கூறுகிறேன் கேளுங்கள்.*

*பகைப் படையிலுள்ள வீரர் அழிந்தோடவும், பகையரசர் போர்க்களத்தே பட்டு வீழவும், அப்பகைவரைக் கொன்று தோளை உயர்த்திக் கைவீசி ஆடிய வெற்றியோடு துணங்கையினை உடையராய்ப் பட்டு வீழ்ந்த அவர் பிணத்தின் மீது கருகிச் செல்லுதற்கு ஏற்பப் பண்ணுதலமைந்த தேர்களும், குதிரைகளும், காலாட்களும் எண்ண முடியாத அளவில் அமைந்திருத்தலால் எண்ண முடியவில்லை என வருகிறது. இவற்றில் வரும் அகச்செய்தி என்னவென்றால் ஆணும், பெண்ணும் சேர்ந்து ஆடும் துணங்கைக் கூத்தாகும். பெரும்பாலும் இத்துணங்கைக் கூத்தில் மகளிர் பங்குபெறுவர் "போர்க் கொடுமையால்'' நெடுஞ்செழியனின் பகைப்புல மகளிர் தாம் வழக்கமாக ஆடும் துணங்கையை மறந்திருந்தனராம். என,*

***"இலங்கு வளை மடங்கையர்***
***துணங்கை கீர்த்தழூஉ மறப்ப''*** [56]

*மேற்கண்ட வரிகள் புலப்படுத்துகிறது. இவற்றிலிருந்து பகை மன்னரின் பெண்கள் துணங்கைக் கூத்து மகிழ்ச்சியால் ஆடுவதைக் குறிப்பதால் இது அகச்செய்தியாகும். இவற்றின் மூலம் புறப்பாடலில் அகச்செய்தி பயின்றுள்ளதைக் காண முடிகிறது.*

“இவற்றின் மரபு தொடர்ச்சியாகப் பிற்காலத்தில் ‘காப்பியம்’ என்ற பேரிலக்கியம் தோன்ற வழி அமைத்துள்ளதை ந. காசிராஜனும் கூறியுள்ளார்.’’[57] அகத்தையும், புறத்தையும் இணைக்கும் மரபு இலக்கிய மரபாக ஏற்கப்படவில்லை. ஆனால் பரணர், மாமூலனார் போன்ற புலவர்களின் அகப்பாடல்களில் புறச்செய்திகளை இணைக்கும் மரபு தோன்றியது. இவற்றினைப் போலவே புறப்பாடல்களிலும் அகச் செய்தி இடம்பெற்றும் உள்ளதைக் மேற்கண்ட மருதத்திணையின் புறனான உழிஞை பாடலில் பயின்றுள்ளது இவ்வாய்வில் தெளியப்படுகிறது.

## தொகுப்புரை

திணை இலக்கியமும் அகப்புற வெளிப்பாடும் என்ற இவ்வியலில் கொடுக்கப்பட்டுள்ள செய்திகளாவன.

- ❖ சங்க இலக்கிய அகத்திணைப் பாடல்களின் எண்ணிக்கையும், அவைபதிப்பிக்கப்பட்ட காலமும் பதிப்பியல் சிந்தனைகள்' என்ற நூலின் மேற்கோளின் படி அறிமுகப்படுத்தப்பட்டுள்ளது.

- ❖ சங்க பனுவல்களை விளக்க அவற்றின் திணை நிலை அமைப்புகளை ஒவ்வொரு பனுவல்களும் தனித்தனியாகப் பயின்று வந்துள்ள முறைமை விளக்கப்பட்டுள்ளது.

- ❖ ஐங்குறுநூற்றின் திணை நிலையமைப்பு மருதத்திணையை முதலாவதாக வைத்துத் தொகுக்கப்பட்ட தொகை நூலாகும். அது ஏன் என்ற வினாவிற்கு விடைக் காணப்பட்டுள்ளது.

- ❖ தொடர்நிலைச் செய்யுள்களை தொல்காப்பியர் 'வனப்பு' என்று கூறுகின்றார். இது கலித்தொகைக்கு மட்டுமே பொருந்துவதைச் சுட்டி உரைக்கப்பட்டுள்ளன.

- ❖ குறிஞ்சி, முல்லை, பாலை, மருதம், நெய்தல் என்னும் தொல்காப்பியரின் அமைப்பு நிலையில் திணைத்துறைகள் உள்ள மாறுபாடுகளை எடுத்துக் காட்டப்பட்டுள்ளது.

- ❖ குறுந்தொகைத் திணைநிலையமைப்புகள், நற்றிணை மற்றும் அகநானூறு ஆகியவற்றின் திணை நிலையமைப்புகள் ஆகியன ஆராயப்பட்டுள்ளன.

- ❖ தொல்காப்பியரின் திணைக்கொள்கைகளை விளக்கி அகம், புறம் ஆகியவற்றிற்கு உரையாசிரியர்கள் தரும் விளக்கங்கள் அறிமுகப் படுத்தப்பட்டுள்ளன.

- ❖ மருதத்திணையின் தோற்றம் இயற்கை மாறுபாடுகளால் ஏற்பட்ட விளைவு என்பதையும், நாகரிக நிலையை ஏற்படுத்தும் போது வளம் மிக்கதாக மாறியுள்ளதையும் விளக்கப்பட்டுள்ளது.

- ❖ நிலம் கலந்து உறவுடையனவாக இருந்துள்ளமையைக் காட்டுவதாக மருதத்திணையும் முல்லைத் திணையும் காணமுடிகிறது.

- ❖ மருத நிலத்தில் உள்ள நெல் என்ற தானியம், நெய்தல் நில உப்புடன் சமமாக கருதப்பட்டு, இதனைப் பண்டமாற்று முறைக்கு வழி வகுத்துள்ளமையும் ஆராயப்பட்டுள்ளது.

- ❖ மருத நில இயற்கை வர்ணனையும், காட்சி ஒப்புமையும் ஒருங்குடன் காணப்பட்டுள்ளது. இது உவமைகளாக நெய்தற் பாடலில் இது அதிகமாக சித்தரிக்கப்பட்டுள்ளமையைக் அறியமுடிகிறது.

- ❖ மருதத்தின் புறத்திணையானது உழிஞையாகும். அவற்றில் வரும் முரசு, வேல், வெண்குடை, ஓடக்கோல், வாள்ப்படை, முள்ளூர், மாந்தை நகர், மதுரைப்போர் ஆகியன புறச் செய்திகளாக இடம்பெற்ற பாங்கினை காண முடிகிறது.

- ❖ புறப்பாடல்களான பதிற்றுப்பத்து நூலில் இடம் பெற்ற அகச் செய்திகளைச் சுட்டி அதன் அடிக்குறிப்பினை நீக்கினால் அது அகப்பாடலின் கருத்தமைவினைப் பெறுவதை விளக்கப்பட்டுள்ளது.

# அடிக்குறிப்புகள்

1. இ. சுந்தரமூர்த்தி, பதிப்பியல் சிந்தனை, ப.74
2. பொ.வே. சோமசுந்தரனார் (உ.ஆ) கழகவெளியீடு, ஐங்குறுநூறு. ப.11
3. மேலது., ப.12
4. தொல் (பொருள்) செய்யுளியல், நூ.1
5. மேலது., அகத்.1
6. மேலது., அகத்.6
7. பொ.வே. சோமசுந்தரனார் (உ.ஆ) கழகவெளியீடு, ஐங்குறுநூறு. ப.32
8. ச.வே. சுப்ரமணியன், தமிழலக்கிய வரலாறு, ப.56
9. பொ.வே. சோமசுந்தரனார் (உ.ஆ), கழகவெளியீடு, குறுந்.ப.6
10. ச.வே.சுப்ரமணியன், தமிழலக்கிய வரலாறு, ப.50
11. மேலது., ப.109
12. தமிழ்ப்பேரகராதி, சென்னைப் பல்கலைக்கழகம், ப.1874
13. தொல்காப்பியம் (பொருள்), அகத்.1
14. மேலது., புறத்.1
15. மேலது., புறத்.1
16. மேலது., புறத்.4
17. சிலம்பு, காடுகாண்காதை, பக்.64-66
18. ஆ. சிவலிங்கனார், உரைவளம் (ப.ஆ), ப.25
19. அகம்.94
20. மேலது., 284
21. மேலது., 84
22. மேலது., 226
23. நற்றிணை, 311
24. அகம். 140
25. குறுந்.269

26. நற்றிணை, 254
27. மேலது.,331
28. அகம். 30
29. தொல்காப்பியம் (பொருள்), அகத்.14
30. மேலது., அகத் 15
31. குறுந்.296
32. அகம்.40
33. மேலது., 100
34. நற்றிணை. 4
35. மேலது., 275
36. நற்றிணை, 35
37. குறுந்.117
38. நற்றிணை.275
39. குறுந். 309
40. இளம்பூரணம் (உ.ஆ), தொல்காப்பியம் (பொருள்). புறத்.66
41. மேலது., நச்சிணார்க்கினியர், நூ.64,
42. அ. சிவலிங்கனார், தொல் (பொருள்.), உரைவளம், நச்சி.ப.12
43. மேலது., நச்சி. புறத்.1
44. வ.சுப.மாணிக்கனார், தமிழ்க்காதல், பக்.1
45. கு.வெ.பாலசுப்ரமணியன், சங்க இலக்கிய கொள்கை, ப.409
46. அகம்.246 (8-4)
47. மேலது., 328 (12-13)
48. மேலது.,6 (3-5)
49. மேலது.,6 (20-21)
50. மேலது.,36 (13-15)

*51. மேலது.,346 (19-25)*

*52. நற்றிணை -170*

*53. மேலது., 390*

*54. குறுந்.33*

*55. பதிற்றுப்பத்து, 77*

*56. மதுரைக்காஞ்சி, (159-160)*

*57. ந. காசிராஜன், காப்பியத் தோற்றமும் வளர்ச்சியும், ப. 25*

# இயல்–3

## சமூக உறவுகள்

இயற்கை படைப்பில் மனிதனை பிற உயிரிகளிடமிருந்து வேறுபடுத்திக் காட்டுவது அவனின் அறிவு மற்றும் செயல்பாடுகளுமாகும். அவன் உயிரிகளைச் சார்ந்து வாழ வேண்டியவனாகிறான். இவ்வாறு இணைந்து வாழ்வதற்குக் குழு, சமூகம் என்ற அமைப்பினை ஏற்படுத்திக் கொண்டு இணைந்து வாழ்ந்து வருவதை கற்காலம் முதல் இக்காலம் வரை காணமுடிகிறது. சமூகம் என்பது மிகப்பெரிய சமூகக்குழு. இது குறிப்பிட்ட எல்லைக்குள் இருக்கும். தானே வளரும் சுதந்திர ஆற்றலும் தனக்கென்று ஒரு குறிப்பிட்ட பண்பாட்டைக் கொண்டது. தனக்கு வேண்டியவற்றை நிறைவு செய்துக்கொள்ள முயலும் ஒரு மனிதக்குழுவாகும்.

இத்தகைய சமூகம் மனிதனின் வாழ்க்கை முறையில் சமூக உறவு ஏற்பட்டு மனிதனைப் பிணைக்கும் பாலமாக உள்ளது. அவ்வாறு மனிதன் இணைந்து வாழும் குழு சமூக உறவுகளாகும். சங்க கால மக்களின் வாழ்வு திணை உறவு வாழ்வியலாகும். ஒவ்வொரு திணைக்குழு மக்களும் ஒருவருக்கொருவர் கூடி இனக்குழுவினை ஏற்படுத்திக் கொண்டுள்ளனர். இவ்வினக்குழுவின் மூலம் சமூக உறவுகள் ஏற்பட்டு நாகரிகமும் பண்பாடும் உயர்ந்த நிலைக்கு சென்றுள்ளது. அவர்களின் செம்மாந்த வாழ்வியல் முறைகளை சங்க பனுவல்கள் எடுத்துரைக்கின்றன. அந்த வகையில் நன்கு உழவு செய்யப்பட்ட நன்செய் மற்றும் புன்செய் நிலங்களில் வேளாண்மைத் தொழில் ஏற்பட்டது. அவ்வாறு மேம்பட்ட நிலமாக மருத நிலம் காணப்பட்டது.

அந்நிலத்தில் வாழும் மக்களின் வாழ்வியல் மற்ற நிலத்தில் வாழும் மக்களுடன் சமூக உறவுகளை ஏற்படுத்திக் கொண்டுள்ளதை இவ்வியல் முன்னெடுத்து செல்கிறது. அந்த வகையில் மருத நிலத்தில் காணலாகும் தலைவன், தலைவி, தோழி, செவிலி, நற்றாய் பாங்கன் ஆகியவர்களின்

அமைவிட நிலைப்பாட்டினையும், அங்கு நிலவிய தலைவன், தலைவி உறவு, மன்னன் மக்கள் உறவு, தலைவி, தோழி உறவு, தலைவன் தோழி உறவு, தலைவன் பாங்கன் உறவு, தலைவி பாங்கன் உறவு, தலைவன் பரத்தையர் உறவு, மன்னன் கலைஞர்கள் உறவு, வாணிக உறவு, மாற்றுத்திறனாளி உறவு என்பனவற்றையும் விளக்க முற்படுகிறது.

## தலைவன் கூற்று

அகத்திணை மாந்தருள் தலைவனுக்கு எனச் சிறப்பிடம் உள்ளது. அவனது குறிக்கோள் தலைவியின் இன்பவாழ்வாகும். அவனுக்கு தலைவியின் இன்ப நினைவு ஊற்றாகும். தலைவி உடன் இருக்கும் போதும் அவனது மனம் முழுவதும் தலைவியின் நினைவே நிறைந்திருக்கும். பிரிந்த தலைவியின் துயர் எண்ணி அவன் வருத்தம் கொள்ளுதல் அவனின் இயல்பாகும். "தலைவியைச் சந்திக்க அவன் கொள்ளும் விருப்பம், கார் வரும் முன் தலைவியோடு இன்புற விரையும் அவன் வேகமும், தலைவியைக் காணும் வாய்ப்பும் நெருங்கிய போது அவன் கொள்ளும் மகிழ்வும் அவனது கூற்று முழுவதும் பரந்துப்பட்டு ஒலிக்கின்றன''[1] என ஆ. இராமகிருட்டினன் குறிக்கிறார். இதன்மூலம் தலைவனின் கூற்றுப்பாடல்களின் தன்மையை தெளிய முடிகிறது.

"ஒன்றாத் தமரின் பருவத்துஞ் சுரத்தும் ஒன்றிய மொழியோடு வலிப்பினும் விடுப்பினும் என்பது முதல், பிரிந்தோள் குறுகி இரத்தலும் தெளித்தலும் ஈறாக பதினேழு நிலைகளின் தலைவன் கூற்று நிகழ்கின்றது என தொல்காப்பியர் அகத்திணையியலில் கூறியுள்ளார். இவற்றில் களவு, உடன்போக்கு, கற்பு, பரத்தை, போன்ற பல நிலைகளில் தலைவனின் கூற்று நிகழ்த்தியுள்ளதை எடுத்துரைக்கிறார்.''[2] இவ்வகத்திணை தலைவனின் கூற்றாக மருதத்திணையில் தலைவனுக்கு முதன்மை கூற்றாக சித்தரிக்கப் பட்டுள்ளன. அத்தரவுகளாவன,

- ❖ குறுந்தொகை மருதத்திணையில் தலைவன் கூற்றாக 1, 19 ஆகிய பாடல்களில் காணலாம். இவ்விரு பாடலும் தலைவியுடனான ஊடலை வெளிப்படுத்தும் விதமாக இருக்கின்றது.

- நற்றிணை மருதப்பாடல்களில் தலைவனின் கூற்றாக 80, 120, 250, 370 ஆகிய பாடல்களில் காணலாம். இப்பாடலிலும் தலைவியை ஊடலுணர்த்துதல் தொடர்பாக அமைந்துள்ளது.

- அகநானூறு மருதத்திணையில் 86, 126, 136 ஆகிய பாடல்களிலும் தலைவியை ஊடலுணர்த்துதல் எனும் தலைவன் கூற்றாக பயின்றுள்ளது.

- ஐங்குறுநூறு மருதச்செய்யுளில் மூன்று நிலைகளில் காணப் பெறுகிறது.

  - தலைவியை ஊடலுணர்த்துதல் என்ற கூற்றாக 72, 73, 74, 97, 99
  - வரைவிடை வைத்துப் பிரிந்தவன் திரும்புவதாக 94 ஆம் பாடல் உரைக்கிறது.
  - வரைவு பற்றிய செய்யுளாக 92 ஆம் செய்யுள் அமைந்துள்ளது.

- மருதக்கலியில் தலைவனின் கூற்றாக 81, 92 ஆகிய பாடல்களில் தலைவனின் நிலையைக் காட்டுவதாக அமைந்துள்ளது.
- பரிபாடலில் தலைவன் கூற்று இல்லை.

## தோழிக்கூற்று

களவு, கற்பு எனும் இருவகைக்கோளிலும் பெரும்பங்கு ஏற்பவள் தோழியாவாள். அகத்திணையில் பிற மாந்தர்கள் இடம் பெறும் சூழல்களில் முதன்மைப் பாத்திரமாக இருக்கிறாள். களவு காலத்தில் தலைவனை வரைவிற்கு ஆற்றுப்படுத்துவது இவளின் நோக்கமாகும். களவையும் கற்பையும் இணைத்து நிற்கும் அறத்தொடு நிலைத்துறையிலும் பங்காற்றுகின்றாள். களவு கற்பாக மாறும் சூழல் தெளிவில்லாத போது தோன்றும் உடன்போக்குத்துறை ஆகியவற்றில் கருவாக நிற்கிறாள்.

"தலைவரும் விழும நிலையெடுத்துரைத்தல் என்பது முதல் நோய் மிகப்பெருகித்தன் நெஞ்சுகலுழ்ந்தோளை அழிந்து களையென மொழிந்தது கூறி வன்புறை நெருங்கி வந்ததன் திறத்தொடு என்பது ஈறாக"[3] ஆறு

நிலைகளில் தோழிக் கூற்று நிகழ்த்துவதாக தொல்காப்பியர் கூறுகிறார். தலைவன் தலைவியின் அன்பு வாழ்க்கை அல்லது காதல் வாழ்க்கைக்குத் துணையாவதும், தேவையான போது இடித்துரைக்கின்ற தன்மையும் தோழிக்கு உண்டு. இங்கு மருதத்திணையில் காணலாகும் தோழியானவள் மேலே குறிப்பிடப்படும் அகத்திணை மரபிற்கு ஏற்ப தனித்தன்மையுடன் திகழ்வதைக் காணமுடிகிறது. மருதத்திணைப் பாடல்களில் பெரும்பாலும் பரத்தையர் பிரிவில் செல்லும் தலைவனின் திறத்தைச் சுட்டிக்காட்டி நல்வழிப் படுத்துவதாகவும், அடுத்து தலைவியின் நலனில் அக்கறை உடையவளாகவும், இருப்பது பரவலாகக் கிடைக்கின்ற செய்தியாகும். மருதத்திணையில் காணப்பெறும் தோழிக்கூற்றுக்களாவன,

- குறுந்தொகை மருதப்பாடல்களில் தோழிக்கூற்றாக 22 பாடல்கள் உள்ளன. அவை,
    - தலைவனின் தூதை ஏற்றலும் மறுத்தலும் எனும் துறையிலமைந்த பாடல்களாவன, குறுந்-10, 45, 61, 88, 89, 127, 150, 196, 238, 258, 295, 35 ஆகியவையாகும்.
    - வரைவு மலிதல் என்னும் துறையில் அமைந்ததாக 34 ஆம் பாடல் வந்துள்ளது.
    - வரைவு நீட்டித்த போது என்னும் துறையிலமைந்த பாடலாக‘ குறுந். 53, 367 ஆகியவை உள்ளது.
    - குறுந்.393 ஆம் பாடல் வரைவு கடாதல் என்னும் துறையில் அமைந்துள்ளது.
    - குறுந்.113 ஆம் பாடல் குறியிடம் பெயர்தல் என்னும் துறையில் அமைந்துள்ளது.
    - தலைவனின் புணர்ச்சி விளம்பல் என்னும் துறையிலமைந்த பாடலாக 178 ஆம் பாடல் இடம் பெற்றுள்ளது.
    - தலைவன் திரும்பும்வரை உணர்த்தல் என்னும் துறையிலமைந்த பாடலாக குறுந்.175 ஆம் பாடலுள்ளது.

இவ்வாறாக தலைவன் தலைவியின் உறவுக்காகத் தோழிக் கூற்று நிகழ்த்துவதாக குறுந்தொகை மருதத்திணைப் பாடல்கள் மொத்தம் 22 பாடல்கள் உள்ளன.

- நற்றிணையில் இடம்பெறும் தோழிக்கூற்று இரண்டு துறைகள் மட்டுமே உள்ளன. அவை,
  - நற்றிணையில் 13 பாடல்கள் வாயில் தேர்தலும், மறுத்தலும் என்னும் துறையின் பாற் உற்றன. நற்றிணை 30, 50, 90, 170, 180, 200, 210, 230, 300, 310, 330, 360, 380 ஆகியனவாகும்.
  - நற்றிணை 60 ஆம் பாடல் மருதத்தலைவன் சிறைப்புறமாக செல்ல தோழிக் கூற்றாக அமைந்துள்ளச் செய்யுள்ளாகும். இற்செறிப் புணர்த்தல் என்னும் துறையும் இவற்றின் பாற்படும்.
- அகநானூறு மருதப்பாடல்களில் தோழிக் கூற்றாக 17 செய்யுள்கள் உள்ளன. அவை,
  - வாயில் நேர்தலும், வாயில் மறுத்தலும் என்னும் துறையிலமைந்த 15 பாடல்கள் உள்ளன. அவை அகம், 46, 96, 116, 176, 226, 246, 236, 296, 306, 316, 346, 356, 366, 386 ஆகியனவாகும்.
  - அகம் 286 – ஆம் பாடலில் தலைவனின் பொய்ச்சூளுரைப் பற்றியதாகும்.
  - அகம் 156 – ஆம் பாடலில் வரைவு கடாதல் என்னும் துறையில் அமைந்துள்ளது.
- ஐங்குறுநூற்று மருதப்பாடலில் 40 - பாக்கள் தோழிக்கூற்றாக அமைந்துள்ளது. அவை,
  - தலைவனின் பரத்தையர் ஒழுக்கம் பற்றியதாக 24 – பாடல்கள் உள்ளன. ஐங்குறுநூறு -1, 5, 21, 24, 25, 27, 44, 46, 50, 52, 54, 57, 59, 75, 76, 84, 98 ஆகியனவாகும்.

- ஐங்குறுநூற்று 16, 26, 58, 60,91, 93, 100 ஆகிய மருதப்பாடல்கள் தலைவனின் ஒழுக்கமின்மையை வருந்திக் கூறல் என்னும் துறையிலமைந்த தோழிக்கூற்றாகும்.
- பரத்தையின் தோழிக்கூற்றாக ஐங்-79 ஆம் பாடல் அமைந்துள்ளது.
- ஐங்குறுநூற்று 28, 29, 30 ஆகிய பாடல்கள் அறத்தொடு நிற்றல் என்னும் துறையில் தோழிக்கூற்றாக உள்ளது.
- வரைவு நீட்டித்தல் என்னும் துறையில் ஐங்குறுநூற்றில் 5 பாடல்கள் உள்ளன. ஐங். 6, 7, 8, 9 10 ஆகியனவாகும்.

❖ பரிபாடலில் மருதப்பாடல் 4 உள்ளன. அவற்றில் தோழி கூற்று நிகழ்த்துகிறான். அவை 7, 11, 12, 16 ஆகியனவாகும்.

**தலைவிக்கூற்று**

அகத்திணை மாந்தர்களின் வட்டத்திற்கு மையப்புள்ளி தலைவி ஆவாள். குறிஞ்சி, முல்லை, மருதம், பாலை, நெய்தல் ஆகிய ஐந்திணைகளில் உரிப்பொருள்களாகிய, புணர்தல், இருத்தல், ஊடல், இரங்கல், பிரிதல் ஆகிய ஐவகை உணர்வுகளும் தலைவியைச் சார்ந்தே இயங்கி வருகின்றன. 1053 நூற்பா இருவகைக் குறியும் பிழைப்பாகிய இடத்தும், காணா வகையில் பொழுது நனி இருப்பினும் தலைவிக்கு நிகழும் கூற்று குறிக்கப்படுகிறது.

"இது காலப் பழமையால் ஏடு பெயர்த்தெழுதுவோர் விட்டுவிட்டனர் என இளம்பூரணர் விளக்கம் தருகிறார். இதனை,

**எஞ்சி யோர்க்கும் எஞ்சுதல் இலவே''[4]**

இவற்றில் இதுகாறும் பிரிவின் கண் கூறியதற்கு உரியர். "பலருள்ளும் நற்றாயும், செவிலியும், கண்டோரும், தோழியும் தலைமகனும் கூறுங் கூற்றுக் கூறினார். இஃது அவரையொழிந்த தலைமகற்கும், பாங்கற்கும், பார்பார்க்கும், பாணர்க்கும், கூத்தரிக்கும், உடையோர்க்கும், கூற்று நிகழுமாறு உணர்த்துதல் நுதலிற்று என கூறப்பட்டுள்ளது என

*இளம்பூரணர் கூறுவர் இதற்கு சோமசுந்தர பாரதியாரின் உரையாவன, அகத்திணைக் கூறாதது ஏன் என்றால் அகத்துறைகளில் கூற்று ஒழிதல் இல்லை எனக்கூறி தலைமகள் கூற்று தனித்துக் கூறப்படாதது சிந்திக்கத்தக்கது. தலைமகள் கூற்று உணர்த்திய சூத்திரம் / காலப் பழமையால் ஏடு பெயர்த்தெழுதுவார் வீழ எழுதினர் எனக் கூறி தலைமகள் கூற்று வரும் பல இடங்களைச்சுட்டி இளம்பூரணர் விளக்கியுள்ளார்.''*[5]

*அதாவது அகத்துறைப் பாட்டுகளில் தலைவி கூறுமிடங்கள் பல படியாகப் பாராட்டப்படுதல் பண்டையப் பாட்டுகளில் உள்ளது. "இருப்பினும் களவியல் 20 ஆம் நூற்பாவில் தலைவி கூற்று நிகழுமிடங்களைத் தொல்காப்பியரே கூறியுள்ளார்.''*[6] *அவற்றுள் சில துறைகளுக்குச் செய்யுள் வருமாறு,*

**"முளிதயிர் பிசைந்த காந்தள் மெல்விரள்**
**கழூவுறு கலிங்கன் கழாஅ துடீஇ''**[7]

**"மன்ற மராத்த பே எழுதிர் கடவுள்**
**கொடியோர்த் தெறூஉ மென்ப''**[8]

*மேற்கண்ட பாடலடிகளை எடுத்துக்காட்டி விளக்குகிறார். இவ்விரு கருத்துக்களையும் நோக்கும் போது மருதத்திணைப் பாடல்களில் வரும் தலைவிக் கூற்று அகத்திணைக் களவியல் செய்யுளுக்கு பொருந்துவதாக உள்ளது என்பது தெளிய வைக்கிறார்.*

*குறுந்தொகையில் தலைவிக் கூற்றாக வரும் 21 – பாடல்கள் உள்ளன. அவற்றுள்,*

- *தலைவன் தூதை ஏற்றலும் மறுத்தலும் என்ற துறைகளில் 9 பாடல்கள் உள்ளன. குறுந்- 33, 50, 91, 98, 202, 203, 231, 271, 293 ஆகியன தலைவிக் கூற்றாக இடம் பெற்றுள்ளன.*

- குறுந்.368 ஆம் பாடல் வரைவு மலிந்தப் போது தலைவிக் கூற்று நிகழ்த்துவதாக உள்ளது.
- குறுந்தொகை மருதப்பாடல் 399- ஆம் பா வரைவு நீட்டித்த விடத்து தலைவிக் கூற்று நிகழ்த்துவதாக உள்ளது.
- பிரிவிடை ஆற்றாமைக் காரணமாக குறுந்.38, 46, 171, 330 ஆகிய தலைவிக் கூற்று நிகழ்த்துவதைக் காணமுடிகிறது.
- குறுந்தொகை 31, 305 – ஆம் மருதத்திணைப் பாடல் அறத்தொடு நிற்றல் எனும் துறையாக கூற்று நிகழ்த்துகிறாள்.
- குறுந்தொகை 157-ஆம் பாடல் பூப்பெய்திய போது தலைவிக் கூற்று நிகழ்த்துவதாக அமைந்துள்ளது.
- தலைவனின் சூளுரையை மறுத்தல் முகமாகத் தலைவியானவள் குறுந்தொகை 169 ஆம் பாடலில் கூற்று நிகழ்த்துகின்றாள்.
- குறுந்தொகை 107 ஆம் பாடலில் காமம் மிக்க கழிபடர் கிளவி சேவல் வடிவில் கூற்று நிகழ்த்துகிறாள்.
- தலைவியின் தோழி இற்பழித்தப் போது இயற்பட மொழிதல் என்னும் துறையால் தலைவிக் கூற்று நிகழ்கிறது.

நற்றிணையில் 7 பாடல்கள் தலைவிக் கூற்றாக அமைந்துள்ளன. அவை,

- நற்றிணை மருதப்பாடல்கள் 20, 260, 280, 340, 350, 390 ஆகிய பாடலில் தலைவிக் கூற்றாக வாயில் நேர்தலும் மறுத்தலும் எனும் துறையில் கூற்று நிகழ்த்துகிறாள்.
- காமம் மிக்க கழிபடர் கிளவியாக, சிறுவெள்ளாங் குருகு வடிவில் தலைவிக்கூற்று நிகழ்த்துவதாக நற்றிணை 70 ஆம் பாடல் உரைக்கிறது.

அகநானூற்றில் 11 பாடல்கள் தலைவிக் கூற்றாக இடம்பெற்றுள்ளன.

- அகநானூற்று மருதத்திணை 6, 16, 26, 36, 56, 66, 146, 196, 206, 236, 266 ஆகியன வாயில் நேர்தலும், வாயில் மறுத்தலும் எனும் துறையின் கீழ் தலைவிக்கூற்றாக பயின்றுள்ளது.

*ஐங்குறுநூறு என்னும் தொகை நூலில் 40 பாடல்கள் தலைவிக் கூற்றாக பயின்றுள்ளது. அவை,*

- *ஐங்குறுநூறு 11, 13, 15, 17, 18, 22, 23, 31, 41, 43, 44, 48, 53, 61, 71 ஆகியன தலைவனின் புறத்தொழுக்கம் பற்றி தலைவி வருந்திக் கூற்று நிகழ்த்துவதாக இடம் பெறுகிறது.*
- *ஐங்குறுநூறு 14, 19, 20, 32, 36 ஆகிய 8 பாடல்களும் தலைவியின் ஆற்றாமை கூறுதல் என்னும் துறையில் அமைந்துள்ளன.*

*கலித்தொகையில் 20 பாடல்கள் தலைவிக் கூற்றாக உள்ளன. அவை,*

- *கலித்தொகை மருதக்கலியில் 73, 77, 93, 95, 98 ஆகிய பாடல்களில் பரத்தையர் பற்றி கூற்று நிகழ்த்துகிறாள் தலைவி.*
- *மருதக்கலியில் 66, 67, 75, 86, 89 ஆகிய பாடல்களில் ஊடலுணர்தல் எனும் துறையின் கீழ் தலைவிக்கூற்று நிகழ்த்துகிறாள்.*
- *கலித்தொகை 76 ஆம் பாடலில் தலைவன் பிரிவை உடம்படல் என்னும் துறையில் தலைவிக் கூற்று நிகழ்த்துகிறாள்.*
- *தன் மகன் மூலம் தன் வருத்தத்தைத் தலைவனுக்கு உணர்த்துதல் என்னும் துறையின் கீழ் கலித்தொகை 82, 82, 85 ஆகிய மருதக்கலிப் பாடல்கள் உள்ளன.*
- *மருதக்கலி 76 ஆம் செய்யுள் களவச்சம் என்னும் துறையில் தலைவிக் கூற்று நிகழ்த்துகிறாள்.*

**பரத்தையர் கூற்று**

*பரத்தையர் என்பவர் "ஆடலும் பாடலும் வல்லராகி, அழகும் இளமையும் காட்டி இன்பமும் பொருளும் வெஃகி ஒருவர் மட்டும் தங்காதார் என தொல்காப்பிய கற்பியலில் இளம்பூரணர் குறிப்பிடுகிறார்."[9]*

*இவ்வாய்வு தரவுகளின்படி மருதத்திணைப் பாடல்களில் பரத்தையர் கூற்றுப்பாடல்கள் 40 உள்ளன. அவையாவன,*

- குறுந்தொகை மருதப்பாடல்களாவன 4 பாக்களில் பரத்தையர் கூற்று நிகழும் இடனாகச் சுட்டப்பட்டுள்ளது. அவை 8, 80, 164, 364 ஆகியனவாகும்.
- நற்றிணை 40, 100, 150, 216, 290, 320, 400 ஆகிய பாடல்களில் பரத்தையர் கூற்று நிகழ்த்துகிறாள்.
- அகநானூற்றில் 76, 106, 166, 186, 216, 276, 336, 376, 396, ஆகிய பாடல்களில் பரத்தையர் கூற்றாக உள்ளன.
- ஐங்குறுநூறு மருதப்பாடல்களாவன 38, 39, 40, 77, 78, 81, 86, 90 ஆகியனவற்றில் பரத்தையர் கூற்றாக இடம் பெறுகிறது.
- மருதக்கலியில் 68, 69, 71, 72, 74 ஆகிய பாடல்களில் பரத்தையர் கூற்றாக உள்ளன.

### கண்டோர் கூற்று

தலைமக்கள் உடன்போக்கில் கண்டோர் கூற்று நிகழ்கின்றது. "அவர், தலைமக்கள் செல்லுகின்ற பாதையின் தன்மையை எடுத்துரைக்கின்றனர். அப்பாதையில் எழும் சிக்கல்கள் அல்லது இன்னல்களை அவர்கள் எதிர்கொள்ளும், முறையை எடுத்துரைக்கின்றனர். அவர் செல்லும் வழியிலுள்ள ஊரையும் ஆவ்வூராரின் சிறப்பையும் எடுத்தியம்புதல், அன்பு கொண்ட அத்தலை மக்களின் தன்மையைக் கூறுதல், அம்மக்களைத் தேடிவரும் செவிலியின் மனநிலையைக் கண்டு அவர்களைத் தடுத்தலும் அல்லது விடுத்தலும் மேலும் உடன்போக்கிலும் உடன் அழைத்து வருதல் சூழலிலும் கண்டோர் கூற்று நிகழ்த்துவதாக (தொல் அகத்திணை 43) சூத்திரத்தில் தொல்காப்பியர் குறிப்பிடுகிறார்.''[10] மேற்கண்ட பகுதிகளில் தலைவன் தோழி, நற்றாய், கண்டோர், போன்றவரின் கூற்றுகள் சுட்டப்பட்டுள்ளது. ஆனால் காதல் சூழலின் சரிபங்கு தலையாதலின் அப்பாத்திரத்தின் கூற்று அகத்திணையில் இல்லாமை இங்கு நோக்கத்தக்கது. அதனை நிறைவு செய்யும் வகையில் இளம்பூரணர். எஞ்சியோர்க்கு எஞ்சுதல் இலவே (தொல்.45) என்ற புறநடை நூற்பாவிற்கு உரையெழுதுகையில் பின்வருமாறு சுட்டியுள்ளார்.

பாங்கர் முதலாயினாரை இச்சூத்திரத்தாற் கூறுப. தலைமகள் கூற்றுத் தனித்துக் கூறல் வேண்டும். இவரோடு ஒரு நிகரன்மையின் எனின் ஒக்கும், தலைமகள் கூற்று உணர்த்திய சூத்திரம் காலப் பழமையாற் பெயர் எழுதுவார் விழ எழுதினார் போலும், ஆசிரியர் இச்சூத்திரத்தாலும் பொருள் கொள்ள வைத்தமையின், தலைமகள் கூற்று வருமாறு. "தலைமகன் பிரித்தலுற்ற தலைமகன் குறிப்புக் கண்டு கூறுதலும், பிரிவுணர்வு கூறுதலுமே, பிரிவுணர்த்திய தோழிக்குக் கூறுதலும், உடன் போவால் எனக் கூறுதலும் இடைச்சுரத்து ஆய்ந்தார்க்குச் சொல்லி விட்டனவும் தமர் வந்துள்ள வழிக் கூறுதலும், மீளலுற்ற வழி ஆயத்தார்க்குக் கூறிவிட்டனவும், பிரிவாற்றமையும் ஆற்றுவல் என்பது படக்கூறுதலும், தெய்வம் பரவலும், பருவங்கண்டு கூறுதலும் வன்புறை எதிரறிந்து கூறலும் இவையெல்லாம் கூறப்படும் (45) (அகத்) தொல்காப்பிய நூற்பாவின் மூலம் அறிய முடிகிறது.''[11] மருதத்திணைப் பாடல்களில் காணப்படும் கண்டோர் கூற்று குறுந்தொகை, நற்றிணை, அகநானூறு, ஆகிய தொகை நூல்களில் காணப்பெறவில்லை. கலித்தொகை பரிபாடல் ஆகிய தொகைகளில் காணப்படுகிறது. அவையாவன,

- ❖ கலித்தொகையில் மருதத்திணைப் பாடல்களில் வாயிலோர் கூற்றாக 96 ஆம் பாடல் இடம் பெற்றுள்ளன.
- ❖ சான்றோர் கூற்றாகக் கலித்தொகையில் 78, 90, 91 ஆகிய பாடல்கள் இடம் பெறுகின்றன.
- ❖ கலித்தொகையில் அடியோர் கூற்றாக 94 ஆம் பாடல் இடம் பெற்றுள்ளது.

பரிபாடலில் பாணன் கூற்றாக வந்த செய்யுள்கள் இரண்டாகும். தலைவன், தலைவி இருவருக்கும் இடையே ஏற்படும் பிணக்கை போக்க பாணன் வாயிலாக வந்து கூற்று நிகழ்த்துகின்றான். பரிபாடலில் பாசறைக்கு சென்ற பாணன் தலைவியின் விதியினை உரைத்தல் பற்றியதாக அமைந்த பாடல்கள் பரி : 10, 20 ஆகியனவாகும். இவற்றில் வரும் பாக்கள் பாணனின் கூற்றுத் திறத்தை எடுத்துரைப்பதாகும்.

**மன்னன் – மக்கள் உறவு**

ஒரு நாட்டில் வாழும் மக்கள் மகிழ்வாக வாழ்வதும் எதிர்மறையாக இருப்பதும் அந்நாட்டின் ஆட்சி செய்யும் மன்னனின் செங்கோன்மையினைப் பொறுத்தே அமையும். கோ, என்பது தலைவன் என்னும் பொருளுடையது. மன்னன் கடவுட்கு இணையானவன் என்று கருதிய காலத்தில் இருவருடைய இருப்பிடத்தையும் கோயில் என்றே குறித்துள்ளனர். இறைவன் என்னும் சொல்லும் இவ்விரண்டு பொருள் கொண்டதேயாகும். மன்னுதலாவது நிலைபெறுதல் எனவே நிலையான புகழையுடையவன் என்னும் பொருளில் மன்னன் என்றனர். முறை செய்து காப்பாற்றும் மன்னன் மக்களால் இறையென வணங்கப்பட்டுள்ளான். சங்க கால மன்னர்கள் சேர, சோழ, பாண்டியர் குறுநில மன்னர்கள் என ஆளுகையின் கீழ் இருந்தனர். மருத திணைப் பாடல்களில் கிடைக்கும் தகவல்களின் படி மன்னர்களின் பெயர்களாவன,

1. "தித்தன்மத்தி''[12]
2. "பாண்டியன் கானப் பேரெயில் தந்த உக்கிரப் பெருவழுதி பாடியவர்''[13]
3. "தலையாலங்கானத்து பாண்டியன் நெடுஞ்செழியன்''[14] (திதியன், எருமையூர், எழினி)
4. "செழியன் (அள்ளூர்)''[15]
5. "அஃதை, ஆதிமந்தி, ஆட்டாந்தி''[16]
6. "திதியனுடன் போரிட்டு இறந்த அன்னி''[17]
7. "அன்னி மிஞிலி''[18]
8. "அதன் எழினி''[19]
9. "வெளியன் தித்தன்''[20]
10. "நீடுர் எவ்வி''[21]
11. "பழையன் (சோழன் படைத்தலைவன்)''[22]
12. "கிள்ளிவளவன்''[23]

13. *"நன்னன்''*[24]

14. *"எவ்வி''* [25]

15. *"கரிகால் வளவன்''*[26]

16. *"மிஞிலி (அகம் 386)''*[27]

*மேற்கண்டவற்றின் மூலம் இதில் இடம்பெற்ற மன்னர்களைப் பற்றி அறியலாம். கோல் என்பது ஆகுபெயராய் நீதியைக் குறித்து நின்றது. கோல் அரசின் அதிகாரத்தைக் குறித்துள்ளதை திருக்குறள் கூறுகின்ற. இதனை,*

**"வேலோடு நின்றான் இடுவென் றதுபோலும்**
**கோலோடு நின்றான் இரவு''**[28]

*என்ற குறளின்மூலம் அறியலாம். குடை தூய வெண்ணிறமுடையது. வட்ட வடிவமாகவும் பெரிதாகவும் இருந்தது குடை குடிக்களைக் காக்கும் சின்னமாகக் கருதப்பட்டது. இதனை,*

***''மிளை வலி சிதையக் களிறு பல பரப்பி***
***அரண் பல கடந்த முரண் கொள் தானை''***[29]

*என்னும் வரிகள் மூலம் அறியலாம். மக்கள் மன்னனை வாழ்க என வாழ்த்த அவனின் முன்னோர்களை வணங்கி வழிபட்டமையால் நாடு, நெல் விளை பெருகி செழித்து வளமுடன் வாழ்ந்தனர் என்பதனை,*

***''வாழி யாதன் வாழி யவினி***
***நெற்பல பொலிக பொன் பெரிது சிறக்க''***[30]

*என மக்களை மன்னர்கள் காத்து வந்துள்ளனர். இவ்வாறாக இத் தொகுப்பில் வரும் முதலடிகளில் எல்லாம் இவ்வாழியாதன் வாழியென ஒரே மன்னனைப் புகழ்ந்தும் பாடியுள்ளனர் என்பதுவும் அவருக்கு முன்பும் வேந்தராட்சி தொல்காப்பியரின் காலத்திலேயும் இருந்துள்ளது. இதனை,*

**''வேந்தன் மேய தீம்புனல் உலகமும்''**[31]

என்னும் தொல்காப்பியரின் நெறிபடி முதன்முதலில் ''வேந்தன்'' என்னும் சொல்லாட்சி மருத நில தெய்வமான இந்திரனுக்கே பிறப்பிக்கப் பட்டுள்ளதை அறிய முடிகிறது. இவற்றின் மூலம் முதன் முதல் மன்னராட்சி மருத நிலத்திலேயே தோன்றியுள்ளதனை உணர முடிகிறது.

நிலவுடைமைச் சமுதாயத்தில் மன்னராட்சி முறை அரசியல் அமைப்புக்கு மருத நிலமே வித்திட்டிருப்பது என கூறலாம். இந்நில மக்கள், உழவர், உழத்தியர், களமர், காதலன் காதலிகளிடையே தோன்றும் ஊடல் உண்டாவதற்கான காரணங்கள் பாணன், கூத்தன், பாங்கன், தோழி, விறலி, பார்ப்பான் முதலியோர் தூதர்களாயிருந்து இவர்களின் ஊடலை நீக்கிக் கூடி வாழச்செய்து மகிழ்ந்தனர். இவ்வாறாக மருத நில மன்னருக்கும் மக்களுக்கும் இடையேயான உறவு தோற்றம் பெற ஆரம்பக்கருத்தாக இருந்துள்ளதை அறிய முடிகிறது.

பண்புடைய நாட்டிலே பகை வந்து சேர்ந்ததே என்று அந்நாட்டைக் கைவிட்டுச் சென்று, தம்மைக் காக்கும் தகுதியுடையவனின் குடைநிழலில் உள்ள மற்றோர் பகுதியிலே தங்கி வாழ்ந்த குடிமக்கள் பின்னாளிலே, காவலன் பகையைப் போக்கவும், தாம் வாழ்ந்தப் பழைய ஊர்க்கே திரும்பி வந்து தங்குவது போன்றிருந்தது அத்தைகைய நீர்வளமிக்க ஊரனே என்கிறது. இதனை,

**"பண்புடை நன்னாட்டுப் பகை தலை வந்தென**
**அதுகைவிட்டு அகன்று ஓரி இக்களக்கிற்பான் குடைநீழல்**
**பதி பவர்ந்து இறை கொள்ளும் குடிபோலக் கலிமரு''** [32]

என்ற வரிகளில் காணமுடிகின்றது. மன்னன் மக்களை கண்ணின் இமைப்போல காத்துள்ளமைத் தெரிய வருகின்றது. தகுதிவாய்ந்த வீரர்களையும் அரசனாக அரங்கேற்றம் செய்து வைத்துள்ளனர்.

**மன்னன் – புலவர் உறவு**

பண்டைய தமிழகம் சேரர், சோழர், பாண்டியர் என்ற மூன்று வேந்தர்களின் ஆட்சியிலும், அவர்களுக்கு உட்பட்ட பலகுறு நில மன்னர்களின் ஆட்சியிலும் சிறப்புற்றிருந்தது. அம்மூவேந்தர்களின் தலைநகரங்களான வஞ்சியும், உறையூரும் மதுரையும் கலைக் கூடங்களாக விளங்கின. அவர்களுக்கும், சிற்றரசர்களுக்குள்ளும் அடிக்கடி பூசல்களும் போர்களும் நிகழ்ந்த வண்ணம் இருந்தன. அவ்வப்போது புலவர்கள் தலையிட்டுப் பூசல்களையும் போர்களையும் தடுத்து அமைதியை ஏற்படுத்தியதாகவும் இருந்தது.

"அதியமான் என்ற அரசனுக்குக்காக அவ்வையார் என்ற புலவர் தூது சென்று தொண்டைமான் என்ற அரசனிடம் அஞ்சாமல் திறமையாகப் பேசினார். பேகன் என்ற தலைவனுடைய குடும்ப வாழ்க்கையில் சிக்கல் ஏற்பட்டபோது அவனுடைய மனைவிக்காகப்பரிந்து அரிசில் கிழார், பாடிய பாடல்களும் உள்ளன. இவ்வறாக நாட்டிலும் குடும்பத்திலும் புலவர்கள் தங்கள் பங்கினை ஆற்றியுள்ளதாக மு.வ. குறிப்பிடுகிறார்.''[33] சங்க கால மன்னர்கள் கல்வியறிவிற் சிறந்த புலவர்களை தங்களின் அரசவையின் தலைமைப் புலவராக நியமித்துக் கொண்டனர். புலவர்கள் வேந்தனின் அக மற்றும் புற வாழ்வில் நிகழக் கூடிய தீய நிகழ்வுகளைச் சுட்டிக்காட்டி நல்வழிப்படுத் துவதை சான்று பகர்ந்து தெளிவுறுத்துகின்றனர். இதனால் அரசன் அவர்களை மதித்து நடக்கும் பண்பினைப் பெற்றிருந்தான். இதனை,

***''ஓங்கிய சிறப்பின் உயர்ந்த கேள்வி***
***மாங்குடி மருதன் தலைவனா ஆக***
***உலகமொரு நிலை இய பலர் புகழ் சிறப்பின்***
***புலவர் பாடாது வரைக என் நிலவரை''*** [34]

என்ற புறநானூற்று வரிகள் எடுத்துரைக்கின்றன. மாங்குடி மருதன் கேள்வி, கல்வியியல் சிறந்து விளங்கியதால் புலவர்களின் தலைவனாக விளங்கியமை தெரிகிறது. புலவர்கள் மன்னனைப் புகழக் கருதி அவனுடையப் பழங்குடி

*மூத்தோனையும் புகழும் முறையில் ஐங்குறுநூறில் ஓரம்போகியார். அவனியைப் புகழ அவன் மூத்தோனாகிய செல்வ கடுங்கோ வாழியாதனைப் புகழ்கிறார். இதனை ஒவ்வொரு பாடலின் முதலடியில்,*

***"வாழியாதன் வாழி யாவினி"*** [35]

*என வருவதன் மூலம் காணமுடிகின்றது. சங்க இலக்கியமும், தொல்காப்பியமும் தமிழகத்தைச் சேர, சோழ, பாண்டியர்கட்கு உரியதாகக் கூறுகின்றன. வண் புகழ் மூவர் தண் பொழில் வரைப்பு எனத் தொல்காப்பியம் கூறுகின்றது. மூவேந்தர்கள் எப்போது தோன்றினார்கள் என்று கூறுவது எளியதன்று அவர்கள் பழமையான அரச மரபினர் என்று மட்டுமே கூற முடியும்.*

*நீர்வளமும், நில வளமும் நிறைந்த மதுரை நகரில் அறிவு பசியுள்ள புலவர்கள் நிறைந்து இருந்தனர். அவர்கள் மன்னனுக்கு அவ்வப்போது நுண்மையான அறிவுத்திட்டங்களை கூறும் வள்ளவராக விளங்கியுள்ளனர். சொல் ஏர் உழவராக நின்று புதிய புதிய இலக்கியங்களை மன்னனுக்கு வழங்கி வந்தனர். இதனை,*

***"முதுமொழி நீராப் புலன் நா உழவர்***
***புதுமொழி கூட்டுண்ணும், புரிசைசூழ், புனல் ஊர!"*** [36]

*என்னும் வரிகள் மதுரை மாநகரில் புலவர்கள் தம் அறிவு நுட்பத்தினை மன்னனுக்கு புலப்படுத்தி வந்துள்ளதை அறிய முடிகின்றது. அது மட்டுமல்லாமல் மன்னர்களிலும் ஒரு சிலர் புலவர்களாக இருந்துள்ளனர். இதில் மருதத்திணைப் பாடல் தகவலின் படி,*

1. *"பாண்டியன் கானப்பெரெயில் தந்த உக்கிரப் பெருவழுதி"* [37]
2. *"மருதம் பாடிய இளங்கடுங்கோ இவர் சேர மன்னர் மரபினர், பாலை பாடிய பெருங்கடுங்கோவின் தம்பி மருதத்திணைப் பாடுவதில் சிறந்தவர் நற்றிணை பாடலையும் பாடியுள்ளார்."* [38]

3. "ஓரம் போகியார் நற்.20, 360 அகம்:286, 316 குறுந்.10, ஐங்குறு. (மருதம் முழுமையும்)'' [39]
4. "கோப்பெருஞ்சோழன்.''[40]

மேற்கண்ட புலவர்கள் யாவரும் மன்னர்களாக இருந்தும் சிறப்பித்திருந்தனர் என்பதை காணமுடிகிறது.

## மன்னன் – கலைஞர்கள் உறவு

நிலவுடமைச் சமூகம் வேரூன்றிய பிறகுதான் கலைகள் வளர்ச்சியடைந்தன. அறிஞர்கள் மக்களின் முன்னேற்றத்திற்கு வழி வகுத்து உழைத்தனர். இத்தகைய அறிஞர்கள் நிலத்தலைவர்களால் ஆதரிக்கப் பட்டனர். இவர்கள் உணவுக் கவலையின்றி வாழ்ந்தனர். தாங்கள் உள்ளத்திற் கண்டறிந்த உண்மைகளை உலகத்தார்க்கு அறிவித்தனர். பழங்கால நூலாசிரியர்கள் பலரும் நிலத்தலைவர்களின் பாதுகாப்பிலே வாழ்ந்தனர். நாடகம், சங்கீதம், கூத்து போன்ற கலைகளெல்லாம் அவர்களுடைய ஆதரிப்பிலேதான் வளர்ந்தன.

கூத்தர்கள், பாணர்கள், பொருநர்கள், விறலிகள் என்பவர்கள், இசை, கூத்து, நாடகங்களிலே வல்லவர்கள் இவர்களை ஆதரித்தவர்கள் அனைவரும் நிலத்தலைவராவார். குறுநில மன்னர்கள் என்போல் நிலத்தலைவர்களாவர்.

**''கூத்தரும் பாணரும் பொருநரும் விறலியும்**
**ஆற்றிடைக் காட்சி யுறழத் தோன்றிப்**
**பெற்ற பெருவளம் பெறா அர்க்கு அறிவுறீஇச்**
**சென்று பயன் எதிரச் சொன்ன பக்கமும்'' [41]**

கூத்தர், பாணர், பொருநர், விறலி என்பவர்கள் வழியிலே தம் போன்ற இரவலரைக்கண்டு, தளம் பெற்ற செல்வத்தைப் பற்றி அச்செல்வம் பெற்ற வள்ளல்களிடம் அவர்களும் சென்று செல்வம் பெறும்படி கூறிய செய்தி புலனாகிறது. இதன் மூலம் நிலத்தலைவர்களின் ஆதரவிலே கலைகளும், கலைஞர்களும் வளர்ந்ததையும் வாழ்ந்ததையும் அறியமுடிகின்றது.

**பாணன் – தலைவன் உறவு**

தூதன் தடையின்றி அரண்மனைக்குள் புகுவது போல பாணர், பொருநர், பார்ப்பார், புலவர் என்பார்க்கு அரண்மனையில் புக அனுமதியுண்டு இதனை, "(பெரும்பாண் -401, பொருநர்66 சிறுபாண் 203-206) ஆகியன சுட்டுகின்றது.''[42] பரத்தமை மேற்கொண்டொழுகிய தலைவன் முதலின் பாணனை வாயிலாக விடுப்பத் தலைவி அப்பாணனை இகழ்ந்து வாயில் மறுத்தனள் பின்னரும் தலைவன் அப் பாணனோடு தலைவியின் பாற் சென்று தான் தவறு செய்யவில்லை. தூயேன் நின்னையின்றி தமையேன் என்றெல்லாம் கூறி ஊடலுணர்த்தவும் தலைவி ஊடலுணராளாய் அவனையும் இகழ்ந்து, பின்னும் ஊடியது இதற்கு கொடுமை ஒழுக்கம் என்கிறது. இதனை,

> **"முள்ளெயிற்றுப் பாண் மகளின் கெடிறு செரிந்த**
> **வகன்பெரு வட்டி நிறைய மனையோ''[43]**

என்ற அடிகளின் மூலம் அறிய முடிகின்றது. பாணன் பரத்தையை புதிது புதியதாக தவைவனுடன் கொண்டுச் சேர்த்து விடுவதே தொழிலாகக் கொண்டுள்ளான், மத்தளம் ஒலிக்க முறையாகக் கூத்து நிகழ்ந்து விழா முடிந்த களத்திலுள்ள பாவை போன்ற அழகுள்ள பரத்தையை நேற்றுப் புணர்ந்து அவள் புதுநலம் நுகர்ந்து இன்று பாணன் தரும் புதுப் பரத்தையின் மெல்லியத்தாளைப் பெறச் செல்வாயாக என்பதை,

> **"நெருநைப் புணர்ந்தோர் புது நலம் வௌவி**
> **இன்று தரு மகளிர் மென்தோள் பெறீஇயர்''[44]**

என்ற அடிகளின் புதிய பரத்தையை தனலவனிடம் கொண்டு சேர்த்து வைத்துள்ளதைக் காணமுடிகிறது.

பாணன் பொய் கூறி தலைவனிடம் காத்துக்கொள்ள சொல்வது போலவும் சேர்த்து வைத்துள்ளான். மருத நிலத்தில் பொய்கையுள்ள ஊர்க்குப் போய்ச் சேர்ந்து அங்குள்ள மகளிரைப் பார்த்து கூரிய பற்களையும் மெல்லிதாய் அகன்ற அல்குலையுமுடைய மகளிரே! கை

*விரலால் வாசிக்கப்படும் நரம்பினாலே பாட்டுப் பகரும் பாணன் செய்த துன்பங்கள் பெருகின, இவன் பொய் பொதிந்த கொடிய சொற்களை நம்பாமல் உம்மை பாதுகாத்துக் கொள்ளுங்கள் எனத் தோழனாக பாணனை கூறுகிறாள். இதனை,*

**"கை கவர் நரம்பின் பனுவற் பாணன்**
**செய்த அல்லல் பல்குவ வை எயிற்று''[45]**

*என்ற வரிகள் புலப்படுத்துகின்றன. பாணன் மற்போர் வீரனாகவும், விளங்கி உள்ளான். அவனை வெல்ல எண்ணினான் கணையன். அவனை வெல்ல அவனால் இயலவில்லை. எனவே அவனை வெல்ல ஆரிய மல்லன் என்பவனை ஏவினான் ஆனால் பாணன் ஆரிய மல்லனை வென்று விட்டான் என்பது இப்பாடலில் வந்துள்ளன. இதனை,*

**"எதிர்தலைக் கொண்ட ஆரியப் பொருநன்**
**நிறைத் திரள் முழவுத்தோள் கையகத்து ஒழிந்த**
**திறன் வேறு கிடக்கை நோக்கி, நல்போர்க்**
**கணையன் நாணியாங்கு – மறையினள்''[46]**

*என்ற அடிகளின் மூலம் அறியமுடிகிறது. எவ்வி என்ற புரவலன் மிழலை நாட்டை ஆண்டவன் தலையாலங்கானத்துச் செரு வென்ற பாண்டியன் நெடுஞ்செழியனால் வெல்லப்பட்டவன். பாணர்களுக்கு பொற்பூ கொடுத்து ஆதரித்துள்ளான். இதனை,*

**"எவ்வி இழைந்த வறுமையார் பாணர்**
**பூஇில் வறுந்தலை போலப் புல்லென்று''[47]**

*என்ற அடிகள் புலப்படுத்துகின்றன.*

**தலைவியின் தோழியும் – பாணன் உறவு**

*கற்பி நிலையில் வழுவாதத் தலைவி தீயொழுக்க நெறிக்கு அழைத்து செல்லும் பாணனையும் புகழ்கிறான். இதனை,*

***“யாண ரூரன் வாழ்க***
***பாணனும் வாழ்க வென வேட்டேமே’’[48]***

*என்னும் அடிகளின் மூலம் அறியமுடிகிறது. விளங்கும் வானையுடைய வெற்றி பொருந்திய பாண்டியன் குற்றம் இல்லாத படைப்பயிற்சியுடன் கூடி நெருங்கியப் போரில் செல்வான். அவன் வெல்லுந்தோறும் கனிவான உணவைப் (பரிசை) பெறுபவன் பாணன். அப்பாணன் அடிக்கும் மத்தளத்தின் கண் போல், அப் பரத்தையின் வயிற்றை அடித்துக் கொள்ளும்படி செறிந்த வளையல் ஒலித்திடக் கைவீசி உலாவி வருவோம்! வருவாயாக! என பரத்தையின் தோழி அழைக்கிறாள். இதனை,*

***“வெளிறு இல் கற்பின் மண்டு அமர் அடுதொறும்***
***களிறு பெறு வல்சிப் பாணன் அறியும்’’[49]***

*என்னும் அடிகள் புலப்படுத்துகின்றன. இதன்மூலம் பரத்தையின் தோழியும் பாணனுடன் உறவு உடையவளாகிறாள்.*

**பாணன் – பாண்மகள் உறவு**

*நீண்ட மருவின் நிலை கொள்ளாத நீரும் கலங்குமாறு கரிய இருள் பொருந்திய நடு இரவிலே ஒடங்களைச் செலுத்திப் போய், தன் தமையர் விடியற்காலையில் பிடித்து வந்தது திரண்டக் கோடுகளை உடைய வாளைமீன் அவ்வாளை மீனுக்கு விலையாக அழகிய வளைந்த கொப்பூழையும் அழகிய சொற்களையும் உடையப் பாண்மகள் நீண்ட கொடிகள் அசையும் கள் மிக்கத் தெருவில் விற்கச் சென்றாள் அங்கு வாங்குபவர் பழைய செந்நெல்லை முகந்து கொடுப்பதைக் கொள்ளாமல் ‘கழங்கு’ போன்ற பெரியமுத்துக்களுடன் சிறந்த அணிகளையும் பெறுவாள். இதனை,*

***“பழஞ்செந் நெல்லின் முகவை கொள்ளாள்***
***கழங்கு உறழ் முத்தொடு நன் கலம் பெறூஉம்’’[50]***

என்னும் அடிகளின் மூலம் பாண்மகள் பற்றிய செய்திகள் உணர முடிகின்றது. தன் தமயனானப் பாணன் பிடித்து வந்த மீனை விற்றுப் பொருள் சேர்க்கச் சென்றுள்ளாள் என்பதன் மூலம் இருவரும் நட்புடன் இருந்துள்ளதை அறியலாம்.

### தோழி – பாணன் உறவு

கொக்கிடமிருந்து தப்பிய மீனுக்குத் தாமரைமொட்டும் கொக்கு போலவே தோன்றும், அதுபோல் உன் ஒரு பாணன் பொய் சொல்ல, உன்னைப் பிரிந்தப் பெண்களுக்கு எல்லா பாணர்களுமே கள்வராகத் தோன்றுகின்றனர் என்கிறாள் தோழி. சங்க காலத் தோழிப் பாணர்களுக்கு நல்ல பெயரை சேர்க்கும் பொருட்டு தலைவியிடம் நீ ஒரு பாணனை பொய்யன் என்றால் உன் தலைவனும் பொய்யன் ஆவான் என வாதிடுகிறாள். இதனை,

> ***''ஒரு நின் பாணன் பொய்யன் ஆக***
> ***உள்ள பாணர் எல்லாம்***
> ***கள்வர் போல்வர் நீ அகன்றி சினார்க்கே''*** [51]

என்னும் அடிகளில் காணமுடிகிறது. தோழி, பாணர் உறவில் நெறுக்கம் காணப்படுகிறது. இவ்வாறாகக் தோழியும் பாணனும் தலைவன் தலைவிக்காக வாழ்ந்து வந்துள்ளனர். பாணனுக்காக வாதிட்டு நல்லப் பாணர்களும் சமுதாயத்தில் இருக்கின்றனர் என்பதை உணர்த்தியுள்ளதை அறிய முடிகின்றது.

### மன்னன் – பொருநர் உறவு

மருதத்திணைப்பாடல்களில் பொருநர் மன்னன் உறவு சிறப்பாக இருந்துள்ளது. பொருநர் என்பர் அஃதை என்ற சிற்றரசனின் அவையில் பறையை இடையறாது வாசித்து அலங்கரித்து இருந்தனர். இதன்,

> ***''.......................... அஃதை களிற்றொடு***
> ***நன் கலன் ஈயும் நாள் மகிழ் இருக்கை***
> ***அவை புகு பொருநர் பறையின் ஆனாது''*** [52]

என்னும் அடிகள் புலப்படுத்துகின்றன. இனிமையையும், கள்ளையும் உண்ட அஃதை என்பவனின் யானைகளையும், நல்ல அணிகளையும் பரிசிலர்க்கு வழங்கும் மகிழ்ச்சி பொருந்திய நாலோக்க மண்டபத்தில் புகும் பொருநர் உன் பறையைப் போன்று இடையாறாது என்னை இகழ்வர் என்கிறான். இதனை,

**“நன் கலர் ஈயும் நாள் மகிழ் இருக்கை**
**அவை புகு பொருநர் பறையின் ஆனாது’’**[53]

என மன்னின் பொருநரைப் பற்றி கூறுகிறான். அரசவையில் பொருநரின் பறை இடையறாது ஒலித்துள்ளதை இதன் மூலம் அறியமுடிகிறது. அவர்களின் வாழ்க்கைச் சிறப்புடையதாக அமைந்துள்ளது.

## விறலியர் – மன்னன் உறவு

வேடமிட்டு ஆடும் கலைஞர்கள் விறலியர் ஆவார். இவர்கள் மெல்லிய கண், மயிர்ச்சாந்து பூசியக் கூந்தல் மூங்கில் போன்றத் தோள்களையும், நேரிய வெள்ளை நிறமானப் பற்கள், திரண்டு நெருங்கியத் தொடைகள் இவற்றையுடையவள் ஒப்பற்ற விறலி பின்னிய அழகிய தழையுடையையுடுத்தி விழாக்களம் பொலிய வந்து நின்றாள். இதனை,

**மடக்கண் தகரக் கூந்தல் பணைத்தோள்**
**வார்ந்த வால் எயிற்று, சேர்ந்து செறி குறங்கின்’’**[54]

என்னும் அடிகளின் மூலம் உணரலாம். மன்னன் விறலியர்களைப் பகைத்து கொள்ளாமல் அரவணைத்து கொண்டு அவர்களுக்கு தலைக்கோல் பட்டம் அணிந்து சிறப்பித்து வந்துள்ளதைக் காணமுடிகிறது. மருதத்திணை மன்னன் அவர்களை அரண்மனைக் கலைஞர்களாக அமரவைத்து அலங்கரித்துள்ளான்.

## துணங்கைக் கூத்துக்கு பரிசு

விறலியர்கள் ஆடும் கூத்து துணங்கை கூத்தாகும். மன்னன் துணங்கைக் கூத்தாடும் ஆண், பெண் இருவருக்கும் பரிசு அளித்து சிறப்பு செய்துள்ளான். தலைவன் காதணியைக் கையிற் கொண்டவனாய் மாலையை உடையவனாய்ச் சிறியப் பசிய வலையல்களையுடையவனாய்த் தலைவன் விழாக் கொண்டாடும் இடத்திற்குத் துணங்கைக் கூத்து ஆடுவோர்க்குத் தலைக்கைக் கொண்டு கொடுக்கச் சென்றுள்ளான், அதாவது பட்டடம் இதனை,

**"விழவு அயர் துணங்கை தவேகம் செல்ல**
**நெடு நிமிர் தெருவில் கைபுக கொடு மிடை"**[55]

என்னும் அடிகளின் மூலம் அறிய முடிகிறது. இது ஆண், பெண் இருவரும் கையைக் கோர்த்து ஆடும் ஆட்டம் ஆகும். மிகவும் நீண்ட நெடு முடிந்த விடத்தில் பெண்கள் ஆடுவர். இக்கூத்தினை ஆடவர்களும் வேடமிட்டு ஆடுவர்.

## குரவைக் கூத்து

மருத நிலத்திலும் குரவைத் கூத்து ஆடப்பட்டுள்ளன. தலைவனின் பரத்தையர் உறவினைக் கண்டித்து மருத தலைவி குரவைக் கூத்தை கள்ளுண்டு ஆடியுள்ளாள். துளை பொருந்திய தண்டையுடையச் சேம்பின் மடலில் உள்ள அகன்ற இலையுடன் கூடிய பாசி படர்ந்த நீர்ப் பரப்பில் குட்டியுடன் கூடியுள்ள உண்ணாமையால் வருந்திய பெண் நாயின் வருத்தத்தைப் போக்குவதற்கு காலைப் பொழுதில் இரையைக் கொணர்வதற்காக எழுந்தது ஆண் நீர் நாய். அது வாளை மீனைப் பற்றி அதனுடனே போரிட்டதால் உண்ணீர் கொள்ளும் நீர்த் துறையின் நீர் கலங்கிக் கிடந்தது. அதனால் நீர் கொள்ள வந்த மகளிர் தெளிந்தக் கள்ளைக் குடித்து நுண்ணிய தொழிற் சிறப்புடைய குடங்களைப் பக்கத்தில் வைத்து விட்டுத் தம் கணவரின் பரத்தமை ஒழுக்கத்தைப் பாடிக் காஞ்சி மரத்தின் நிழலின் நின்று குரவையாடுகின்றனர். இதனை,

“**தெண்கட் தேறல் மாந்தி மகளிர்**
**நுண் செயல் அம்குடம் இரீஇ பண்பின்**
**மகிழ்நன் பரத்தைமை பாடி அவிழ்இணர்க்**
**காஞ்சி நீழல் குரவை அயரும்’’**[56]

என்னும் வரிகள் மூலம் சங்க கால மகளிர் கள்ளுண்டு களித்தியச் செய்தியை அறியமுடிகிறது. இக்கூத்து எல்லாம் நில மக்களிடையேயும் இருந்துள்ளது.

**பாணன் – மன்னன் நட்பு**

அட்டி என்னும் மன்னனுடன் நட்பு பூண்டுப் பாணன் போரிட்டுள்ளான். ஆற்றல் மிக்க வன்மையுடைய பாணன் என்பவனுடன் கூடிப் போரிடுதலில் வல்ல படையையுடைய “அட்டி” என்பான் போரிட வந்து வெளியன் தித்தன் என்பவனின் அவையிலே உண்டான இனிய ஓசையுடைய இணைப் பறையினது ஒலியைக் கேட்டு அவனது பெருமையை உணர்ந்து அஞ்சிப் போர் செய்யாது ஓடிய போது எழுந்த ஆரவாரத்தை விடப் பெரியது என்பதை,

“**வலிமிகும் முன்பின் பாணனொடு மலிதார்த்**
**தித்தன் வெளியன் உறந்தை நாள் அவைப்**
**பாடு இன் தென்கிளைப் பாடுகேட்டு அஞ்சிப்’’** [57]

என்னும் வரிகளில் அறிய முடிகின்றன. இவ்வாறாக மன்னனுக்கும் பாணனுக்கும் நட்பு என்பது போர் நிகழ்வுக்குத் துணையாய் செல்லும் நிலையிலும் இருந்தமை உணரலாம். மன்னனுக்கு பாணன் அனைத்து வகையிலும் துணை நின்றமைத் தெரிகிறது.

**தலைவன் – பரத்தைமை உறவு**

சங்க இலக்கியத்தில் பரத்தையர்களைக் குறித்துப் பல்வேறு சொற்கள் காணப்படுகின்றன. ஆயிழை மகளிர், நேரிழை மகளிர், குறுமகள், மாணிழை மகளிர், குறுந்தொடி கணங்குழையவர், எழிலுன்கண் நல்லார், கொடியன்னர் எழில் நல்லார் துணை மலர்க் கோதையார், பரத்தை என

பல்வேறு வகைகளில் அழைக்கப்படுகின்றனர். சங்க இலக்கியத்தில் அகப்பாடல்களில் தலைவன், தலைவி, தோழி என்கிற அக நாடகப் பாத்திரங்களைப் போலப் பரத்தை என்கிற பாத்திரம் இடம் பெற்றுள்ளது. குறிப்பாக மருதத் திணைப் பாடல்களில் குழந்தைகள் பெற்றெடுத்து பாலூட்டும் தலைவிக்கும், தலைவனுக்கும் இடையில் சண்டை வரக் காரணமாகப் பரத்தை குறிக்கப்படுகிறாள். பரத்தையர் சேரி என்று தனியான தெருவில் இவர்கள் வாழ்ந்ததாகத் தெரிவிக்கிறது. செல்வர்கள் வாழுகின்ற நகரம் ஊர்களில் தவறாமல் இவர்களுடைய குடியிருப்புகள் இருந்துள்ளன.

'பரத்தை' என்ப அயன்மை (தமிழ் அகராதி) கற்பு காலத்தில் தலைவனும் தலைவியும் நடத்தும் இல்வாழ்க்கை அயலாளாக வரும் பரத்தைக்கு அயன்மை என்பதே பொருந்தும். பரத்தையும் காமக்கிழத்தியும் ஒருவரா? வேறானவரா? என்ற கேள்விக்கு உரையாசிரியர்கள் தரும் விளக்கமான, இருவரில் பரத்தையர் ஆவார் யார் எனின் அவர் "ஆடலும், பாடலும் வல்லராகி அழகும், இளைமையும் காட்டி இன்பமும், பொருளும் வெஃகி ஒருவர் மாட்டும் தங்காதார் இளம்பூரனர் உரைக்கிறார் காமக்கிழத்தியை உரைக்கும்போது காமக்கிழத்தியை மூன்று வகையினராகப் பிரித்து அதோடு பரத்தையரிலிருந்து காமக்கிழத்தியை வேறுபட்டவராகக் காட்டுகிறார்.''[58] இதனை,

**"காமக் கிழத்தி மனையோளென்றிவ ரேமுறுகிளவி"[59]**

"இவ்விருவரும் இல்லுறை மகளிராதலின், தலைவன் மாட்டு நிகழும் கூற்றாகும் என்கிறார். நச்சினார்க்கினியர் உரை இளம்பூரணாரை மறுத்துப் பரத்தைக் காமக்கிழத்தி இருவரையும் ஒருவராகக் கருதும் நோக்கில் அமைந்துள்ளது. அவர் அறியார் என்னைச் சிறப்புடைய தலைவியோடுப் பரத்தையும் கூட்டிக் காமக் கிழத்தியரென்று ஆசிரியர் கூத்திரஞ் செய்யின் மயக்கக் கூறலென்றும் குற்றம் தங்குமாதலின் அன்றியும் சான்றோர் பலரும் காமக் கிழத்தியரைப் பரத்தையராகத் தோற்றுவார் செய்துக் கூறுமாறு உணர்க அ. சிவலிங்கனார் என்கிறார்.''[60] மருதத்திணையில் 40 பாடல்களில்

பரத்தமை உறவுகள் கூறப்பட்டுள்ளது. தம்மைச் சுரண்டலுக்கு ஆள்படுத்தி பரத்தையர்கள் இருந்துள்ளனர். இதுக் காமச்சுரண்டலாகும். சமுதாயம் ஒரு தார மணமுறைக் குடும்பங்களை உடையதாக மாறுவதற்கு முன்னர் புணர்ச்சிச் சுதந்திரம் நிலவியது. பின்னர் தலைவனும், தலைவியும் கொள்ளும் காதலுவுறவும், மணவுறவும் இதன் அடிப்படையிலான குடும்ப உறவும் தோற்றம் கொண்டது. இந்தக் குடும்பம் வலுவான சூழ்நிலையோடு இயங்கத்தொடங்கியதே பரத்தையரின் தோற்றத்திற்கு காரணமாக அமைந்தது.

ஏங்க்ல்ஸ் ஒருதார மணமுறையின் வெளிப்பாடே பரத்தை தோற்றத்திற்கும், பெருக்கத்திற்கும் காரணம் என்கிறார். இவரைப் போன்ற சமுதாயவாதிகள் மேலும் சமுதாயத் தேவையே பண்டைப் பரத்தைமைக்குக் காரணமாகும். பரத்தையிடம் வந்து தனது பொருளையெல்லாம் கவர்ந்து கொண்டார்கள் என்றோ, அதனால் ஆடவர் வறுமை நிலை அடைந்தனர் என்பதற்கான மருத நிலப் பாடல்களில், சான்றுகள் காணப்படவில்லை. இவற்றிலிருந்து பரத்தையின் பண்புகள் விளங்குகின்றன. பரத்தை பண்பு எவ்வாறாயின் உனையின்றி எனக்கு என்னப் பிழைப்பு உண்டு என்று கேட்கிறாள். அறம் தான்கெட அறியாது உறந்தை அவையத்து நின்று நிலைபெற்றது. அது போல நீயும் என் நெஞ்சத்துக் கெடவறியாது நின்று நிலை பெறுவாயாக என்று கூறிகிறாள். இதனை,

**“மறம் கெழு சோழர் உறந்தை அவையத்து**
**அறம் கெட அறியாதாவீகு சிறந்த’’**[61]

என்னும் அடிகளின் மூலம் பரத்தையரின் பண்புகளை அறிய முடிகின்றது.

“பத்தினி என்கிற படைப்பின் பின் விளைவுதான் பரத்தமை$_2$ பரத்தமை என்ற நிறுவனம் திருமணத்துக்கு அப்பால் செல்வந்த ஆண்களின் காமக்களிப்பிற்கென இவர்களால் உருவாக்கப்பட்டது என ராஜ் கௌதமன் கூறுகிறார்.’’[62] இதில் தன்பால் வாயில் வேண்டிய தலைவனை நோக்கி நின்னொடு நீராடியமையால் புத்தொளி சிறந்து வானவ மாதர்க்கும் தெய்வம், போன்று திகழ்ந்தாள்.

ஒருபரத்தை என பலர் கூறக் கேட்டனம், நீ அதனை மறைத்தல் ஒல்லுமோ என்று மறுக்கிறாள். தலைவி பத்தினிக்கு, பரத்தைமை வான மகளிருக்கும் ஒப்பாக இடம் பெற்றுள்ளமையால் இவரின் முதல் கருத்து ஏற்புடையதாகின்றது. இதனை,

**“ஏளாண் டொடி மடவர னின்னோ**
**டந்தர மகளிர்க்குத் தெய்வமும் போன்றே’’**[63]

என்னும் அடிகள் புலப்படுத்துகின்றன. ஆனால் அவரின் இரண்டாவது கருத்து ஏற்புடைதன்று ஏனெனில் பரத்தையின் திருமணம் புரிந்து வாழ்ந்து வந்துள்ளமை சங்க மருதப் பாடல்களில் காணப்படுகின்றன. இதனை,

**‘‘வதுகை நாள் அணிப் புதுவோர்ப் புணரிய**
**பரிவொடு வரூஉம் பாணன் தெருவில்’’**[64]

என்னும் வரிகள் தெளிவாக்குகின்றன. மேலும் அகம் 46 ஆம் பாடலிலும் காணலாம். இதனை,

**‘‘உறை இறந்து ஒளிரும் தாழ் இருள் கூந்தல்**
**பிறரும் ஒருத்தியை நம் மனைத்தந்து**
**வதுவை அயர்ந்தனை என்ப அஃதுயாம்’’**[65]

என்னும் அடிகள் புலப்படுத்துகின்றன. தலைவனுக்கு பாணன் புதிய புதிய பரத்தையர்களை மணம் செய்து வைத்துள்ளமை தெரிகிறது. பரத்தையர்களைத் தலைவன் திருமணம் கோலம் (வதுவை நாள்) பூண்டு வாழ்ந்துள்ளமைத் தெரிகின்றது.என்பதை,

**“நறு வடிமாத்ததுவதுவையா’’** [66]

எனும் அடிகளின் மூலம் அறியலாம்.

### பரத்தையைத் தலைவி இகழுதல் (பொட்டாங்கு மொழிப)

*நீராடும் துறையை உடைய தலைவனின் மனைவியர் குற்றம் அற்ற என்னைத் தாம் விரும்பியபடியெல்லாம் பழித் தூற்றுகின்றாள் என்று கூறுகின்றனர். அத்தகைய பழிக்கு நாம் ஆலாகிவிட்டோம் என்றால் இனியாது நிகழ்ந்தாலும் நிகழ்க என்று அவர்க்குச்செய்யத் தக்கதைச் செய்தே ஆகவேண்டும். அவர் வாழ்கின்றச் சேரியிடத்தே அவர்காணும் படியாம் செல்வோம் என்றால் அவர் வருந்த அதுவேபோதும் என்கிறாள். இதனை,*

***''பொட்டாங்கு மொழிப என்ப அவ்அலர்ப்***
***பட்டனம் ஆயின் இனி எவன் ஆகியர்''[67]***

*என்னும் அடிகளின் மூலம் அறியலாம். பரத்தையர் தலைவியைப் பகையாக கருதவில்லை என்கிறாள் ஒருத்தி. காமக் கிழத்தியான நான் மனைக் கிழத்தியானத் தலைவிக்குப் பகை உடையேன் அல்லேன் தன்னைச் சேர்ந்தவரின் அழகிய நெற்றிப் பசலை உண்டாக அவர்களை நீங்கும் அவளுடையக் கணவனே அவளுக்குப் பகையாவதற்குப் பொருத்தமாவர். ஆதலால் தலைவி என்னுடன் புலத்தலுக்குக் காரணம் அவளது அறியாமையே ஆகும் என்று பரத்தை உரைத்தாள். இதனை,*

***"யாம் தன் பகையேம் அல்லேம்; சேர்ந்தோர்***
***திருநுதல் பசப்ப நீங்கும்***
***கொழுநனும் சாலும் தன் உடன்உறை பகையே''[68]***

*எனும் அடிகளில் அறிய முடிகின்றது. இவ்வாறாக தலைவனைப் பற்றிச் சாடி தன்னைச் சமூக நாகரிகத்துக்கு எடுத்து உரைக்கிறாள்.*

### பரத்தை –தலைவனின் மகனைத் தன் மகன்எனல்

*பரத்தையர் தலைவனின் மகனைத் தன் மகனாக கருதுகிறாள். சிறிய தோரை உருட்டி விளையாடும் தெருவில் தனியனாய்க் கண்டு பொன்னணிகள் அணிந்த கூறிய பற்களையுடைய அவனை நெருங்கினாள். நெருங்கி அங்குப் பார்ப்பவர் எவரும் இல்லாமையால் நினக்கும்,*

*அவனுக்கும் உள்ள உருவ ஒப்புமை கருதி அவன் தகைக்கும் மகன் ஆவான் என எண்ணி என் உயிரே வருக எனச்சொல்லி எடுத்துப் பொன்னணிகளால் சுமக்கப் பெற்ற தன் இளையகொங்கை மீது அணைத்துக் கொண்டாள். இதனை,*

**"அணங்கு அருங் கடவுள் அன்னோள் நின்**
**மகன்தாய் ஆதல் புரைவது ஆங்கு எனவே''**[69]

*என்னும் அடிகளின் மூலம் உணரமுடிகிறது. தலைவன் பிற தலைவியரைப் புணர்ந்தாலும் தன் தலைவனின் உரு ஒப்புமையால் பரத்தையும் அவனைத் தன் மகனாக கருதிகிறாள்.*

**தலைவன் – சேரிப்பரத்தை உறவு**

*புனலில் விரும்பி ஆடிய அத்தி என்றவனின் அழகை விரும்பிக் காவிரியாறு அவனைக் கவர்ந்து கொண்டுபோய்க் கடலில் ஒளித்தது போல சேரிப்பரத்தை உன்னை கவர்ந்து போயினாலர் என தலைவி கூறுவதிலிருந்து தலைவனை சேரிப்பரத்தையர் கவர்ந்துள்ளதைக் காண முடிகின்றது. இதனை,*

**"புனல் நயந்து ஆடும் அத்தி அணி நயந்து**
**காவிரி கொண்டு ஒளித்தாங்கும் அன்னோ!''**[70]

*எனும் அடிகள் புலப்படுத்துகின்றன. காதற் பரத்தையைப் பிரிந்து தலைவன் தன் மனைக்குச் சென்றானாக அஃதறிந்த சேரிப்பரத்தையர் தலைவன் காதற் பரத்தையே வெறுத்துத் தன் மனைக்கட் சென்றான். அவள் அவனை மடக்கிக் கொள்ளும் மாண்பிலள் என இகழ்ந்தமைக் கேட்டுக் காதற்பரத்தை சேரிப்பரத்தையர் பாங்காயினார், கேட்ப தலைவன் எம்மை வெறுத்துப் போயினானல்லன் உலகியல் கருதியே பிரிந்து சென்றனை யாம் அவனை விடாது மடக்கிக் கொள்ளும் மாண்புடையேம் அவன் விரைந்து எம்பால் உருகுவன் என கூறுகிறாள். இதனை,*

**"பெண்டிருரிறை கொண்டன என்ப**
**கெண்டை பாய்தர வவிழ்ந்த''**[71]

என்னும் வரிகள் தெளிவாக்குகின்றன. இவ்வாறாக சேரிப்பரத்தையர் தலைவனை மடக்கிக்கொண்டது தெரிகிறது. சமூகத்தில் சேரிப்பரத்தையர் தலைவனின் இன்பம் கிடைக்கும்வரை பகிர்ந்து இருந்துள்ளனர்.

**காமக்கிழத்தி – தலைவன் உறவு**

மருதப்பாடல்களில் காமக்கிழத்தி தலைவனிடம் கண்டிப்பாக பேசுகின்றாள். இதனை,

**"நின்னொடு தண் புனலாகுது**
**மெம்மொடு சென்மோ செல்லினின் மனையே''**[72]

இவ்வடிகளில் தலைவியோடு நீராட்டயர்ந்தமை கேட்டுக் காமக் கிழத்தி ஊடியிருந்தனள், அஃதறிந்த தலைவன் அவள் ஊடலைத் தீர்த்தற்கு ஒரு நாள் அவளை நீராட்டயர்தற்கு அழைத்தனன் அது கேட்ட காமக்கிழத்தி இனி நீ நின் மனைக்குச் செல்வதில்லை என்று உறுதி கூறுவாயாயின் நின்னோடு நீராட வருகுவேல் இல்லையேல் வரமாட்டேன் என்று கழறிக் கூறுவதை காணமுடிகிறது. தலைவி, தலைவனை தீய ஒழுக்கத்திலிருந்து திருத்த முயல்வதைக் காணலாம்.

**காமக்கிழத்தி – தலைவி உறவு**

கலித்தொகையில் காமக்கிழத்தியைத் தலைவி இழிவுப்படுத்தி உரைக்கிறாள். தலைவியை இகழ்ந்து உரைக்கிறான் தலைவன். இதனை,

**"மட வளம்ம நீயினிக் கொண்டோளே**
**தன்னொடு நிகரா வென்னொடு நிகரிப்''**[73]

இவ்வடிகளில் தலைவனுடைய காமக்கிழத்தி அவன் தன்பாற் தலைவியிடத்துக் காட்டினும் மயல்பெரிதுடையன் என்னும் கருத்தால் தலைவி எனக் கீடாகாள் என்று பழித்துரைத்தாள். இவ்வாறாக காமத்திற்கு தலைவியாக பரத்தை இருப்பதால் காமக்கிழத்தி என்று மற்றொரு பெயரால் பரத்தையரை அழைத்துள்ளமைப் புனலாகிறது.

### தோழி – தலைவன் உறவு

சங்க இலக்கியங்களில் தோழி என்னும் பாத்திரம் இன்றியமையாதாகும். தோழி இல்லையெனில் தலைவன், தலைவி உறவு என்பது இல்லாமல் போயிருக்கும். அவ்வாறான சிறப்பான பாத்திரமான தோழி மருதத்திணைப் பாடல்களில் காணப்படுகிறாள்.

### தலைவனைத் தோழி வரைவுக்கு வற்புறுத்தல்

தோழியானவள், தலைவனை வரைவுக்கு வற்புறுத்தல் முக்கிய பணியாகும். இதனை,

**“துஞ்சு மனை நெடுநகர் வருதி**
**யஞ்சா யோவிவ டந்தைகை வேலே’’**[74]

என்பதில் அறியலாம். அதன்பின் தலைவனை வாயில் மறுத்தல் என்னும் பணியினையும் செய்கிறாள். இதனை,

**“குறுந்தொடி மகளிர் குரூஉப் புனல் முனையின்**
**பழனப் பைஞ்சாப் கொழூதிக் கழனிக்’’**[75]

என்னும் அடிகளில் உணரமுடிகிறது. தலைவன் பரத்தையுடன் காவிரியில் நீராடினாள் என்பதைத் தலைவி அறிந்தாள், அதனால் ஊடல் கொண்டாள். அவளிடம் வந்தத் தலைவன் அவளது ஊடலை உணர்ந்துத் தோழியிடம் தலைவியின் சினத்தைத் தணிக்குமாறு வேண்டினான். அத்தோழி நீ இயற்றிய தவறு பெரிது, ஆதலால் என்னால் அவளது ஊடலைப் போக்க இயலாது என வழி மறுத்து வற்புறுத்தியுள்ளார்.

## தோழி – தலைவி உறவு

தோழி தலைவிக்கு உறுதுணையாக இருந்து நல்ல வழியில் ஆக்கியிருந்தாள். அவளின் கவலையைப்போக்கும் களனாக இருந்துள்ளாள். தோழி என்பவள் சங்க இலக்கியத்தில் முக்கிய பாத்திரமாகும். மூன்றாம் நிலை பாத்திரமாக கருதலாம். தோழி இல்லையென்றால் தலைவன் தலைவியின் உறவு இல்லை. இதனை,

**"பூக்கஞு லூரக் நன் மனை**
**வாழ்க்கை பொலிக வென வேட்டேமே''**[76]

என்னும் அடிகளில், தோழித் தலைவியைத் தலைவனுடன் இணைத்து வைத்து இல்லறம் நடத்த விரும்பி இருந்தாள். அவள் ஆற்றியிருந்தக் காலத்து உறுதுணையாகவும் இருந்ததைக் காணமுடிகிறது.

## தோழி –செவிலி உறவு

தோழியானவள் செவிலியுடன் நெருங்கிப் பழகியுள்ளாள். தலைவனோடுக் கூடியதனால் புதுமணங்களும் விரவிப் பெற்றத் தலைவியின் கூந்தலில் கண், வண்டு போலாது, புதிய பல வண்டுகளும் மொய்க்க கண்டச் செவிலி இதற்குக் காரணம் என்னவென்று வினவத் தோழி அதற்கு மற்றொரு காரணம் கற்பித்துச் சிறைப்புறத்தே நின்றத் தலைவன் கேட்கும் படிக் கூறினாள். இதனை,

**"செய்த வினைய மன்றபல்பொழிற்**
**நா துண் வெறுக்கைய வாகியிவள்**
**போதவிழி மூச்சு யூதும் வண்டே''**[77]

என்னும் அடிகளில் காணமுடிகிறது. இவ்வாறாகத் தோழிக்கும் செவிலிக்குமான உறவு மேம்பட்டு இருந்துள்ளமைப் புலனாகிறது.

**“செல்வற்கு ஒத்தனம் யாம் என மெல்ல என்**
**மகன்வயின் பெயர்தந்தனே அதுகண்டு’’[78]**

என்ற பாடலில் தலைவனின் மகனைப் (பாதுகாப்பாக) பார்த்துக் கொண்டும் இருந்துள்ளது தெரிகின்றது.

## குடும்பம் – திருமண உறவு

சமுதாயத்தின் அடிப்படை அலகு குடும்பம் ஆகும். குடும்பம், சமுதாயம், சமூகம் என்னும் வளர்ப்படிநிலையில் ஆரம்ப காத்தாவாக இருப்பது குடும்பம் ஆகும். திருமணம் என்கிற முடிச்சு விழும்போது குடும்பம் என்கிற ‘கட்டு’ உருவாகின்றது. குடும்ப உறவுகளுக்கு அடித்தளம் திருமண உறவுகள் ஆகும். சங்ககாலத்தில் திருமணம் என்பது பொய்யும், வழுவும் தோன்றியதால் சமூக அடையாளங்களைத் தீர்மானிக்கும் காரணியாகவும், காரணமாகவும் திருமணங்கள் நடந்தேறி வந்துள்ளன. இதனை மருதத்திணைப் பாடல்களில் வதுவை, என குறிக்கப்பட்டுள்ளது.

## மணம் எவ்வாறு நிகழ்ந்தது

சங்கச் சமூகத்தில் திருமணம் எவ்வாறு நிகழ்ந்தது பற்றி மருதத்திணையில் சிறப்பாக பதிவாகியுள்ளன. இதனை,

**“வதுவை மண்ணிய மகளிர் விதுப்புற்றுப்**
**பூக்கணும் இமையோர் நோக்கு மறைய’’[79]**

மேற்கண்ட வரியின் மூலம் பலரும் அழைத்து உணவு உண்ணச் செய்துள்ளனர். பறவைகள் நிமித்தம் இனிதாக விளங்கிடச் சந்திரன் உரோகிணியைச் சேரும் நல்லநாள், அந்நாளில் திருமண வீட்டை அலங்கரித்தனர். இறைவனை வணங்கி, முரசுகள் முழங்கச் சில மகளிர் கூடி மணப் பெண்ணை நீராட்டினர் அவளது அழகை அம்மகளிர் பார்த்து வியந்து பார்த்து நாணிமறைந்து நின்று வாழ்த்தியுள்ளனர்.

## திருமண முதிய மகளிர்

*மருத நில திருமணத்தில் முதிய மகளிர் இருந்தனர். தலையில் குடம் ஏந்திய வரும் / புதிய அகன்ற வாயையுடைய மட்பாத்திரத்தை உடையரும் ஆகிய மணத்தைச் செய்து வைக்கும் ஆரவாரம் உடைய மங்கல முதிய மகளிர் முன்னே தர வேண்டியவற்றையும், முறை முறையாக எடுத்துத் தந்தனர். மகனைப் பெற்ற தேமலையுடைய அழகிய வயிற்றை உடையத் தூய அணிகளையுடைய மகளிர் நால்வர் ஒன்று கூடி நின்று கற்பினின்றும் வழுவாது நல்ல பலவாகிய உதவிகளையும் செய்து நின்னை மனைவியாகப் பெற்ற உன் கணவனை நீ பெரிதும் விரும்புகின்றவள் ஆவாய் எனச் சொல்லி வாழ்த்தி மங்கல நீருடன் கலந்து சொரியப்பெற்ற நனைந்த இதழ்களை உடைய பூக்கள் கரிய கூந்தலின் மீது நெற்களுடன் பொருந்தி விளங்க திருமணம் முடிந்தது. இதனை,*

***“வால் இலை மகளிர் நால்வர் கூடி***
***கற்பினின் வழாஅ நற் பல உதவிப்***
***பெற்றோர் பெட்கும் பிணையை ஆக! என’’[80]***

*என்னும் அடிகளின் மூலம் அறியமுடிகின்றது. இவ்வாறாக மணம் முடிந்தப் பின்பு சுற்றத்தார் கல்என்ற ஒலியினராய் விரைந்து வந்துத் தலைவியை நோக்கி நீ பெரிய மனை வாழ்க்கைக்கு உரியவளாக ஆகுக! என்று வாழ்த்தி வைத்துள்ளது அறிய முடிகின்றது. உழுந்துக் களி சமைத்து உண்டு, விருந்து பல உண்டு உரோகிணிநாளில் புதுமணல் பரப்பி, விளக்கேற்றி திருமணம் செய்து வைத்தனர். இதனை,*

***“வதுவை நல் மணம் கழிந்தபின்றை***
***கல்லென் கம்மையர், நெரோனப் புகுதந்து’’ [81]***

*என்னும் அடிகளினும் காணமுடிகின்றது. இவ்வாறாகச் சுற்றத்தார் வாழ்த்த திருமணம் நிகழ்ந்தது என உணரமுடிகிறது. உளுந்துக்களி சமைத்த விருந்து சங்கக்காலத்தில் பரிமாறி மகிழ்ந்துள்ளனர்.*

### இரவில் திருமணம்

சங்க காலங்களில் திருமணம் இரவிலும் நடந்தேரி இருந்துள்ளது. அத்திருமணங்கள் இருளானது நீங்கிய அழகுடைய விடியற்காலத்தின் தீயகோள்களின் தொடர்பு நீங்கப்பெற்ற வளைந்த வெண்மையான திங்களினைக் குற்றமில்லாத சிறந்த புகழையுடைய உரோகிணி என்ற நாள் நட்சத்திரம் அடைந்தது. அப்போது நம் இல்லத்தில் உழுத்தம் பருப்பு இட்டுச் சமைத்துப் பொங்கலுடன் (கலியுடன்) மிக்கச் சோற்றையும், உறவினரும் மற்றவரும் உண்ணுதையினால் ஏற்படும் ஆராவரம் இடையறாதுக் கேட்க வரிசையான கால்களையுடைய குளிர்ந்த பெரிய திருமணப் பந்தலில் புதியதாகக் கொண்டு வந்த மணலைப் பரப்பி வீட்டில் விளக்கேற்றி வைத்து மாலைகளைத் தொங்க விட்டனர். இதனை,

***"மனை விளக்குறித்து, மாலை தொடரி***
***கனை இருள் அகன்ற கவின் பெறுகாலை***
***கோள் கால் நீங்கிய கொடு வெண் திங்கள்''[82]***

என்னும் அடிகளில் காணமுடிகின்றது. இவ்வாறாக திருமணம் இரவில் நிகழ்ந்ததை காணலாம். ஆரியச் சமூகத்தில் இன்றும் இவ்வழக்கம் இருந்து வருகிறது. இது சங்கச் சமூகத்தின் எச்சமாகும்.

### கணவனைக் காத்தல்

சமூக அங்கீகாரம் பெற்ற கணவன், மனைவி அன்புடன் இணைந்து வாழ்ந்துள்ளனர். அவ்வாறாகத் திருமணம் புரிந்து வாழும் கணவன் மனைவி இருவரும் இன்பமுடன் வாழ்வை நடத்தி வந்தனர். போர் காலத்திலும் கணவனைக் காத்து வந்துள்ளனர் மனைவியர்கள். இதனை,

***"காவல் செறிய மாட்டி ஆய்தொடி***
***எழில் மாமேனி மகளிர்''[83]***

என்ற அடிகளில் காணலாம். பழைய வெற்றியுடைய வல்வில் ஓரியைக் கொன்று திருமுடிக்காரி புகுந்த போதுப் பகைவர் புலத்து ஒப்பற்ற பெருந்தெருவில் பேரிரைச்சல் ஏற்பட்டது. அவ்வொலிப் போல

இவ்வூரிலும் உண்டாயிற்று அது கொண்டு ஆய்ந்த வளையையும், மாந்தளிர் போன்ற உடல் அழகினையும் உடைய இல்லத்துப் பெண்கள் காவல் செறியச் செய்து தம் கணவன் மார்களைப் பாதுகாத்துச் சிறப்படைந்துள்ளனர். மேற்கண்டவாறு திருமணம் நிகழ்ந்து சிறப்படைந்து உள்ளது. அடுத்து இவர்கள் இருவருக்கும் பிறக்கும் புதல்வனின் நிலையை காணலாம். இவ்வாறாக குடும்ப உறவு நிலை ஓங்கி இருந்துள்ளது. ஐங்குறுநூற்றில் இடம் பெற்றுள்ள தலைவிக்கு இரு உவமைகள் எடுத்துக்காட்டி விளக்கி உள்ளார். ஓரம்போகியார் பூத்து பயன்படாக் கரும்பினையும், காய்த்துப் பயன்படும் நெல்லினையுமுடைய ஊர் என்பதனை,

**“பூத்தகரும்பிற் காய்த்த நெல்லிற்**
**கழனியூரன் மார்பு’’[84]**

என்னும் அடிகள் புலப்படுத்துகின்றன. இங்கு பயன்படாப் பொது மகளிரையும் மிகப் பயந்து பயன்படும் குல மகளிரையும் ஒப்பாக காட்டியுள்ளார். இதன்மூலம் குலமகளிரின் குடும்ப அமைப்பு வெளிப்படுகிறது. தகாத ஒழுக்கம் கொண்டு பரத்தையிடம் செல்லும் தந்தையை எதிர் பாராத விதமாகத் தேரில் செல்லும் போதுப் புதல்வன் சந்திக்கிறான் தாய் அவனைக் கண்டிப்புடன் குச்சியை வைத்து அடித்து திருத்த முனைகிறாள். இதனை,

**“பூங்கண் புதல்வனை நோக்கி நெடுந்தேர்**
**தாங்குமதி, வலவ! என்று இழிந்தனை தாங்காது’’[85]**

என்ற அடிகள் புலப்படுத்துகிறது. இவ்வாறாக புதல்வன், தந்தை, தாய் இருவரையும் இணைக்கும் பாலமாகவும் இருந்துள்ளான் தலைவன் தன் மனைவியை மார்போடு அணைக்கிறான். இதன்மூலம் புதல்வனின் உறவு உணரமுடிகின்றது.

**தாயின் தந்தை மூத்தோன் பெயர் உறவு**

*குடும்ப உறவு நிலையில் தான் பெற்ற குழந்தைக்கு தன் தந்தையின் பெயரை வைத்து அழைத்துள்ளனர். புதல்வரின் தாய் தன்னுடைய தந்தை பெயரை வைத்து கூப்பிடுவதால் தலைவனின் பொய் முயக்கத்திற்கு இணங்கி விடுகிறாள் தலைவி. இதனை,*

***"முதல்வன் பெரும் பெயர் முறையுளிப் பெற்ற***
***புதல்வன் புல்லிப் பொய்த்துயில் துஞ்சும்''[86]***

*என்னும் அடிகளில் காணமுடிகின்றது. தலைமுறை தலைமுறையாக மூத்தோன் பெயரைச் சுட்டுவது வழக்கமாக இருந்துள்ள து.*

**தந்தையின் தந்தை பெயர் உறவு**

*பரத்தையர் பால் தலைவன் சென்று இல்லம் திரும்பி வந்திருப்பானோ எனத் தலைவி ஐயம் கொள்கிறாள். அவனுடன் சேர மறுக்கிறாள். அதற்குத் தலைவன் தன் புதல்வனுக்கு தன் தந்தை பெயர் சூட்டி அழைத்தாள் அவன் வருகிறான். பின்னர் அவளும் தாய் பசுவினை கண்ட பசு போல அவனுடன் வருவாள் எனக் கூறி புதல்வனை அழைத்தான். இதனை,*

***"மேதக்க எந்தை பெயரனை யாம் கொள்வோம்***
***தாவா விருப்பொடு கன்று யாத்துழிச் செல்லும்***
***ஆபோல் படர்தக''[87]***

*என்ற வரிகள் புலப்படுத்துகின்றன. குழந்தைப் பிறந்த உடன் பெயர் சூட்டும் முறையும் இருந்துள்ளன. இதனை,*

***"அகன் துறை ஊரனும் வந்தனன்***
***சிறந்தோன் பெயரன் பிறந்த மாறே''[88]***

*என்ற அடிகளில் உணர முடிகிறது. இருள் செரிந்த இரவிலே அகன்ற நீர்த்துறையை உடைய ஊரனாகிய தலைவன் தன் தந்தையின் பெயரைச்*

சூட்டிக் கொள்ளப்போகும் மகன் பிறந்தான் என்ற காரணத்தால் தலைவன் தன் இல்லம் வந்துள்ளமைத் தெரிகின்றது. இக்கால வழக்கிலும் தந்தையின், தாயின் மூத்தோன் பெயர்சூட்டும் வழக்கம் நிகழ்ந்து வருவதைக் காணமுடிகின்றது.

## வணிக உறவு

சங்க காலத்தமிழர் வாணிகம் கி.மு. இரண்டாம் நூற்றாண்டு முதல் கி.பி. இரண்டாம் நூற்றாண்டு வரையில் தமிழர்கள் சிறப்பாக நடத்தியுள்ளனர். “சங்க காலத்தமிழர் வாணிபம் பாரத தேசத்தின் வடக்கே கங்கைக் கரை (பாடலிபுரம்) முதலாகக் கிழக்குக் கரை மேற்குக்கரை நாடுகளிலும் வாணிபம் நடத்தியுள்ளனர். தமிழகத்திற்கு அப்பாலும் கிழக்கே, இலங்கை, சாவநாடு, (கிழக்கிந்திய தீவுகள்) மலேயா, பர்மா, முதலான கடல் கடந்த நாடுகளோடு செய்த வாணிபமும், மேற்கே அரபு நாடு, அலக்சாந்திரியம் (எகிப்து), உரோமம் சாம்ராச்சியம் (யவனதேசம் ஆகிய நாடுகளில் வாணிபமும் சிறப்புற நடைப்பெற்றுள்ளன.’’[89] பழங்கால வாணிகத்துக்கும், விஞ்ஞான வாணிகத்துக்கும் வேறுபாடுகள் உள்ளன. அக்காலத்தில் இடம், பொருள் சூழ்நிலைக்கு ஏற்றார்போல தரை வழியாகவும், கடல் வழியாகவும் வாணிபம் நடைப்பெற்றுள்ளன. இதனை யவன ஆசிரியர்களான தாலமி, பிளைநி போன்றவர்கள் குறித்துள்ளனர். “சங்கக்காலத்துத் தமிழரசர்கள் தங்களுடைய நாடுகளில் வணிகர்க்கு ஊக்கமளித்து வாணிகத்தை வளர்த்தார்கள். அவர்கள் தங்களுடைய நாடுகளில் வாணிகக் கப்பல்களைத் வந்துப் போகவும் ஏற்றுமதி இறக்குமதி செய்யவும் துறை முகப்பட்டினங்கள் அமைத்தார் இராக்காலத்தில் கடலில் வருகிற கப்பல்களை திசை தப்பிப் போகாமலும், துறை முகத்தைக் காட்டா கலங்கறை விளக்குகளை அமைத்தார்கள்.’’[90] துறைமுகங்களில் உள்ள வாணிகப் பொருள்கள் களவு போகாதடி காவல் வைத்தும் உள்ளனர். “வாணிகஞ்செய்து பெரும் பொருள் ஈட்டினவணிகப் பெருமக்களுக்கு எட்டி என்னும் பெயரும் எட்டிப் பூ என்னும் பொற்பதக்கத்தையும் அளித்துச் சிறப்பினைச் செய்தார்கள்.’’[91]

தரை வாணிகமும் கடல் வாணிகமும் பெருகவே, அவற்றைச் சார்ந்த பயிர்த்தொழில் வளர்ச்சியும், கைத்தொழில் வளர்ச்சியும், பெருகிப் பொருள் உற்பத்தி அதிகப்பட்டது. பொருளின் உற்பத்தியினாலும் வாணிகத்தினாலும் பொருளாதாரம் உயர்ந்து நாடு செழித்து மக்கள் நல்வாழ்வு வாழ்ந்துள்ளனர். இவ்வாறாக ஒரு நாட்டின் வளர்ச்சிக்கு வாணிகம் அடிப்படையாக அமைந்துள்ளதைச் சங்கப் பாடல்கள் தெளிவுறுத்துகின்றன.

**பண்டமாற்று**

சங்கக்காலத்தில் மக்கள் அடிப்படைத் தேவையான அரிசி, உப்பு, பருப்பு, பால், தயிர், மீன், இறைச்சி முதலானப் பொருட்களைக் காசு கொடுத்து வாங்காமல் பண்டங்களை மாற்று செய்து கொண்டார்கள். பண்டமாற்று என்பது ஒரு பொருளைக் கொடுத்து அதற்கு ஈடாக இன்னொரு பொருளைக் கொள்வதாகும். எனினும் சங்ககால வாணிகம் பண்டமாற்று முறையாக இருந்தப் போது ஏனைய பிற நாடுகளிலும் பண்டமாற்று முறையே நிலவியுள்ளது. இப்பண்டமாற்றைப் புலப்படுத்துவனவாக,

> ***“அகழ் கோல் உமணர் காதல் மடமகள்***
> ***சில்கோல் எவ்வளை தெளிர்ப்பவீசி’’[92]***

என்ற வரிகளின் மூலம் அறியலாம்.

**தரை வாணிகம்**

அயல் நாடுகளுக்குத் தரை வழியாகச் சென்று வாணிகம் செய்தனர். கழுதை, எருது, வண்டிகள் ஆகியவற்றில் வாணிகப் பொருட்களை ஏற்றிச் சென்று வந்துள்ளனர். இதனை,

> ***“மழைபெயல் மறந்த கழைதிரங்கு இயலில்***
> ***செல்சாத்து ஏறியும் பண்பில் வாழ்க்கை’’[93]***

*என்ற பாடல் அடிகளின் மூலம் அறியலாம். அக்காலத்தில் வழிபறிசெய்ய கள்வர் அலைவார்கள் அவர்களை அடித்து ஓட்டுவதற்கு வாணிகர்கள் தங்களுடன் வில் வீரர்களை அழைத்துச் சென்று உள்ளனர் என்பதை இப்பாடல் புலப்படுத்துகிறது.*

**கடல் வாணிகம்**

*கடல் கடந்து தமிழர்கள் வாணிகம் செய்துள்ளனர். மரக்கலங்களாகிய நாவாய்களில் உள்நாட்டுச் சரக்குகளை ஏற்றிக்கொண்டு போய் அயல்நாடுகளில் விற்று அந்நாடுகளிலிருந்து வேறுபொருள்களை ஏற்றிக்கொண்டு வந்தார்கள் தங்கள் நாவாய்களை கடலில் கறை ஓரமாகச் செலுத்திக்கொண்டு போய் கரையோரமாகயிருந்த ஊர்களில் தங்கிப் பொருட்களை ஏற்றுமதி இறக்குமதி செய்தார்கள். தொல்காப்பியர் காலத்தில் கடல் வாணிகம் இருந்துள்ளது. அகத்திணையிலில்,*

***"முந்நீர் வழக்கம் மகடூ உவோடு இல்லை''***[94]

*என்ற நூற்பாவின் வழியாக கடல் வாணிகம் இருந்ததை அறியலாம். மேலும் பெண்களை கடல் கடந்து அழைத்துச் சென்று வாணிகம் செய்யவில்லை என்பது தெரிகிறது.*

**உள்நாட்டு வணிகம்**

*சங்கக்காலத்தில் உள்நாட்டு வாணிகமும் நல்ல வளர்ச்சியுடன் இருந்தது. அவை பண்டமாற்று முறையில் நிகழ்ந்தது. கோவலன் கண்ணகியும் சிலம்பைப்பெற்றுக் கொண்டு "மதுரைச் சென்று மாறி வருகுவன் மயங்கா தொழி என்று கூறிச் சென்றான். அக்காலத்தில் நெல்லே விலையைக் கணக்கிட அடிப்படையாக இருந்தது உப்பும், நெல்லும் இன்று ஒரே அடிப்படையிலும் சமமாக மதிக்கப்பட்டுள்ளது. இதனை,*

***"நெல்லும் உப்பும் நேரே யூரிர்***
***கொள்ளீரோ அவனச் சேரிதொறும் நுவலும்''***[95]

மேற்கண்ட பாடல்வரிகளின் மூலம் உணரலாம். பெரிய வண்டியில் உப்பை மட்டுமின்றித் தம் வீட்டுச் சாமான்களையும் ஏற்றிக்கொண்டு உள்நாட்டுக்கள் நெடுந்தொலைவு சென்று விற்பவர்கள் உமணர்கள் ஆவார். இவர்களைப் பற்றி "பெரும்பாணற்றுப் படையிலும்''[96], "சிறுபாணாற்றுப் படையிலும்''[97] ஆகியவற்றில் உள்ளன. பெரிய நகரங்களில் அங்காடிகள் கட்டின, நாட்காலத்தில், நாளங்காடியும், இராக்காலத்தில் அல்லங்காடியும் நடைபெற்றன. புகார் நகரத்து அங்காடி பற்றிச் சிலம்பும், மதுரை நகரத்து அங்காடியும் பற்றி மதுரை காஞ்சியும் குறிப்பிடுகின்றன. "நற்றிணைப் பாடலில் அகன்ற அங்காடியினைப் பற்றிக் குறிப்புள்ளது.''[98] கடைகளில் விற்க்கப்படும் பொருள்களுக்கு ஏற்ப ஒவ்வொரு கொடியும் கட்டப்பட்டு இருந்தது. இராக்காலத்தில் கொடிகளின் பணியை வண்ண விளக்குகள் செய்தன. இதனை,

**"மாடம் பிறங்கிய மலிபுகழ்க் கடல்**
**நாளாங்காடி நனந்தலைக் கம்பலை**
**அல்லங்காடி அழிதரு கம்பலை''[99]**

என்ற அடிகளின் மூலம் அறியலாம்.

சங்க காலத்தில் வணிக உறவு நிலங்களுக்கு இடையே நடைபெற்றது. ஐவகை நில மக்கள் தங்களிடம் கிடைக்கும் பொருள்களை அண்டை நிலங்களில் கிடைக்கும் பொருளுக்கு ஈடாக பண்டங்களை பரிமாற்றிக் கொண்டு வாழ்ந்து வந்தனர். கடற்கரை பகுதி நெய்தற் நிலத்தவர் தங்களிடம் கிடைக்கும் மீன், உப்பு போன்ற பொருள்களை மருத நிலத்து நெல்லிற்கு ஈடாக பண்டமாற்றிக் கொண்டு வாழ்ந்தனர். இதனை,

**''சின்மீன் சொரிந்து பன்னெற்''[100]**

என்னும் அடிகளின் மூலம் அறியமுடிகின்றது. இவற்றில் உப்பை நெல்லுக்குப் பண்ட மாற்றாக விற்பதும் ஊரீர் மருத நிலத்திற்கே உரிமையுடைசொல் என்று அழைப்பதும் இதனை உறுதிபடுத்தும் தலைவி இங்குப் ''பரதவர் மடமகள்'' என்றும் உமணர் காதல் மடமகள் என்றும்

அழைக்கப் பெறுகின்றாள். இவ்வாறாகத்திணை இடையேயான காதற் கலப்பை நாம் அறிகின்றோம். ''உமணர்தம் இளைய செல்வ மகள் உப்பு விற்பதற்காகத் தன் கை வளையல்கள் ஒலிக்க அழகுறத் தெருக்களில் செல்கிறாள். இதில் நெல்லும் உப்பும் நேரே ஊரீர் என்று அவள் கூவுகின்றாள். மற்றை நிலங்களில் உமணர் தம் வண்டிகளில் உப்பு விற்கச் செல்லுங்கள் அவளுடைய அழகுமகள் இடைப்பட்ட ஊர்களில் உப்பைக் கூவி விற்கிறாள். தெரு நாய் அவளை நோக்கிக் குரைக்கையில் அவள் திகைத்தும் அஞ்சியும் நிற்கிறாள் அவளது நடுங்கிய பார்வை கண்டுத் தான் கவரப்பட்டதாகத் தலைவன் கூறுகிறான். இக்காதலனை மருதத் தலைவனாக இயலுகின்றது. என தமிழலண்ணல் சங்க மரபு நூலில் கூறுகின்றார்.'' [101]

உப்பினைத் தவிர சிப்பியையும் பண்ட மாற்றாக அளித்துள்ளனர். இதனை,

**"பல்மீன் கொள்பவர் முகந்த இப்பி**
**நார் அரி நறவின் மிகழ் நொடைக் கூட்டும்''** [102]

என்னும் அடிகளால் புலனாகின்றது. கடல் நீர்ப் பரப்பில் பல மீன்களைப் பிடிப்பவர் அவற்றுடன் கொண்ட சிப்பிகளைப் பன்னாடையால் அரிக்க பெறும் மகிழ்ச்சி தரும் கள்ளின் விலையாகத் தருவதைக் காணமுடிகின்றது. அழகிய சொற்களையுடைய பாண்மகள் நீண்ட கொடிகள் அசையும் 'கள்' மிக்க தெருவில் விற்கச்சென்றான் இங்கு வாங்குபவர் பழைய செந் நெல்லை முகந்துக்கொடுப்பதைக் கொள்ளாமல் கழங்குப் போன்ற பெரிய முத்துக்களுடன் சிறந்த அணிகளையும் பெறுகிறாள். இதனை,

**"பழந் செந்நெல்லின் முகவை கொள்ளாள்**
**கழங்கு உறழ் முத்தமொடு நன்கலம் பெறூஉம்''** [103]

என்ற அடிகளில் காணமுடிகின்றது. இவற்றின் மூலம் பாணரும் மீன் பிடித்தலை செய்துள்ளமையும் தெரியமுடிகிறது.

தமிழகத்தை வந்துக் கண்ட இந்த மேலை வணிகர் யவனர் எனப்பட்டனர். இவர்கள் உமணர்களாக இருக்க வாய்ப்புள்ளது. ''கிரேக்க நாட்டவர் தம் மொழியை அயவானேஸ்'' என்றுதான் குறித்தனர். யவன என்ற பெயர் இதன் திரிபே. பழைய சமஸ்கிருத காவியங்களிலும் யவன என்ற சொல் அப்போதும் கிரேக்கரையே குறித்து வழங்கப்படுகிறது. இது போலவே பண்டைத் தமிழ் நூல்களில் யவனர் என்ற பெயர் முற்றிலும் கிரேக்கர், உரோமர்களையே குறித்து வழங்கப்பட்டது. என கா. அப்பாதுரை குறிப்பிடுகிறார்.''[104] இவற்றின் மூலம் வெளிநாட்டு வாணிப உறவு உணரமுடிகிறது. 'உமணர்' என்பவர்கள் மருத நிலத்தில் வந்து உப்பு வணிகம் செய்துள்ளதை முன்பே அறியப்பட்டுள்ளது. இவர்கள் கிரேக்கர்கள் எனவும் தெரிகின்றது. தமிழகத்தில் கிரேக்கர்கள் வந்து தங்கியுள்ளமை அறியமுடிகிறது.

''கிரேக்க மொழியில் சில தமிழ்ச் சொற்கள் ஏறியிருப்பதால் தமிழருக்கும், கிரேக்கர்களுக்குமிடையே பண்டை நாட்களில் வாணிபம் நடந்து வந்தது என்பது விளங்கும். கிரேக்கமொழி ஒருஸா என்பது தமிழ் அரிசியேயாம், தமிழ்ச்சொல்லின் இஞ்சிவேர் என்பது 'சிக்கிபேரிஸ்' என்றாகிப் பிறகு ஸிங்கிபேர் என்று மாறி ஆங்கிலத்தில் 'ஜிஞ்ஜர்' என்றாகியது. தமிழ்க் குருந்தம் ஆங்கிலத்தில் கோரண்டம் ஆனது வெளிப்படை, தமிழ்ச் சந்தனம் அல்லது சாந்து ஸாண்டல் என்று மாறியதும் தெளிவு சங்க காவலர் என கு.சண்முகபிள்ளை எடுத்துக் காட்டுவதிலிருந்து அறியமுடிகின்றது.''[105] இவ்வாறாக வாணிப உறவு தமிழர்களிடம் சங்க காலத்தில் சிறப்புடன் நடைபெற்றுள்ளதை அறியமுடிகிறது.

## தொகுப்புரை

மேற்கண்ட தரவுகளின் மூலம் சமூக உறவுகள் சங்கக்காலத்தில் எவ்வாறு இருந்துள்ளது என்பதை காணலாம்.

- மன்னன் மக்கள் உறவு உயர்வாகக் கருதப்பட்டுள்ளது. மன்னன் உயிர்த்தே மலர்தலை உலகம் என்றும், எவ்வழி ஆடவர் நல்வர் அவ்வழி வாழிய நிலனே என்பது போல மன்னன் மக்கள் உறவு இருந்துள்ளது.

- மன்னனுக்கும் புலவனுக்கும் இடையே கருத்தொற்றுமையுடனும், நல்லன்புடனும் இருந்துள்ளனர். புலவர்கள் அவ்வப்போது மன்னனுக்கு ஆலோசனை வழங்கி நாட்டில் அமைதி நிலவக் காரணமாய் இருந்துள்ளனர்.

- கலைஞர்களை மன்னன் பரிசளித்து சிறப்புச் செய்துள்ளான். அவர்களைப் புகழ்ந்துத்தக்க தருணங்களில் உதவியும் செய்துள்ளான்.

- மன்னர்களுக்கு பாணர்கள் இசைமீட்டி மகிழ்வித்தனர். தலைவியின் ஊடல் தீர்க்கும் வாயிலாகவும், சிறந்த மற்போர் வீரனாகவும் இருந்துள்ளனர்.

- தலைவியின் தோழியும் பாணனுடன் நெருங்கிப் பழகித் தலைவனிடம் நற்பண்பு உடையவளாக இருந்துள்ளார்.

- பாணன், பாண்மகள் உறவு அண்ணன் தங்கை உறவாகவும் சமூக போராட்டத்தின் விடியலுக்கு ஏங்கும் உறவாக இருந்துள்ளது.

- மன்னன், பொருநர், விறலியர், கூத்தர் போன்ற கலைஞர்களுக்கு எட்டி, காவிதி போன்ற கலை விருதுகளை வழங்கியதோடு அல்லாமல் அரசவை விருந்தில் பொழுதுபோக்கும் விதத்திலும் ஈடுபடுத்தியும் உள்ளார்கள்.

- ❖ *சங்கக்காலத்தில் திருமணம் எவ்வாறு நிகழ்ந்தது, அவற்றில் ஏற்படும் குடும்ப உறவு, திருமணத்தின்போது முதிய மகளிர்கள் நின்று வாழ்த்துவதும், திருமணம் இரவில் நடைபெற்றதையும் காணமுடிகிறது.*

- ❖ *சங்கக்கால மகளிர் கணவனைக் காப்பதுக் கடமையாகவும் உரிமையாகவும் இருந்துள்ளனர். தாயின் தந்தை அவளுடைய மூத்தோன் பெயரைத் தன் மகனுக்குச் சூட்டி அழைத்ததையும் தந்தையின் பெயரைத் தன் மகனுக்குச் சூட்டி அழைத்ததையும் காணமுடிகிறது.*

- ❖ வணிக உறவு மேலை நாடுகளான கிரேக்கம், ரோம், எகிப்து, அரேபிய கிழக்கிந்திய நாடுகளோடும் வணிகத் தொடர்பு கொண்டிருந்தனர். உள்ளாட்டு மற்றும் தரை வணிகமும் சிறப்போடு நடைபெற்றது பண்டமாற்று முறை பரவலாக சங்கக்காலத்தில் இருந்துள்ளது.

## மேற்கோள்கள்

1. ஆ. இராமகிருட்டிணன் அகத்திணை மாந்தர்கள் – ஓர்ஆய்வு ப.163
2. தொல்காப்பியம் (பொருள்) அகத்.44
3. மேலது., அகத் - 42
4. (தொல்) அகத் 45
5. அ. சிவலிங்கனார், தொல்காப்பிய உரைவளம் அகத் 45
6. தொல் (பொருள்) களவு நூ.20
7. குறுந்., 167
8. மேலது., 167
9. தொல் (பொருள்) கற்பியல் நூ.10
10. மேலது., அகத்திணை, 48
11. மேலது., அகத்திணை, 45
12. அகம். 6
13. மேலது., 26
14. மேலது., 36, 296
15. மேலது., 46
16. மேலது., 76, 236
17. மேலது., 126
18. மேலது., 196
19. மேலது., 216
20. மேலது., 226
21. மேலது., 226
22. மேலது., 326
23. மேலது., 346
24. மேலது., 356
25. மேலது., 366
26. மேலது., 376
27. மேலது., 386

28. குறள்-552

29. நற்றிணை : 150 (2-3)

30. ஐங்குறுநூறு: மருதம். வேட்கை பத்து (1)

31. தொல் பொருள்: 5

32. மருதக்கலி (13) (4-7)

33. மு.வரதராசன், தமிழலக்கிய வரலாறு, பக்.49

34. புறம். 72

35. ஐங்குறுநூறு வேட்கை பத்து (1,8)

36. மருதக்கலி ; 4,5 பக்: 170

37. அகம். : 26

38. நற்றிணை. (மரு.50)

39. அகம்: 286, 316, நற்: 20, 360, குறுந்: 10. ஐங்குறு (முழுதும்)

40. குறுந்: 53

41. தொல்.பொருள்.புறத்.30

42. பொருள் – 401, பொருநர்.66, சிறுபாண் 203-206

43. ஐங்குறுநூறு. புலவி:48

44. நற்றிணை. 360 (ம)

45. மேலது., 200

46. அகம்.386

47. குறுந். 223

48. ஐங்குறுநூறு (1) வேட்கை பத்து

49. அகம் 106 (10-14)

50. மேலது., 126 (11-12)

51. குறுந். (221) மரு

52. அகம். 76 (3-5)

53. மேலது., 76

54. நற். 170

55. மேலது.,.50

56. அகம். 336 (5-9)

57. அகம். 226 (13-15)

*58. கற் (10) இளம்பூரணர் (உரை)*

*59. இளம்பூரணம் (கற்'10') பக்.111*

*60. சிவலிங்கனார், உரைவளம், ப.82*

*61. நற்றிணை. 400*

*62. ராஜ்கௌதமன், அறம் மற்றும் அரசு, அதிகாரம், பக்.122*

*63. ஐங்குறுநூறு, 76 – (புனாலாட்டு பத்து)*

*64. அகம், 56 (9-10)*

*65. மேலது., 46 (7-10)*

*66. மேலது., 36, 96, 66 (ஐங்.61)*

*67. மேலது., 216 (6-7)*

*68. மேலது., 186 (18-20)*

*69. மேலது., 16 (15-17)*

*70. மேலது., 376 (4-11)*

*71. ஐங்குறுநூறு, தோழிகுரைப் பத்து, ப. 40*

*72. மேலது., புனலாட்டு 77*

*73. மேலது., கிழத்திப்பத்து 67*

*74. மேலது., தோழிக்குரைப் பத்து 1*

*75. அகம் 226 (4-5)*

*76. ஐங்குறுநூறு வேட்கை 3*

*77. மேலது., எருமைப் பத்து 93*

*78. அகம். 26*

*79. மேலது., 136 (7-8)*

*80. மேலது., 86 (12-14)*

*81. மேலது., 86 (17-19)*

*82. மேலது., 86 (4-6)*

*83. நற்றினை, 320*

*84. ஐங்குறுநூறு வேட்கைப் பத்து 4*

*85. அகம்.66*

*86. கலித்தொகை, பாடல்: 25, பக்: 186*

*87. மருத கலி: ப.35, பக்.199*

88. நற்றிணை, 40

89. மயிலை. சீனி வேங்கடசாமி, பழங்காலத் தமிழர் வாணிகம்,பக்.6

90. மேலது., ப.7

91. மேலது., ப.6

92. அகம், 140 (5-8)

93. மேலது., ப.245

94. தொல் (பொருள்)அகத். 37

95. அகம்.390

96. பெரும்பாணாற்றுப்படை, பக்.46, 65

97. சிறுபாணாற்றுப்படை, பக்.51, 55

98. நற்றிணை, ப.258

99. மதுரைக்காஞ்சி, பக்.365-373

100. ஐங்குறுநூறு, புல விபத்து, 49

101. தமிழண்ணல், சங்க மரபு, பக்.256

102. அகம், 296 (8-9)

103. மேலது., 126 (11-12)

104. க. அப்பாதுரை, 1800 ஆண்டுகளுக்கு முற்பட்ட தமிழகம் பக். 53

105. மு. சண்முகம்பிள்ளை, சங்ககால வாழ்வியல், ப.311

# இயல்–4

## சமூக அடுக்குகள்

"அடுக்கு'' என்ற சொல் வரிசை என்னும் பொருளில் கையாளப்படுகிறது. அடுக்குகள் என்பது ஒன்றன் பின் ஒன்றாக ஒரே வரிசைக் கிரமமாகத் தொடர்ந்து வருவதாகும். காரண காரிய தொடர்புடன் அடுக்கி வருவதாகும். சமூகத்தில் ஒவ்வொரு உறுப்பினர்களும் ஏதேனும் ஒரு உறவு முறையில் தொடர்புடையவர்களாக இருக்கின்றனர். இலக்கிய தரவுகளின் வழி காணும் போது இயல்பு வழக்கு, செய்யுள் வழக்கு என்னும் நிலையில் அவை மாறுபடுகின்றன. இவ்விரு நெறிகளின் மூலமாகவே சமூக கட்டமைப்பு தீர்மானிக்கப்படுகின்றன. மார்க்சியம் இதை மேற்கட்டுமானம், அடிக்கட்டுமானம் என பார்க்கிறது.

சமுதாயவியல் இவ்விரு சமூக அடுக்குகளும் ஒருங்கிணைவுடன் செயல்படும் போது சமநிலை, ஏற்பட்டு பின்னர் முரண்பாடற்ற சமூக அமைப்பினை ஏற்படுத்துகின்றது. மருதத் திணைத் தரவுகளைக் கொண்டு அடிக்கட்டுமானம் என்பது பொருளியல் வாழ்க்கையின் அனுகூலங்களால் பெற்ற பொருளாதார உற்பத்தி உறவுகளான 'உழவு' மற்றும் உழவர்கள் ஆகியவற்றினைக் குறிக்கிறது. இது சமுதாயத்தின் 'இருப்பு நிலை' ஆகும். இத்தகைய வாழ்க்கையினை அடிப்படையாகக் கொண்டு அதனடிப்படையின் மேல் அமைந்துள்ள கருத்தாக்கங்கள், சமயங்கள், அரசுகள், மரபுகள் போன்ற ஒட்டுமொத்த சமுதாய உணர்வு நிலையை மேற்கட்டுமானம் என பகுக்கப்படுகிறது. இவ்விரு வகை அடுக்குகளின் மூலம் 'சமூக அடுக்குகள்' என்னும் இவ்வியல் தொல்குடியின மக்களின் முதற்பொருள், உரிப்பொருள், கருப்பொருள், சடங்குமுறை, தொழில், பரத்தமை, மாற்றுத்திறன் படைத்த உறுப்பினர்களின் சமுதாய உணர்வு போன்ற சமூக அடுக்குகளை அறிந்து அவற்றின் சமூக இருப்புகளை ஆராய்வதாக அமைகின்றது.

சமுதாய மார்க்சிய நோக்கு ஆய்வில் அடிப்படையான இயக்கவியல் கொள்கையில் மேற்கட்டுமானமும், அடிக்கட்டுமானமும் சமூக அடுக்குகள் ஆகும். இவ்விரு சமூக அடுக்குகளும் ஒருங்கிணைவுடன் செயல்படும் போது சமநிலை ஏற்பட்டு முரண்பாடற்ற சமூக அமைப்பு ஏற்படுகிறது என்பதைச் சங்க கால இலக்கியத் தரவுகளைக் கொண்டு இவ்விரு அடுக்களை ஆராய்வது இங்கு முக்கிய இடமாகக் கருதப்படுகிறது. சங்கச் சமூக கட்டமைப்பு இயக்கவியல் நிலையில் எவ்வாறு இருந்திருக்கவேண்டும். என்ற அடிப்படையில் இதனை,

- தொல்குடி அடுக்குகள்
- முதற்பொருள் அடுக்குகள்
- நிலம் சார்ந்த அடுக்குகள்
- உரிப் பொருள் அடுக்குகள்
- கருப்பொருள் அடுக்குகள்
- சடங்குமுறை அடுக்குகள்
- தொழிலடுக்குகள்
- பரத்தமையடுக்குகள்
- மாற்றுத் திறனாளியடுக்குகள்

என்பனவற்றின் வாயிலாக ஆராயலாம்.

## தொல்குடியடுக்குகள்

திராவிட நாகரிக மக்களினம் உலகில் முதல் இனமாகும். முதல் மனிதன் தோன்றிய இடம் குமரிக்கண்டம். அவன் பேசிய மொழி தமிழ்மொழி ஆகும். ஆய்வாளர்கள் அக்குமரிக் கண்டத்தில் முதல் இடைத் தமிழ்ச் சங்கங்கள் அமைத்து வளர்த்தனர். இந்நிலப் பகுதி கடற்கோளால் கொள்ளப்பட்டதால் தமிழ்ச் சான்றோரால் மூன்றாவது தமிழ்ச் சங்கம் இன்றைய மதுரையில் தோற்றுவிக்கப்பட்டது.

"மாந்தர் முதலில் தோன்றிய இடம் தென்னகமே என்று மாந்தர்களால் வரலாற்றுநூலார், நில நூல் ஆராய்ச்சியாளர்கள் கூறத் தொடங்கியுள்ளனர். இக்கூற்று வலுப்பெற்று நிலை நாட்டபடுமேல், தமிழே உலக மொழிகளின் தாய் என்று யாவராலும் ஒப்புக் கொள்ளப்படும்'' என சி. இலக்குவனார் கூறியுள்ளார்''[1]

"உலக இலக்கியங்களுள் முதன்மை பெற்றுள்ளவை சங்க இலக்கியங்கள் ஆகும். இவற்றின் மொத்த அடிகள் 2381 அக்காலத்தே இவ்வளவிற்கு விரிவாக்கப்பட்ட இலக்கியங்கள் உலகில் வேறு மொழிகளில் இல்லை என்பது உலக இலக்கியங்களை ஆய்ந்த கமில் சுவலபில் என்னும் செக் நாட்டு மொழியியல் அறிஞர் முடிபாகும்.

இப்பழமை வாய்ந்த தமிழர் மரபில் தொல்குடி அடுக்குகளை, இலக்கியத் தரவுகளைக்கொண்டுக் காண முற்படும் போதுக் கடினமாகவே உள்ளது, சங்க இலக்கிய மரபின் அடிப்படையில் சமூக அடுக்குகளை ஆராய முற்படும் போது கிடைக்கும் தகவல்களின் அடிப்படையில் பாணர்களே முதல் குடிகளாக இருக்க வாய்ப்புள்ளது. வீர நிலைக் கவிதை என்னும் நூல் பாணர்களில் இலக்கியம் எனவும், பாணாறு எனவும், கைலாசபதி குறிப்பிடுகிறார்.''[2]

சங்க சமூக அடுக்குகளை மேற் கட்டுமானம், அடுக்கட்டுமானம் என்ற அடிப்படையில் அணுகும் போது இவ்வுண்மையை அரியமுடிகிறது. இவ்வணுகுமுறை ஒன்றை ஒன்று சார்ந்த உறவுடைய இயக்கவியல் பொருள் முதலியமும் (Dialectical Materialism) வரலாற்றியல் பொருள் முதலியமும் (Flistorical Materialism) மார்க்சிய சித்தாந்தங்களின் அடிப்படைகளாகக் கருதப்படுபவையாகும். இவை பொருள்களையும் அவற்றின் இயங்கு நிலை வளர்ச்சியையும், முதன்மைப் படுத்துபவையாகும். இதனடிப்படையில், சமுதாய அமைப்பினைத் தமக்குள் செயல்பாட்டுறவுடைய இரண்டு கட்டுமானங்களாக மார்க்சியம் பகுத்துணர்கிறது.

*இவ்விரு கட்டுமானங்களுள் அடிக்கட்டுமானம் என்பது (Basic Structure) பொருளியல் வாழ்க்கையின் அணுகூலங்களால் பெற்ற (Benefits of the material Life) பொருளாதார உற்பத்தியுறவுகளைக் குறிக்கிறது. இது சமுதாய இருப்பு (Social Being) என்பதாகும். இத்தகைய வாழ்க்கையினை அடிப்படையாகக் கொண்டு அதன் மேல் மட்டத்தில் அமைந்துள்ள கருத்தோட்டங்கள் சமயங்கள், அரசுகள், மரபுகள், அழகியல்கள். சமுதாய உணர்வு நிலை (Social Consciousness) என்பதாகும்.*

*இதுவே சமுதாய மேல்கட்டுமானம் (Super Structure) எனப்படுகிறது. இது தனக்குள் ஒன்றையொன்றுச் சார்ந்துள்ள பல உள் கட்டுமானங்களையும் கொண்டிருக்கிறது. தொல்குடிச் சமூக அடுக்குகளும் இவ்விரு சமூக உறவுகளைக் கொண்டுக் கட்டமைக்கப்படுகிறது.*

*''எல்லா நாடுகளிலும் பாட்டு உரை நடையைவிடப் பழைமையாய் இருப்பது போலவே, பாட்டுமொழி பேச்சு மொழியினும் முற்பட்டது என மு.வ குறிப்பிடுகிறார்.''[3]*

*இவற்றைக் கருத்தில் கொண்டு "தமிழ்ப் புலமையின் ஆரம்ப, கர்த்ததாக்கள் பாணர்கள் தான் எனில் பாணர்களின் ஊடாகதான் திணைக் கோட்பாடு சங்க இலக்கியக் கவிதையியலில் நிலைப் பெற்றது.''[4] என்பதை அறியலாம். பாணர்களைத் தொல்குடி சங்க சமூக அடுக்குகளில் முக்கிய காரணமாக கருத இடமுண்டு. ஏனெனில்,*

***"அன்பொடு புணர்ந்த ஐந்திணை மருங்கின்***
***காமக் கூட்டங் காணும் காலை***
***மறையோர் தே எத்து மன்றல் எட்டனுள்***
***துறையமை நல்யாழ்த் துணைமையோர் இயல்பே''[5]***

*என்ற நூற்பாவின் வழி நல்யாழ்த் துணைமையோரின் இயல்பாக இருப்பது களவு என்னும் பொருள்பட அமைந்துள்ளமையால், பாணர்களின் களவு வாழ்க்கையை வைத்துதான் களவு என்னும் கருத்தாக்கம் வெளிப்பட்டிருப்பது புலனாகிறது. இவர்களே தமிழரின் தொல்குடி மக்களாவர்.*

*இவர்களின் வழியாகத்தான் திருமண முறை தோன்றி குடும்பம் என்ற அமைப்பு ஏற்பட்டுள்ளது. மேலும் எழுத்ததிகாரத்தின் இறுதி நூற்பாவும் எழுத்துக்களுக்கு ''திரிதருங் கூற்றையுடைய உண்ணின்று எழும் வளியானாய இசையைப் பிணக்கமற ஆராய்ந்து மாத்திரை வரையாற் கொள்ள வேண்டும் என்கிறது.''[6] இவற்றிலும் இசைக்கருவிற்குக் முக்கியத்துவம் கொடுக்கப்பட்டுள்ளது. இவையும் பாணர்களின் யாழ் இசையாகக் கொண்டே வகுத்திருக்க வேண்டுமே ஒழிய பார்ப்பணர் என்று கொள்வது ஏற்கத்தக்தன்று இவை எடுபிரித்தெழுதியவரின் பிழையாக இருக்க வாய்ப்புள்ளது.*

**முதற் பொருள் அடுக்குகள்**

*சமூக அடுக்குகளின் அடிக்கட்டுமானமாக திகழ்வது முதற்பொருள் ஆகும். இது நிலமும் பொழுதும் பொருளாதார உற்பத்தி உறவுகளின் ஆதாரமாக திகழ்கிறது. இதனை,*

> **"முதல் எனப்படுவது நிலம் பொழுதிரண்டின்**
> **இயல்பென மொழிப இயல்புணர்ந்தோரே''** [7]

*என்னும் தொல்காப்பிய நூற்பா முதற்பொருள் அடுக்குகளைத் தீர்மானிக்கிறது. முதற்பொருள் அனைத்து உற்பத்திகளுக்கும் மூலப் பொருள் நிலமாகும். ஆரம்ப காலத்தில் இருநிலத் தோற்றுவாயாக அமைந்த காலத்திலும், நாகரிக வளர்ச்சிப் பெறாத நிலையிலும் அடுக்குகள் கட்டமைக்கப்பட்டுள்ளது. சங்க பனுவல்களை இவற்றைக் கொண்டு நோக்கும் போது இவற்றின் ஆதார அடிக்கட்டுமானம் புலப்படுகிறது.*

**நில அடுக்கு**

உலக நிலத் தோற்றம் இருவகைகள் உடையது நீர், நிலம் என்பவை தொடக்க நிலையாகும். ஆனால் சங்க கால நில அடுக்குகள் ஐவகையாக உள்ளன. நெய்தல் நீர் நிலமாகவும், மற்றவை, முல்லை, குறிஞ்சி, மருதம், பாலை என்பவை யாவும் ஒட்டு மொத்த நிலமாகவும் அடுக்கப்பட்டுள்ளன. இவ்வகையான நில அடுக்குகள் இயற்கையாவன நீர், நிலமாகும் உட்பிரிவில் அடங்குவன யாவும் செயற்கையான சூழல் அடிப்படையில் தொடர்ச்சியாக அடுக்கப்பட்டுள்ளன.

சூழல் அடிப்படையில் நீர் வெப்பமடைந்து மழைப் பொழிவு ஏற்படுகிறது. அப்போது செயற்கையான நிலம் என்று புதிதாக தோன்றுகிறது. அது தான் ஆறு மழைநீர் உயரமான, பள்ளமான பகுதிகளில் விழுந்து ஆறாக செயற்கை வடிவம் பெற்று மழைநீரைக் கடலில் சேர்கிறது. இது மூன்றாவது அடுக்காக ஆறுகள் காணமுடிகிறது. அவ்வாறு தோன்றிய முதல் ஆறு பஃறுளி ஆறு என மெய்பிக்கப்பட்டுள்ளது.

"உலக நாடுகளின் பழமையான நாகரிகங்களுள் இந்திய நாகரிகமும் ஒன்று என்பது மொகஞ்சதாரோ, ஹரப்பா அகழாய்வுக்குப் பிறகு நிறுவப்பட்டுள்ளது. கி.மு.3000 ஆண்டுகளுக்கு முன்னரே பரந்து விரிந்திருந்த இந்திய நாகரிகம் உலக நாகரிகங்கள் அனைத்திற்கும் தாயாகவும் வழிகாட்டியாகவும் விளங்கியிருக்கிறது. இவ்வாறு இந்தியா முழுவதும் பரந்து விரிந்திருந்த நாகரிகம் தமிழ் திராவிட நாகரிகம் என்று கருதுகின்றனர்.''[8]

''இலங்கையில் தோன்றிய மூன்று கடல்கோள்களுள் முதற் கடல்கோள் கி.மு. 2387-ல் இலங்கையை இந்தியாவினின்றுப் பிரித்தது, இரண்டாம் கடல்கோள் கி.மு.504-ல் நிகழ்ந்தது. ஆயின் குறிப்பிடத்தக்க பேரிழப்பு இல்லை. மூன்றாம் கடல்கோள், அசோகன் காலத்தில் வாழ்ந்த தேவனாம் பிரிய திஸ்ஸன் காலத்தில் கி.மு.306-ல் உண்டானது. அதனால் ஒரு லட்சம் ஊர்களும், மீன் பிடிப்பவர் வாழ்ந்த சிற்றூர்களும் 910-ம் (தொள்ளாயிரத்துப் பத்தும்), முத்தெடுப்பவர் வாழ்ந்த நானூறு

*சிற்றூர்களும் அழிந்தன.''[9] என்று இலங்கை வரலாற்று நூல்கள் குறிப்பிடுகின்றன. முதற் கடல்கோள் இலங்கையைத் தமிழகத்திலிருந்து வேறு பிரித்தது என்பதால், அடுத்து நிகழ்ந்த கடல்கோள்களும் இலங்கையைப் போலவே தமிழகத்தையும் பாதித்திருத்தல் இயற்கையேயாகும். அதனால்தான் தென்மதுரை அழிய ஒரு கடல்கோளும், கபாடபுரம் அழிய மற்றொரு கடல்கோளும் காரணமாயிருந்தன என்று இறையனார் களவியலுறை இயம்புகின்றன. மருத நிலம் ஆறும், ஆறு சார்ந்த இடம் என்பதால் பஃறுளி ஆறு உலகில் தோன்றிய முதல் மருத நிலமாக இருக்கலாம். இதனை,*

***“பஃறுளி யாற்றுடன் பன்மலை யடுக்கத்துக்***
***குமரிக் கோடும் கொடுங்கடல் கொள்ள''*** [10]

*என்னும் சிலப்பதிகார அடிகள் விளங்குகின்றன.*

*“அறிஞர் ஈராசு மறைந்த மாநகரங்களைக் கொண்டிருந்தச் சிந்து வெளிப்பகுதியில் வழங்கிய திராவிட முதல் மொழியே தமிழ்க் குடும்ப மொழிகளின் தாய் என்று குறிப்பிட்டுள்ளார். திராவிட முதல்மொழியே பழந்தமிழாகும்''[11] என்கிறார்.*

*மேற்கண்ட தரவுகளின் படி ஆற்றங்கரையில் பெரும்பாலான நாகரிகங்கள் வளர்ச்சிப்பெற்ற இடமாக இருந்துள்ளது. அவ்வாறு உள்ள ஒவ்வொரு ஆறும் மருத நிலத்திற்கு அடிப்படையாகும். மொகஞ்சதாரோவிலுள்ள பெரிய முக்கியமானது அங்குள்ள பெரியகுளமாகும். அக்குளம் வடக்கு, தெற்கு ஆகிய இரு பக்கத்திலும் படிக்கட்டுகளைக் கொண்டுள்ளது. அக்குளத்தின் அடித்தளம் நீர் கசியாதவாறு கட்டப்பட்டுள்ளது. சிந்து நதியிலிருந்து வரும் நீரைப் கொண்டு நிரப்பப்பட்டுள்ளது.*

*“இவ்வமைப்பின் ஒப்புமையைப் போன்றே திராவிட நாகரிகத்தின் முக்கிய நகரங்களின் ஒன்றான கும்பகோணத்திலுள்ள மகாமககுளம் காணப்படுகிறது.''[12]*

இங்கிருந்த குளம் மொகஞ்சதாரோவிலுள்ள பெரியக்குளத்துடன் ஒத்துள்ளது. நீரை காவிரி ஆற்றிலிருந்து எடுத்து நிரப்புவதற்கு ஏற்ப பூமிக்கு அடியில் இணைப்பு வழியின் மூலம் பொருத்தப்பட்டுள்ளது. இதில் தெற்கு, வடக்கு, கிழக்கு, மேற்கு ஆகிய நான்கு திசைகளிலும் படிக்கட்டுகள் உள்ளன. காவிரியிலிருந்து வரும் புதுபுனல் அக்குளத்தில் வந்து சேர்வதற்கு ஏற்ப நன்கு திட்டமிடப்பட்டு அமைக்கப்பட்டு உள்ளது குறிப்பிடத்தக்கது. இக்குளம் எப்போது தோன்றியது என்பது குறித்து தகவல்கள் கிடைக்கவில்லை. மருத நிலம் காவிரியுடன் பிணைத்து காணப்பட்டுள்ளது. இதனை,

**“.................................. காவிரிப்**
**பலர் ஆடு பெருந்துறை மருதொரு பிணித்த’’**[13]

என்ற அடிகளின் மூலம் அறிய முடிகிறது. மருத நிலம் தொன்மை வாய்ந்தமை என்பதும் காவிரியாறும் அதனனினும் தொன்மை வாய்ந்தது என்பதையும் விளங்கிக் கொள்ள முடிகிறது.

நீர்வளம் நிறைந்த பகுதி மருதமாகும். ஆங்கே மருத மரங்களில் புள்ளினங்கள் தங்கி ஒலிக்க ஓங்கி நிற்கும் செறிவினையுடைய, பெரிய பரப்பிடமாகிய மணல் மலிந்த பெருந்துறைக்கண் விளையாடும் இள மகளிரால் பூவும், தளிரும் பறிக்கப்படுவதால் காஞ்சி மரங்கள் சிதைந்த நிலையில் காட்சியளிக்கும். முருங்கமரங்கள் தாழ்ந்துப் பூக்களைச் சொரிதலால் உயர்ந்த நெருப்புப் போலத் தோன்றும், அடைகரையில் சங்குகளும் நாரைகளும் செவ்விய வரிகளுடைய நாரையினத்துப் பறவைகளும் திரியும். கழனிக்கு வாயிலாக உள்ள பொய்கையைச் சார்ந்த விளை நிலத்தில் அழல் போலும் பூவினை உடைய தாமரை மலர்ந்திருக்கும். வளையணிந்த விளையாட்டு மகளிர் பறியாமையால் தாமே மலர்ந்த ஆம்பல் எங்கும் நிறைந்திருக்கும். இத்தகைய காட்சிகள் நிறைந்தது நீங்காத புது வருவாயுடைய அகன்றலை நாடு என்பதை,

**"மருதிமிழ்ந் தோங்கிய நளியிரும் பரப்பின்**
**மணல்மலி பெருந்துறைத் ததைத்த காஞ்சியோடு''[14]**

மருத வள நாட்டில் நீர்வளம் இடையறாமல் இருத்தலின் கால மல்லாத காலத்தும் கரும்பு முற்றிக் கிடக்கும், அதனை அறுத்துக் கொள்வதோடு ஒழியாது அதன் அரிகாலையும் அகழ்ந்து சிதைந்து அங்கு மலரும் பல வகைப் பூக்களையும் கொண்டு மக்கள் மலர்விழா எடுப்பார்கள். தேன் சொரிய நின்ற மருத மரங்களை வெள்ளிய நுரையைச் சுமந்து பாய்ந்து வரும் சிவந்த புது வெள்ளம் அடியோட சாய்க்கும். அவ்வெள்ளத்தை அணை கோலித் தடுப்பான் வேண்டிக் கனத்த வைக்கோற் புரிகள் கொண்டு மணற் கோட்டைகளைக் கட்டுவர். அவையும் அவ்வெள்ளத்தில் சிதைந்து கரைந்து போகும்.

அது கண்ட மக்கள் முன்னினும் அதிக முயற்சியோடு, உயரமும் திண்மையும் பொருந்திய அணைகளை ஆக்கி நீரைத் தடுத்து வெற்றி காண்பார்கள். அப்போது அவர்கள் செய்யும் மகிழ்ச்சி ஆரவாரம் மிகப் பெரிதாய் விளங்கும் வெள்ளத்தைச் சிறைப்படுத்தி வெற்றியும் மகிழ்ச்சியும் கொண்ட மக்கள் கூட்டம் நாட்டின் மூதூர்க்கண் நிகழும் திருவிழாவிற்குச் சென்று, அதனைக் கண்டு மிகுந்த ஆராவரத்துடன் மீளுவதைக் காணலாம். இதனை,

**"கால மன்றியும் கரும்பறுத் தொழியாது**
**அரிகா ல வித்துப் பல பூ விழவின**
**தேம்பாய் மருத முதல் படக் கொன்று''[15]**

என்ற அடிகளில் மருதநிலத்தின் படிநிலைகளைத் தெளிவுபட உணரமுடிகிறது.

மருத நில உணா, செந்நெல்லும், வெண்ணெல்லும், மா, எருமையும், நிர் நாயும், மரம், வஞ்சியும் காஞ்சியும் மருதமும், புள், தாராவும் நீர்க்கோழியும், பறை, மண முழவும் நெல்லரிகிணையும், செய்தி, நடுதலுங்களை கட்டலும் அரிதலுங் கடாவிடுதலும், யாழ், மருதயாழ்,

பிறவுமென்றதனால், பூ, தாமரையுங் கழு நீரும், நீர் யாற்று நீரும் மனைக்கிணறும் பொய்கையும் ஊர், ஊர்களென்பன எல்லா ஊர்களையும் குறிப்பனவாக நிற்கின்றன.

## உரிப்பொருளடுக்குகள்

நிலத்திற்கு உரியப்பொருள் உரிப் பொருளாகும். உரிப்பொருள் ஒழுக்கம் என்னும் மேல்கட்டுமான உற்பத்தி பொருட்களைக் குறிக்கிறது. சமூக உறவுகளுக்கு நிலத்தின் அடிப்படையில் குறிக்கும் ஒழுகழாறுகளைக் கட்டமைவதற்கு ஆதாரமாக திகழ்கிறது. இதனை,

**"புணர்தல் பிரிதல் இருத்தல் இரங்கல்**
**ஊடல் அவற்றின் நிமித்தம் என்றிவை**
**தேருங்காலைத் திணைக்குரிப் பொருளே''[16]**

இந்நூற்பாவில் திணைக்குரியப் பொருளே என்பது நிலத்திற்குரிய பொருளை உணர்த்துகின்றன. இவற்றிக்கு உரியப் பொருட்களைச் சங்க பனுவல்களின் அடிப்படையில் காணும் போது ஒரு திணைக்குரிய பொருளாகவே எடுத்துக் கொண்டாலும் இரு ஒவ்வொரு திணைக்கும் எடுத்துக் கொண்டாலும் பொருந்துவதாக உள்ளது. ''மருதநிலம் நெய்தல் நிலத்திற்கு அணித்தே உள்ளது சில மருதத்நிலத் தலைவர்கள் நெய்தல் நில தலைவியர் மீது காதல் கொண்டுள்ளனர். இதனை,

**''நெல்லின் நேரே வெண்கல் உப்பு எனச்**
**சேரி விலை மாறு கூறலின் மனயை'' [17]**

**"மீன் ஏறி பரதவர் மகளே நீயே**
**நெடுங் கொடி நுடங்கும் நியம மூதூர்க்**
**கடுந்தேர்ச் செல்வன் காதல் மகனே'' [18]**

என்ற அப்பாடல் மூலம் அறியமுடிகிறது. பாலை முல்லை வழிகள் ஒன்றா? அதாவது ''தலைவனின் பிரிவையே பெரும்பாலும் பாடும் பாலைத் திணையில் வறண்டு உலர்ந்த விளைவற்ற நிலம் கற்பனையில் விளக்கப்

*பெறுகின்றது. இதுபோல, வீடு திரும்பும் தலைவனைக் குறித்தே பெரும்பாலும் கூறும் முல்லைத்திணையில், குளிர்ந்த நிழலான இனிய முல்லை வழி அழகுறச் சித்தரிக்கப்பெறுகின்றது. இவ்வாறாக இவ்விரு திணைகளில் நில அமைப்பின் புல வருணனைத் தலைவன் செல்லும் போதும் திரும்பும் போதும் ஒரே வழியின் வருணனையாகவே பெரும்பாலும் அமையும் முல்லை, பாலை என்னும் இருவழிகள் உண்மையில் ஒன்றா இரண்டா என்பது பற்றி ஆராயவேண்டி உள்ளது.''*[19]

*இவ்வாறாக காணும் போது உரிப்பொருள் அடுக்குகள் ஒன்றையொன்றுச் சார்ந்து உறவுடையனவாகவே தோன்றுகிறது. புணர்தல் மட்டுமே குறிஞ்சி நிலத்திற்குரிய பொருளாக இருந்தாலும் சங்க பனுவல் அடிப்படையில் அத்திணைக்கு பிரிதல், இருத்தல், இரங்கல், ஊடல் ஆகிய எல்லா ஒழுக்க நிலைகளையும் பொருந்துவனவாகவே உள்ளன. நெய்தல் நிலத்திற்கு அண்மை நிலமாக மருதமும், குறிஞ்சிக்கு முல்லை அருகிய நிலமாகவும் காண இடமிருக்கிறது. இவ்வாறாக ஒவ்வொரு நில உரிப்பொருள் அடுக்குகளும் பெரும்பாண்மைக் கருதியே கட்டமைக்கப் பட்டுள்ளது என்பது தெளிவாகிறது.*

**கருப்பொருளடுக்குகள்**

*ஒரு நிலத்திலுள்ள கருவாக அமையும் பொருள் கருப்பொருளாகும். இது ஒவ்வொரு நிலத்திற்கும் சூழல் அடிப்படையில் அடுக்கப்பட்டுள்ளன. அந்த வகையில் காலத்திற்கு ஏற்ப சில உயிரிகள் புகலிடம் தேடி செல்வதும் உண்டு இருப்பினும் அவை மீண்டும் இருப்பிடம் நோக்கி வருவதாலும் வழக்கமாகக்கொண்டு உள்ளன. தெய்வத்தைத் தவிர மற்ற கருப்பொருள்கள் இவ்வகை புலம்பெயர்வுகளைச் சந்திக்கின்றன. கருப்பொருளாவன,*

***''தெய்வம் உணாவே மாமரம் புட்பறை<br>செய்தி யாழின் பகுதியொடு தொகை இ<br>அவ்வகை பிறவும் கருவென மொழிப''*** [20]

என்ற நூற்பாவின் மூலம் அறியலாம். இவை ஐவகை நிலத்திற்கும் பொதுவான அமைப்பு அடுக்காக உள்ளது. இவற்றில் ஒவ்வொரு நிலத்திற்கும் ஏற்ப அவற்றின் தெய்வம், மக்கள், பறவை, விலங்கு, ஊர், நீர், பூ, மரம், உணவு, பறைபண், யாழ் தொழில் போன்றவை மாறுபாடு உடையவனாக உள்ளன. கருப்பொருள்கள் உற்பத்தி மேற்கட்டுமான அடிப்படையில் அடுக்கப்பட்டுள்ளன.

**குறிஞ்சியடுக்கு**

குறிஞ்சி நிலத்தில் வாழ்ந்த மக்கள் சிலம்பன், வெற்பன், பொருப்பன், கொடிச்சி, குறத்தி, குறவர், குறத்தியர், கானவர் தம் பிழைப்பிற்காக விலங்குகளையும், பறவைகளையும் வேட்டையாடினர். தேன் கூடுகளை அழித்துத் தேன் கொடுத்தனர். இயற்கையாகக் கிடைத்த காய்கனிகளையும் கிழங்குகளையும் உண்டனர். இம்மக்கள் தாம் வாழ்ந்த குறிஞ்சி நிலத்தில் இருந்த அகில், சந்தனம் வேங்கை மரங்களுக்கும், செடிகளுக்கும், கொடிகளுக்கும் தம்மளவிற் வேறுபாடுகளை ஒவ்வொரு பெயரிட்டு அழைத்தனர்.

குறிஞ்சி மலர்களின் பட்டியல் குறிஞ்சிப்பாட்டிற்காணலாம். அம்மக்கள் இவ்வாறே மலைக்காடுகளில் வாழ்ந்து வந்தப் பல வகை விலங்குகளுக்கும் பெயர்களை இட்டு வழங்கினர். நாளடைவில் அறிவுபெற்றுத் திணை, சாமை, முதலிய கூலங்களையும், கிழங்கு வகைகளையும் பயிரிட அறிந்தனர். அப்பொழுது உண்டானச் சொற்கள், பல, அவர்தம் தொழில்களும் கேற்ப கருவிகளைக் குறிக்கும். பெயர் சொற்கள் பலவாயின, காலப் போக்கில் ஆடல் பாடல் கலைகளைக் குறிக்கும் சொற்களும் அவர்களிடம் தோன்றின. இவ்வாறு குறிஞ்சியடுக்கு நிலத்திற் மட்டும் தோன்றி வளர்ந்த உற்பத்தி சொற்கள் கட்டமைத்தன.

“குறிஞ்சிக்கு உணா, ஐவனநெல்லுந் திணையும் மூங்கிலரிசியும், மா, புலியும் யானையும், கரடியும் பன்றியும்; மரம் அகிலும் ஆரமுந் தேக்குந் திமிசும் வேங்கையும்; புள், கிளியும், மயிலும் பறை, முருகியமுந் தொண்டகப் பறையும் ; செய்தி, தேன் அழித்தலுங் கிழங்கு அகழ் தலுந் திணை முதலியன

விளைத்தலுங் கிளி கடிதலும், யாழ், குறிஞ்சியாழ் பிறவுமென்ற தனால், பூ காந்தளும் வேங்கையுஞ் சுனைக்குவளையும்; நீர் அருவியுஞ் சுனையும்; ஊர் சிறுகுடியுங் குறிச்சியும்''[21]

**முல்லையடுக்கு**

முல்லை நிலத்திலுள்ள சமூக அடுக்குகளில் ஆடு, மாடு, ஆகிய பால் தரும் விலங்குகள் வாழ்ந்து வந்தன. அவற்றை மேய்த்து, அவற்றின் பாலைத் தயிராக்கிப் பின்னர் மோராக்கி, வெண்ணெய் எடுத்து, நெய் காய்ச்சி அவற்றை விற்று வாழ்ந்த மக்களே முல்லை நில மக்களான ஆயர், குறும்பொறைநாடன், தோன்றல் கிழத்தி, மனைவி, ஆய்ச்சியர், இடையர், இடைச்சியர் அவர்கள் அமைதியான வாழ்வு நடத்தினர்.

கால்நடைகளை மேய விட்டு கானங்கோழி முயல், மான் ஆகியவற்றை காத்து அந்த ஓய்வு நேரங்களில் ஆம்பற்குழலும், வேய்ங்குழலும் ஊதி ஆடிப் பாடினர். அந்நிலத்தில் வளர்ந்த மரங்களான, கொன்றை, குருந்து, காயா போன்ற செடிகளான, முல்லை, குல்லை, கொடிகளான, பிடவம் தோன்றி காத்தனர். இவர்களின் தொழிற்களான வரகு விதைத்தல், களை பரித்தல், ஆநிரைமேய்த்தல் குழலூதல், காளை தழுவல், ஆகியவற்றைக் குறிக்கவும், பழக்க வழக்கங்களைக் குறிக்கவும் சாமை, வரகு, முதிரை, ஆகிய உணவு பொருட்களைக் குறிக்கவும் பல்வேறு வகையான சொற்கள் தோன்றின. இவ்வாறாக முல்லையடுக்கு கட்டமைக்கப்பட்டுள்ளது.

"முல்லைக்கு உணா, வரகுந் சாமையும் முதிரையும்; மா, உழையும் புல்வாயும் முயலும்; மரம், கொன்றையுங் குருந்தும் ; புள், கானக்கோழியுஞ் சிவலும்; பறை, ஏறுகோட்பாறை; செய்தி, நிறை மேய்த்தலும் வரகு முதலியன களை கட்டலுங் கடாவிடுதலும், யாழ், முல்லையாழ் பிறவுமென்றதனால் பூ, முல்லையும் பிடவுந் தளவுந் தோன்றியும்; நீர், கான்யாறு; ஊர், பாடியுஞ் சேரியும் பள்ளியும்''[22] என கட்டமைக்கப் பட்டுள்ளதை அறிய முடிகிறது.

## மருத அடுக்கு

சமூக அடுக்குகளில் உள்ள ஆய்வுப் பொருளான மருத நில உறவுகளும் நாகரிக வளர்ச்சிப் பொருந்தி பொருளாதார வித்தாக அமைந்துள்ளன. அரசுருவாக்கமும், ஒழுங்கான பயிர்த் தொழிலும் நடைபெற்ற இடமாக மருத நிலம் காட்சியளிக்கின்றன. இந்நில மக்களான ஊரன், மகிழ்நன், கிழத்தி, 'மனைவி' கடையர் கடைச்சியர், உழவர், உழத்தியர், ஆகியவர் இருந்து உள்ளனர். இல்லத்தைக் காக்கும் ''மனைவி'' என்னும் சொல் இந்நிலத்தில் காணப்படுகிறது. குடும்ப அமைப்பு உருவாக்கப் பெற்றதும். சமூக உறவுகளின் கட்டமைப்புக்கும் மருத நில இடமாக இருக்கிறது.

பொருளாதாரத்தின் ஆதாரமான நெற் பயிர் தொழில் உற்பத்திக்கு நிலைக்களன்களாக மருத நிலம் நிழவுகிறது. சமூக அங்கமான ஊர், என்னும் அமைப்பு அடுக்கு, பேரூர், மூதூர் என வழங்கப்பட்டு வந்தமைக் காணமுடிகிறது. அந்நிலதொழில்களான நெல்லரிதல், களைப்பறித்தல், கடாவிதல், ஆகியவை வரை, வளர அதற்குரிய பெயர் சொற்களும், வினைச் சொற்களும் பெருகின. அந்நிலத்தில் பயிரான தாமரை, கழுநீர், குவளை, ஆகிய செடிகளும் மருதம், வஞ்சி, காஞ்சி, முதலிய மரங்களும் பிற உணவு பயிரான, செந்நெல் வெண்ணெலரிசி போன்றவற்றிற்கும் தனித்தனியே பெயர் பெறத் தொடங்கின.

இவ்வாறே மருத நிலத்தில் வாழ்ந்த எருமை, நீர் நாய் போன்ற விலங்குகளும் நாரை, நீர்கோழி, அன்னம், குருகு முதலிய பறவைகளும் பெயர் பெற்றன. அந்நில மக்களுக்கும் அவர்கள் செய்து வந்தப் பலதுறை தொழில்களுக்கும் பெயர்கள் ஏற்பட்டன. ஓவியம், சிற்பம், நடனம், நாடகம், இசை, மருத்துவம், முதலிய பல கலைகளுக்கும் உரிய சொற்களும் உற்பத்தியாகின. மனித நாகரிகத்திற்கே மருத நிலம் தான் உயிர்நாடியானது. இரு முக்கிய ஆறுகளான, காவிரி வையையாறும் செழித்தன. இதனை,

***"..............................காவிரிப்***

***பலர்ஆடு பெருந்துறை மருதொடு பிணித்த*** [23]

என்ற அடிகளிலும்,

***“மாரி அம்பின் மழைத்தோற் பழையன்***
***காவிரி வைப்பின் போ ஓர் அன்ன என்’’*** [24]

என்னும் அடிகளும் புலப்படுத்துகின்றன.

தமிழகத்தில் பெரியாறு, பொருநை, வைகை காவிரி, பெண்ணாறு, பாலாறு எனப்பல ஆறுகளும் அவற்றின் இணையாறுகளும், கால்வாய்களும் உள்ளன. ஆற்றோரப் படுகைகள் வண்டல் திரட்சியை மிகுதியாகப் பெற்றிருந்தமையால் தமிழர்கள் மிகுந்த உணவுக் கூலங்களை விளைவிக்க முடிந்தது. வையையாறு,

***“பெருநீர் வையை அவளொடு ஆடிப்***
***புலர மார்பினை வந்து நின்று எம் வயின்’’*** [25]

என்ற அடிகளில் பெருநீரான பெருக்கெடுத்துள்ளதை காணமுடிகிறது.

இவ்விரு இடங்களில் தமிழர்தம் பண்பாடும் நாகரிகமும் காவிரியாற்றங்கரையில் வீறார்ந்த நிலையெய்தின. காவிரி வற்றாப் போராக சோழநாட்டு மண்ணை வழப்படுத்திற்று. இவ்வாற்றில் அடிக்கடி பெரும் வெள்ளப் பெருக்கும் ஏற்பட்டுள்ளன. இதனை,

***“புனல் நயந்து ஆடும் அத்தி அணி நயந்து***
***காவிரி கொண்டு ஒளித் தாங்கும் அன்னோ’’*** [26]

என்ற அடிகளில் காவிரி ஆற்றில் வெள்ளம் அடித்துக் கொண்டு செல்வதாக ஆதிமந்தியைக் குறிப்பிடுகின்றன. பெரியாறு சேர நாட்டை வளப்படுத்திற்று, பெரியாறும், பொருணையும் முறையே பாண்டிய நாட்டின் தெற்கு வடக்குப் பகுதிகளை வளப்படுத்தியதோடு நகரிய நாகரிகத்தை மேம்படுத்தின. ஆற்றுச் சமவெளிகள் உணவுப் பொருள்கள் வழங்கும் மூலதனங்களாக அமைய காலப் போக்கில் குறிஞ்சி, முல்லை,

நெய்தல் பாலை ஆகிய நான்கும் மருதத்தைச் சார்ந்தனவாக ஆயின. எனவே சேர, சோழ, பாண்டிய நாடுகளின் தலைநகர்கள் பெரியாறு, காவிரி, வையை ஆறுகளின் கனரகளில் அமைந்திருந்தன. கடுங் கோடை நாட்களில் தரிசாக மாறும் சில பகுதிகளைக் கொண்ட வெப்ப மண்டலக் காடுகள் சில இருந்தன. சகாரா, தார் போன்ற பாலைவனங்கள் இங்கு இல்லை. ஆனால் வறண்ட கோடையில் மலையும், காடும் சார்ந்த பகுதிகளில் இந்த ஐந்தாவது நிலக்கூறு தோன்றல் அல்லது மறைதல் பெற்றது.

''நெய்தல் நில திணையில், குறிஞ்சித் திணையைவிட பிற திணைப்பாடு பொருட்கலப்பு அடிக்கடி மிகவும் திகழ்கிறது. இதற்கு காரணம் தமிழகம் நில இயற்கையின்படி ஐவகை நிலங்களாகப் பகுக்கப்பட்டிருப்பினும், இவை ஐந்தும் முற்றிலும் தனித்தனியான ஒன்றுக்கொன்று தொடர்பற்ற நிலங்கள் அல்ல என்பதாகும்.''[27] இவ்வாறாக மருத நில அடுக்கு அனைத்து நிலங்களுக்கும் மூல பொருள் உற்பத்தியில் அடிக்கட்டுமானமாக திகழ்ந்திருக்க வாய்ப்பு உள்ளது.

### நெய்தலடுக்கு

கடலும், கடல் சார்ந்த நிலமுமாகிய நெய்தலில் வாழ்ந்த மக்கள், மீன்பிடித்தல் மீன்விற்றல், உப்பெடுத்தல், மீனை உப்புப்படுத்தல் கடலாடுதல் முதலிய தொழில்களைச் செய்தனர். "கடலில் வாழும் உயிரினங்களுக்கும் பெயர்களை இட்ட முதல் மக்கள் இந்நெய்தல் நில மக்களேயாவர். இவர்தம் ஆடல் பாடல் முதலிய தொழில்களால் உண்டான சொற்கள் பல ஓடம், தோணி, கப்பல், பாய் மரக்கப்பல், கலம் முதலிய சொற்களை உண்டாக்கியவர்களும் இவரே.''[28] என பலவகை மீன்களுக்கும் இவர்கள் வைத்த பெயர்களே இலக்கியத்திலும் பேச்சிலும் இன்றளவும் இருந்து வருவதைக் காணமுடிகிறது.

"நெய்தற்கு உணா, மீன்விலையும் உப்புவிலையும்; மா, உமண்பகடு போல்வன; முதலையுஞ் சுறாவும் மீனாதலி மாவென்றல் மரபன்று. மரம், புன்னையும், ஞாழலுங் கண்டலும்; புள், அன்னமும் அன்றிலும் முதலியன; பறை, மீன் கோட்பறை, செய்தி, மீன்படுத்தலும் உப்பு விளைத்தலும் அவை

*விற்றலும்; யாழ், நெய்தல் யாழ் பிறவு மென்றதனால், பூ கைதையும் நெய்தலும்; நீர்; மணற்கிணறும் உவர்க் குழியும்; ஊர், பட்டினமும் பாக்கமும்.''*[29]

**பாலையடுக்கு**

*பாலை நிலத்தில் வேட்டுவர் வாழ்ந்தனர் வழிப்பறி செய்தல், பாலை நிலத் தெய்வமாகிய கொற்றவையை வழிபடுதல் முதலியன இவர்தம் தொழில்கள் இவர்களால் உண்டான சொற்களும் உள்ளன. இந்த ஐவகை நிலங்களிலும் வாழ்ந்த மக்கள் நாளடைவில் வணிகத்துறையில் கலக்கலாயினர். அப்பொழுது ஒரு நிலத்தாரே சிறப்பாக வழங்கி வந்த சொற்கள் பிற நிலங்களிலும் பரவத் தொடங்கின.*

*மருத நில சொற்களே பிற நிலங்களில் பரவின இதற்கு காரணம் காவிரி பூம்பட்டினத்தில் நடைப்பெற்ற வணிகமே மிகப் பழமையானது ஆகும். இவற்றின் பிறப்பிடம் மருத நிலமாகும். மூல ஆதாரமாக வணிக மையங்கள் இருந்தன.*

*"இனி பாலை.க்கு உணா, ஆறலைத்தனவுஞ் சூறை கொண்டனவும்; மா, வலியழிந்த யானையும் புலியஞ் செந்நாயும்; மரம், வற்றின இருப்பையும் ஓமையும் உழிஞையும், ஞெமையும்; புள், கழுகும் பருந்தும் புறாவும்; பறை, சூறை கோட் பறையும் நிரைகோட் பறையும்; செய்தி, ஆறலைத்தலுஞ் சூறைகோடலும் யாழ், பாலையாழ். பிறவுமென்றதனால், பூ, மராவுங் குராவும் பாதிரியும்; நீர், அறுநீர்க்கூவலுந் சுனையும்; ஊர், பறந்தலை.''*[30] *இதனை,*

***"தலைநகர் மாமலர் தணிதுறைத் தலங்கக்***
***கடற்கறை மெலிக்கும் காவிரிப் பேரியாற்று''*** [31]

*மேற்கண்ட அடிகளில் உணரலாம். புகார், மதுரை ஆகிய பெரு நகரங்களில் இரு வகை அங்காடிகள் இருந்தன. இதனை,*

**"ஓவுக் கண் டன்ன இரு பெரு நியமத்துச்**
**சாறயர்ந்த தெடுக்க உருவப் பல்கொடி**
**வேறுபல் பெயர ஆரெயில் கொளக்கொள**
**நாடோ றெடுத்த நலம் பெறு பினைகொடி''** [32]

*என்ற வரிகளின் வாயிலாக புலப்படுகிறது.*

***காலைச் சந்தையான நாள் அங்காடியும்***
***மாலைச் சந்தையான அல்லங்காடி (or) அந்திகடையும்***

*இருந்தன. அச்சந்தைகளில் அத்துணை பேர் கூடி அத்துணை வியாபாரங்களை நடத்தி அவ்வளவு பொருட்களை விற்று வாங்கி வந்தமையால் அவற்றைத் திருமகள் இல்லம் என்கிறார். அங்காடி; கடைத்தெரு அது எந்தக் கடையையும் குறிக்கும்: 91 சிலம்பு xxiii:150 குறிப்பு பயிற்சி நிலையம் என குறிக்கப்பட்டது.*

***''கர்நாடக மாநிலத்தில் காவிரி ஆற்றங்கரையில்***
***அமைந்துள்ள டி.நரசிப்பூர் என்ற இடத்தில் அகழாய்வு***
***செய்த சேஷாசாத்திரி 186 குறியீடுகளை வெளிக்***
***கொணந்தார் (1984:156) இக்குறியீடுகளை***

*ஆய்வு செய்த எ.சுந்தரா இவை சிந்து சமவெளிப் பண்பாட்டிலிருந்து மத்திய செம்புக்காலப் பண்பாட்டில் ஊடுருவிப் பின்னர் பெருங்கற்காலப் பண்பாட்டிற்குள் ஊடுருவியிருக்க வேண்டும் என்று கருதுகிறார்.''*[33] *அவர் கூற்று மறுக்க வேண்டிஉள்ளது. குமரிக்கண்டம் முதல் கண்டமாகவும், பஃறுளி ஆறு மருத நிலத்திற்கு ஆதாரமாக இருப்பதால் இங்கிருந்து வடக்கு நோக்கி ஊடுருவி இருக்க வாய்ப்புள்ளதே அன்றி இங்கிருந்து இங்கு வர வாய்ப்பில்லை என கருதலாம்.*

**சடங்கு முறையடுக்கு**

*சமூக கட்டமைப்பில் சூழ்பத்தில் மனைவி என்பவள் மனையை ஆழ்பவள். குடும்பம் என்ற நிறுவனத்திற்கு அடித்தளம் அமைத்து தந்த நிலம் மருத நிலமாகும். முறையாக இல்லறம் நடத்திய சுவடு மருதத்திணைப் பாடல்களில் அறியமுடிகிறது. மனித சடங்குமுறையில் தலையாயது திருமணமாகும். இவை சுற்றத்தார் வாழ்த்த நடைபெற்ற செய்தியை,*

***"வதுவை நல் மணம் கழிந்த பின்றை***
***கல்லென் கம்மையர் ஞெரெனப் புகுதந்து***
***பேர் இற்கிழத்தி ஆக! எனத் தமர்தர''[34]***

*என்ற அடிகளின் மூலம் அறியலாம். பலரும் உணவு உண்ணச் செய்து, உழுந்து களி சமைத்துப் பலரோடு உண்டு வாழ்த்தவும் பறவைகள் நிமித்தம் இனிதாக விளங்கிடச் சந்திரன் உரோகிணியைச் சேரும் நல்ல நாள், அந்நாளில் திருமண வீட்டை அலங்கரித்தனர். இறைவனை வணங்கினர். முரசுகள் முழங்கச் சில மகளிர் கூடி மணப் பெண்ணை நீராட்டினர். அவளது அழகை அம் மகளிர் பார்த்து வியந்துப் பார்த்து நாணி மறைந்தனர். இதனை,*

***"வதுவை மண்ணிய மகளிர் விதுப்புற்றுப்***
***பூக்கணும் இமையோர் நோக்குபு மறைய''[35]***

*என்ற அடிகளில் அறியமுடிகிறது. வரிசையான கால்களையுடைய குளிர்ந்த பெரிய திருமணப் பந்தலில் புதிதாகக் கொண்டு வந்த மணலைப் பரப்பி வீட்டில் விளக்கினை ஏற்றி வைத்து மாலைகளைத் தொங்க விட்டனர். இதனை,*

"***மனை விளக்குறுத்து, மாலை தொடரி***
***அனை இருள் அகன்ற கவின் பெறு காலை***
***தோள் கால் நீங்கிய கொடு வெண் திங்கள்''[36]***

*என்ற வரிகள் புலப்படுத்துகிறது.*

### வெறியாட்டுச் சடங்கு

*சமூக அடுக்குகளில் வெறியாட்டுச் சடங்கு முக்கிய நிகழ்வாக கருதப்படுகிறது. இது முருகனுக்கு கெடா விடுதல் என்னும் பலியைக் குறிக்கிறது. தலைவியின் தாய் ஒருத்தி, நீர்த்துறையிடத்து நிலைபெற்ற முருகப் பெருமானுக்கு வழிபாட்டுப் பொருட்களாகக் கள்ளும், மலர், மாலையும் நேரே நிற்கும் கொம்பையுடைய வெள்ளாட்டுக் கிடாய் ஆகியவற்றை எல்லாம் செலுத்தினாள் அவ்வாறு செய்தும் தலைவியின் நோய் தணிதற்கு மருந்தைக் காணாதவளாய் வருந்தி அழும்படியாய் தலைவியின் நீலமணி போன்ற மேனி பசலை பாய்ந்தது என்பதை,*

***"நிலைக் கோட்டு வெள்ளை நால் செவிக்கிடாஅய்***
***நிலைத்துறைக் கடவுட்கு ஊப்பட ஆட்சித்***
***தணி மருங்கு அறியாள் யாய்அழ''[37]***

*என்ற அடிகளின் மூலம் காணமுடிகிறது. புறப்பாடல்களில் போர் நிமித்தமாக வெறியாட்டு நடைபெற்றது அது கெற்றவைக்கு நிகழ்த்தப் பட்டுள்ளதை புறத்திணையியல் வழி அறியமுடிகிறது.*

### தொழிலடுக்குகள்

*மருத நிலத்தில் சாகுபடி சிறப்பாக நடைபெற்றுள்ளது. முறையாக வேளாண் தொழில் விளங்கியுள்ளது. நெல் முக்கிய பயிராகவும், உழவுத் தொழில் உயிர் தொழிலாகவும் நடைபெற்றுள்ளது. ஏர் உழவு, எருமை உழவு, நாற்று நடவு, களையெடுத்தல் என்னும் படிநிலை அடுக்காக விவசாயம் நடைபெற்றன. இதனை,*

***"கழனி உழவரொடு மாறு எதிர்ந்து மயங்கி***
***இருஞ்சேற்று அள்ளல் எறிசெருக்கண்டு''[38]***

*என்ற அடிகளில் விளக்குகின்றன. மருத நில உழவரும் நெய்தல் நில பரதவரும் சண்டையில் ஈடுபட்டுள்ளதைக் காணமுடிகிறது. இங்குத் தொழில் வளர்ச்சிக்கு ஊற்றாக அமைவதை அறியலாம்.*

தொழிலில் போட்டி நிலவியுள்ளதையும், அவற்றினைத் தீர்த்து வைப்பதற்கு மருத நிலத்தில் கிடைக்கும் ‘கள்’ ஊற்றிக் கொடுத்துச் சமாதாணம் செய்துள்ளமையை மேற்கண்ட அடிகள் புலப்படுத்துகின்றன. இதன்மூலம் தொழிலில் சமரசபோக்கு நிலவியது புலனாகிறது.

### வண்ணாத்தி

செல்வர்கள் மிகுதியாக உள்ளமையால் மருத நிலம் செழிப்புற்று இருந்தது, இந்நிலத்தில் கையுழைப்பும், வறட்சியும் இல்லாத வண்ணாத்தி இரவில் தோய்த்து உணவாக்கிய கஞ்சியிலிட்டு உலர்த்திய மெல்லிய அழகிய ஆடையையும் பொன்னரி மாலையையும் மார்பில் அணிந்து அவை அசைய நடந்து வந்தாள். அதனை,

> **“வறன் இல் புலைத்தி எல்லித் தோய்த்த**
> **புகாப் புகர் கொண்ட புன் பூங்கலிக்க மொடு’’[39]**

என்ற அடிகளின் மூலம் அறியலாம். புலத்தியரின் நிலையைக் காணமுடிகிறது. தொழிலடுக்களில் மருத நிலத்தில் மட்டுமல்லாமல் இவர்கள் அனைத்து நிலத்திற்கும் ஏற்றவராகக் கருதலாம்.

### சாணைக்கல் தொழில்

தொழிலடுக்களில் மருத நிலத்தில் சாணைக்கல் தொழில் பற்றி குறிப்புள்ளது. இதனை,

> “**சிறு காரோடன் பயினொரு சேர்த்திய**
> **கற்போல் நாவினோனாகி மற்றுஅது’’[40]**
>
> ***அகம் 356 (9-10)***

இவ்வடிகளில் காணலாம். இவ்வாறாக தொழில்கள் மேல்கட்டுமானாக கட்டமைக்கப்பட்டுள்ளது.

## பரத்தமையடுக்கு

சமுதாயம் ஒரு தார மணமுறைக் குடும்பங்களை உடையதாக மாறுவதற்கு முன்னர் புணர்ச்சிச் சுதந்திரம் நிலவியுள்ளது. பின்னர் தலைவனும், தலைவியும் கொள்ளும் காதலுறவும், மனையுறவும் இதன் அடிப்படையிலான குடும்ப உறவும் தோற்றம் கொண்டது. இந்தக் குடும்பம் வலுவான சூழ்நிலையோடு இயங்கத் தொடங்கியதே பரத்தையரின் தோற்றுவாய்க்குத் காரணமாக அமைந்தது.

ஒருதார மணமுறையின் வெளிப்பாடே பரத்தை தோற்றத்திற்கும், பெருக்கத்திற்கும் காரணம் என்கிறார். ஏங்கல்ஸ் என்னும் சமூகவியலார் சமுதாயத் தேவையே பண்டையப் பரத்தைமைக்குக் காரணமாகும். பரத்தையிடம் வந்தவரின் பொருட்களையெல்லாம் கவர்ந்துக் கொண்டார்கள் என்றோ அதனால் ஆடவர் வறுமை அடைந்தனர் என்பதற்கான மருத நிலப்பாடல்களில் காணப்படாமையினின்று பரத்தையரின் பண்பு விளங்க முடிகிறது.

சங்க இலக்கியத்தில் பரத்தையர்களைக் குறிக்க பல்வேறு சொற்கள் காணப்படுகின்றன. இவை மிகுதியாக மருத நிலப் பாடல்களில் பெருமளவில் காணமுடிகிறது. பரத்தமை உறவு தீது என்றுச் சங்கப்பாடல்கள் கூறவில்லையென்றாலும் பழித்தல் நிலையிலேயே சித்தரிக்கப்படுகின்றன.

பரத்தமையினைப் பற்றிய கருத்தாக்க சொற்களாவன,

- ஆயிழை மகளிர்
- நேரிழை மகளிர்
- குறுமகள்
- மாணிழை மகளிர்
- குறுந்தொடி

- ❖ *கணங்குழையவர்*
- ❖ *எழிலுகண் நல்லார்*
- ❖ *கொடியன்னர்*
- ❖ *எழில் நல்லார்*
- ❖ *துணை மலர்க் கோதையார்*
- ❖ *பரத்தையார்*

*போன்ற பல்வேறு சொற்களில் 'பரத்தை' குறிக்கப்பட்டுள்ளது புலனாகிறது. இவ்வாறான மிகுதியானச் சொற்கையாடல் பிற்கால இலக்கியங்களில் காணயியலா என்பது குறிப்பிடத்தக்கது. பரத்தை என்ப அயன்மை என தமிழ் லெக்சிகன் குறிக்கிறது. தன்வயின் உரிமையும் அவள் வயின் (இளம்) அதாவது கற்புக் காலத்தில் தலைவனும் தலைவியும் நடத்தும் இவ்வாழ்க்கை அயலளாக வரும் பரத்தைமைக்கு அயன்மை என்பதே பொருந்துவதாக உள்ளது. பரத்தை என்பவள்,*

> ***"ஆடலும் பாடலும் வல்லாராகி அழகும் இளமையும்***
> ***காட்டி இன்பமும் பொருளும் வெஃகி ஒருவர்***
> ***மாட்டும் தங்காதார்''[41]***

*எனும் மேற்கோளின் படி அவர்களின் பண்புகள் வெளிப்படும், சமூக பண்புகளின் படி பரத்தையர் பழிப்புக்குள்ளக்கப்பட்டுள்ளனர் தலைவியே பரத்தையைப் பழித்துள்ளாள் என்பது மருதத்திணைப் பாடல்கள் மூலம் உணரமுடிகிறது. இருப்பினும் சமூகத்தில் பரத்தையருக்கு அங்கீகாரம் அளிக்கும் திருமணமும் நிகழ்ந்துள்ளது. தலைவன் பரத்தையரை மணம் புரிந்து வாழ்ந்து வந்ததை,*

> "**ஒண்தொடி ஆயத்துள்ளும் நீநயந்து**
> **கொண்டணை என்ப ஓர் குறு மகள் அதுவே''*[42]***

*என்ற அடிகளில் புலனாகிறது. தலைவனானவன் பரத்தையர் கூட்டத்துள் ஓர் இளைய மகளை விரும்பி மணந்து கொண்டாய் என்று ஊரவர் கூறியதைக் காட்டி தலைவி ஊடல் கொண்டதை மேற்கண்ட வரிகள் புலப்படுத்துகிறது.*

*தலைவன் ஒரு பரத்தைய மணந்து பின்னர் கைவிட்டு மீண்டும் புதிய பரத்தையை நாடி மணந்து கொண்டான் என்ற செய்தியைக் கேள்வியுற்றிருந்த தலைவி அவன் ஒருநாள் இல்லத்திற்கு வந்த பொழுது தாமறிந்தச் செய்தியைச் சான்றோடு அறிவித்தாள், அதுகேட்டு தலைவன் இந்நிகழ்ச்சியை இனி மறைத்தலரிது என்று உணர்ந்து அப்பிழையை ஒப்புக் கொண்டு இற்றைநாள் தொடங்கி இனி யான் அத்தகைய பிழை செய்யேன் என்றும், அப்பிழையைப் பொறுத்திடுக! நீ பொய்வல்லை! நீ நாள் புதிய புதியப் பரத்தையரைத் தேடி மணப்பதே தொழிலாகக் கொண்டுள்ளனை அத்தொழில் உனக்குரியதே நீ அங்கேயே செல் என்கிறாள். இதனை,*

***“நறுவடி மாஅத்து விளைந்துகுதீம்பழ***
***நெடுநீர்ப் பொய்கைத் துடுமென விழூஉம்’’*** [43]

*என்ற அடிகளில் காணமுடிகிறது. இவ்வாறாக பரத்தயைத் திருமணம் செய்து கொண்டு வாழ்ந்து வந்துள்ளச் செய்தியை மருத நிலப் பாடல்கள் சுட்டுவதைக்கொண்டு ‘பரத்தையர்கள்’ சமூக மேற்கட்டுமானத்திற்கு வருவதற்கு காரணம் அவர்கள் ஏற்கனவே அடிக்கட்டுமானத்தில் இருந்துள்ளனர். பின்னர் மையம், விளிம்பு என்னும் பின்னை நவீனத்துவத்தின் வாயிலாக பார்க்கும் போது இது புலப்படுகிறது. பரத்தையர்கள் மையத்தை விட்டு விலகி விளிம்பு நிலைக்கு தள்ளப்பட்டிருக்க வாய்ப்புள்ளது. சமூக அடுக்கு நிலையில் இவர்கள் தற்போது மேற் கட்டுமானத்தில் உள்ளனர்.*

*‘‘பத்தினி என்கிற படைப்பின் பின் விளைவு தான் பரத்தமை. பரத்தமை என்ற நிறுவனம் திருமணத்துக்கு அப்பால் செல்வந்த ஆண்களின் காமக்களிப்பிற்கென அவர்களால் உருவாக்கப்பட்டது என ராஜ்கௌதமன் குறிப்பிடுகிறார்.* [44] *இக்கருத்து பொருந்துவதாக இல்லை. பத்தினி என்ற*

பாத்திரத்தின் பின்விளைவு பரத்தை என்பது பொருந்துவதாக உள்ளது. ஆனால் திருமணத்திற்கு அப்பால் செல்வந்த ஆண்களின் காமக்களிப்பிற்கென அவர்களால் உருவாக்கப்படவில்லை. ஏனெனில் மருத திணைப்பாடல்களில் பரத்தையை தலைவன் திருமணம் செய்துள்ளமையை மேற்கண்ட செய்யுள்களில் எடுத்துக்காட்டப் பட்டுள்ளன. அவற்றை கொண்டு காணப்போது ஏற்க முடியாது. இக்கருத்து சங்க மருத அகப்பாடல்களைக் காணாமல் கூறியதாக இருக்கலாம். சங்க இலக்கிய மருத அகப் பாடல்களில் தலைவன் தலைவி, தோழி, என்கிற அக நாடாகப் பாத்திரங்களைப் போலப் பரத்தை என்கிற பாத்திரம் இடம்பெற்றுள்ளது என்பது உண்மை தான் ஆனால் இது சமூகத்தின் விளைவு.

மருதத் திணைப் பாடல்களில் குழந்தைகள் பெற்றெடுத்துப் பாலூட்டும் தலைவிக்கும், தலைவனுக்கும் இடையில் சண்டை வரக் காரணமாகப் பரத்தை குறிக்கப்பட்டுள்ளான். பரத்தையர் சேரி என்ற தனியான தெருவில் வாழ்ந்ததாகத் தெரிகிறது. செல்வர்கள் வாழுகின்ற நகரம் ஊர்களில் தவறாமல் இவர்களுடைய குடியிருப்புகள் இருந்துள்ளன. ஆரியர் நுழைவு காரணமாகவும் இவர்கள் கோயில்களில் தேவரடியார்களாக வாழ்ந்து வந்தனர் என்பது சோழர் காலத்தில் நிலவியுள்ள எச்சமாகும். இவர்கள் சமூக உறவுகளில் தொடர்பு கொண்டு அனைத்துச் சமூகத்தினரிடமும் உள்ளனர். செல்வ நிலை நோக்கியே வாழ்வை அர்பணித்தவர் என்று கூற இயலா உடல் தேவை கருதியும் இருக்கலாம்.

சமூக உறவு நிலையில் ஒருகுறிப்பிட்ட நிலையில் காணும் போது அவர்கள் புறக்கணிக்கப்படுவது ஏன்? ஒன்று பொருளாதாரத்தில் ஒதுக்கலாம், மற்றொன்று ஒழுக்க நிலையில் அவர்களை ஒதுக்கலாம். பொருளாதாரத்தில் ஒதுக்குவதால் அதன் பயன் ஒன்றும் விளையாது. ஏனெனில் ஒரு குறிப்பிட்ட இனத்தார் பொருளாதாரத்தில் ஒதுக்கினால் அவர்கள் வேறொரு சமூகத்தினரால் அங்கிகரிக்க வாய்ப்புள்ளது.

ஒழுக்க நிலையில் ஒதுக்கும் போது அவர்கள் சமூக அடுக்குகளில் இருந்து புறக்கணித்தாலும் தலைவன் (நிலையில்) அங்கீகாரம் அளிக்கப் பட்டுள்ளதைக் காணமுடிகிறது. தலைவி மட்டுமே பரத்தையரை பழித்துள்ளாள் என்பது மருதத் திணைப்பாடல்கள் புலப்படுத்துகின்றனர்.

சமூக உறவுகளின் திராவிட பண்பாட்டின் நிலையைக் கீழ் கொண்டு வரக்காரணம் ஆரியர் நுழைவு ஆகும். பிற்காலத்திலும் இடைக்காலத்திலும் அரக்கர்களாக திராவிடர்கள் சித்தரிக்கப்பட்டுள்ளனர். (கம்பராமாயாணம்) இவர்கள் பரத்தையரின் குழந்தைகளாக சமூக அடுக்குகளில் சொறுகப்பட்டுள்ளதைக் காணமுடிகிறது. இதற்கு காரணம் ஆரியர்களின் உடமைகளைக் கைப்பற்றியதன் விளைவே அதனால் அரக்கர்களாக சித்தரிக்கப்பட்டுள்ளதைக் காணமுடிகிறது.

### மாற்றுத்திறனாளியின் அடுக்கு

சமூக உறவில் மாற்றுத்திறனாளியின் இடம் இன்றி கட்டமைக்க முடியாது. சங்க கால சமூக அடுக்குநிலையில் தனியிடமாக மருதத்திணைப் பாடல்களில் மட்டுமே இவர்கள் குறிக்கப்பட்டுள்ளதைக் காணமுடிகிறது. இதனை,

**''இழந்தோ கூனின் பிறப்பு – அழிந்தாங்கே''**[45]

**''கூனியும் குழையும் குழைவுகாண்''** [46]

என்னும் அடிகளின் மூலம் அறியமுடிகிறது. கூனியும் குறலினும் காதல் வாழ்க்கையில் இன்பமுடன் வாழ்ந்துள்ளதைக் காணமுடிகிறது. ஓலை நறுத்திணை எழுதிச் சுருளிட்டு அரக்கு இலச்சினை இட்டு விட்டாற்போல் நாட் இருவரும் முத்தங் கொண்டு கூடி மகிழ்வோம் என்கிறான் குறளன். இதனை,

**''துகள் தபு காட்சி அவையத்தார் ஓலை**
**முகடு காப்பு யாத்து விட்டாங்கு''**[47]

என்ற அடிகள் புலப்படுத்துகின்றன.

**அலியும் – பேடியும்**

*சமூக அடுக்குகளில் மருதத்திணைப் பாடல்களில் இவர்களைப் பற்றிய குறிப்புகள் காணப்படுகின்றன. இதனை,*

> ***''நல்கூர் பெண்டின், சில் வளைக்குறுமகள்***
> ***ஊசல் உறுதொழில் பூசல் கூட்டா***
> ***நயன் இல் மக்களோடு கெழீஇ***
> ***பயன் இன்று அம்ம, இவ் வேந்துடை அவையே!''[48]***

*என்ற அடிகளில் பெண் தன்மையில் குறைவானவள் என்பதை பேடி என்றும், நன்மையில்லாத மக்களோடு உறவு கொண்டு பயன் இல்லை என்பதைக் குறிப்பிடுகிறது. மேற்கண்ட செய்யுள் இவ்வாறு சமூக அடுக்குகளில் விளிம்பு நிலையில் உளவாகக் கட்டமைக்கப்பட்டுள்ளதை உணரமுடிகிறது.*

## தொகுப்புரை

- சமூக அடுக்குகள் என்ற இவ்வியலில், தொல்குடியடுக்குகள் என்பவை பாணர்களின் வழியே தொடங்கியுள்ளமை எடுத்துரைக்கப் பட்டுள்ளன.

- தொல்காப்பியர் வழியே முதற், கரு, உரி ஆகியப் பொருளமைவுகளின் அடுக்குகள் சங்க சமூகத்தில் உறவுகளின் பயன்பாடுகளாக உள்ளன. என்பதை ஆராயப்பட்டுள்ளன.

- சொற்களின் விரிவாக்கம் அவற்றின் பயன் விளைவுகளின் மூலமும், பொருள்களின் பெயர்ச் சொற்கள், வினைச் சொற்கள் இவற்றின் உற்பத்திக்கு அடிப்படையாக உள்ளமைக் காண முடிகிறது.

- நில அடுக்குகள் என்பவை எவ்வாறு சமூக அடுக்குகளின் தொடர்ச்சியாக உள்ளன என்பதைப் பற்றிய கையாடல்கள் விவரிக்கப்பட்டுள்ளன.

- மருத நில அடுக்குகளுக்கு தோற்றுவாயாக அமைவது ஆறுகள்தான் என்பது நிறுவப்பட்டுள்ளது.

- திராவிட நாகரிகம் தெற்கிலிருந்துதான் வடக்கு நோக்கி சென்றிருக்க வேண்டும் என்பது நிறுவப்பட்டுள்ளது.

- உரிப்பொருள் அடுக்குகளின் தொடர்ச்சி ஒவ்வொரு திணைக்கும் பொருந்துவதாக நிறுவப்பட்டுள்ளது.

- குறிஞ்சியடுக்கு, முல்லையடுக்கு, மருத அடுக்கு, பாலை அடுக்கு ஆகிய யாவும் ஒன்றின் பின் ஒன்றாக அடுக்கிய முறைகளும் அவற்றின் உற்பத்தி சொற்களின் இடம் பற்றி ஆராயப்பட்டுள்ளன.

- காவிரியாறு மருத நிலத்தின் நாகரிகத் தொட்டிலாக இருப்பதைக் காண முடிகிறது.

- ❖ சடங்குகளின் அடுக்கு, வெறியாட்டு, பிறப்புச் சடங்குகள் எவ்வாறு மருத அடுக்கில் உள்ளது என்பது விளக்கப்பட்டுள்ளது.
- ❖ காவிரிப் படுகைகளில் கண்டெடுக்கப்பட்டுள்ள முதுமக்கள் தாழிகளைப் பற்றி விளக்கப்பட்டுள்ளன.
- ❖ மருத நிலத்தின் உயிர் நாடியாக உள்ள தொழில் அடுக்குகளின் முறைமை காட்டடப்பட்டுள்ளன.
- ❖ பரத்தமையருக்கு அவர்களின் பெயர்ச் சொற்களின் உருவாக்கம், பல்வேறு நிலைகளில் அவர்களின் கட்டடுக்கு போன்றவை ஆராயப்பட்டுள்ளன.
- ❖ மாற்றுத் திறனாளிகளின் அடுக்கு, அலி, பேடி ஆகியோரின் நிலைப்பாடுகள் விளக்கப்பட்டுள்ளன.

## மேற்கோள்கள்


1. சி. இலக்குவனார், பழந்தமிழ். பக்.26
2. தமிழ் வீரநிலைக் கவிதை. கைலாசபதி. க, பக் 304
3. மு.வரதராசன், மொழி வரலாறு. பக். 222
4. சங்க கவிதையாக்கம் மரபும் மாற்றமும்: பக். 9
5. தொல். களா. 1
6. தொல். எழு. 102
7. தொல். பொருள். அகத்.3
8. உலகத் தமிழ்ச்செம்மொழி மாநாடு சிறப்புமலர். பக்.26
9. தமிழிலக்கிய வரலாறு, ம.ராசமாணிக்கனார். பக். 82
10. சிலம்பு. காதை 11, வரி (19-20) காதை: 8, வரி 1, அடியார்க்குநல்லார்,ப.
11. பழந்தமிழ், சி. இலக்குவனார். பக். 30
12. படம், 1.
13. ஐங்குறுநூறு. கிழத்திப்பத்து. 104
14. பதிற்றுப்பத்து. 23, (18 – 25)
15. பதிற்றுப்பத்து. 30, (114 – 121)
16. தொல். பொருள். 15
17. அகம், 140
18. நற்றிணை, 45
19. சங்க கால மரபு, தமிலண்ணல், பக். 247
20. தொல்பொருள் 20
21. தொல்காப்பியம் உரைவளம் பொருள். அகத். ப.ஆ.
    (அ. சிவலிங்கனார்) பக்.160
22. மேலது., 160
23. மேலது., 160
24. ஐங்குறுநூறு. கிழத்திப்பத்து. 104
25. அகம் : 186 (15-16)

26. அகம் : 296 (5-6)

27. அகம் : 376 (10-11)

28. சங்க மரபு : தமிழண்ணல்; பக் 206-207

29. தொல்காப்பியம் உரைவளம் பொருள். அகத். ப.ஆ. (அ. சிவலிங்கனார்) பக்.159

30. மேலது., 159

31. அகம் 126 (4-5)

32. மதுரைக் காஞ்சி 365-369

33. ராஜன், க., தொல்லியல் நோக்கில் சங்க காலம் : பக் 45

34. அகம் : 86 (18-19)

35. அகம் : 136(7-8)

36. மேலது : 86 (4-6)

37. மேலது : 156 (14-16)

38. அகம் : 366 (9-10)

39. நற்றிணை, 90

40. அகம் : 356 (9-10)

41. உரையாசிரியர் மு.வை. அரவிந்தன், பக்.180

42. அகம் : 96 (9-10)

43. ஐங்குறுநூறு, கிழத்திக்கூற்று பத்து, 101

44. அறம்-அதிகாரம், ராஜ்கௌதமன், பக்.182

45. மருதக்கலி 29 அடி

46. மேலது., 30

47. மேலது., 43-44

48. நற்றிணை, 90

# இயல்–5

# சமூக எச்சம்

*காலத்தின் மீது பழியேற்றிப் பழையன என ஒதுக்காமல் எக்காலத்திற்கும் ஏற்றாற்போல் கூட்டிப் பொருள் கொள்ளப்படுவதற்குத் துணையாய் நிற்பது எச்சமாகும். அதாவது ஒரு சொல்லையோ, குறிப்பையோ கூட்டிப் பொருள் கொண்டு இடம், காலத் தேவைகளுக்கு ஏற்ப முடித்தல் வேண்டி நிற்பது எச்சமாகும். மருதத்திணைப் பாடல்களில் சமூகப் பயன்பாட்டு நிலையில் ஒவ்வொரு சமூக உறவுகளும் அதற்கான காரண காரியத் தொடர்புடையன என நிறுவுவதற்கு ஏற்ப அமைந்துள்ளது. காலப் பழமையைக் கருத்தில் கொண்டு அவை இன்று நிலைத்துள்ளவையாக உள்ளன. அவற்றைப்பற்றிய தரவுகளை ஆராய்வதாக கருதப்படுகிறது. எஞ்சியவை எனவும் மிஞ்சியவை எனவும் இவை அழைக்கப்படுகின்றன. எஞ்சிய எச்சங்களை ஆராய்வதாக இவ்வியல் அமைகின்றது.*

## இயற்கை வழிபாடு

*மருதத்திற்குத் தெய்வம் இந்திரன் தீம்புனல் உலகம் (அகத் 5)*[1] *எனவும் வைகரை விடியல் (அகத்.9)*[2] *எனவும் தொல்காப்பியம் சுட்டுகின்றது. இந்திரன் என நேரிடையாகக் குறிக்காமல் 'வேந்தன்' என்னும் சொல்லால் குறிக்கப்பட்டுள்ளது. மக்களுள் மன்னன் இறையாகக் கருதும் எண்ண உற்று சங்க பனுவல்கள் புலப்படுத்துகின்றன. உயிரிகளின் தோற்றுவாயாக உள்ள நெய்தல் திணையில் 'வருணன்' மணல் உலகம் (அகத் 5)*[3] *என வழங்குவது இயற்கை வழிபாட்டின் அடித்தளமாகும். இதன் வழியாக திருக்குறளிலும் ஆதி பகவன் என சுட்டுவதில் 'பகலவன்' என சூரியன் என்பது மருவிய சொல்லாகக் கொண்டு முழு முதற் உலகில் சூரிய வழிபாட்டினை காணமுடிகிறது.*

*சிலம்பில் திங்களைப் போற்றதும், மாமழைப் போற்றதும் என இயற்கை வழிபாட்டின் எச்சக் கூற்றினை அறியலாம். இவ்வியற்கை வழிபாடு சங்க காலத்தில் அறுவடை விழா எனவும், இன்றும் பொங்கல் விழாவாக அதன் தொடர்ச்சி எச்சக்கூறாக நின்று நிலவிவருகின்றது.*

### தாய்வழிச் சமூகம்

*தாய்வழிச் சமூகங்கள் குறித்து எட்வர்டு பர்னாட் டைலரின் பண்பாட்டுப் படிமலர்ச்சிக் கோட்பாடு வழி அறியலாம். 1871-ல் வெளியிடப்பட்ட தொன்மைப் பண்பாடு என்னும் நூலின் மூலம் பண்பாட்டுப் படிமலர்ச்சியை விளக்குகிறார்.*

*இவற்றில் "ஒரு பண்பாட்டின் இப்போதையை நிலையை அதன் முந்தைய கட்டத்தோடு ஒப்பிடுவதன் வாயிலாகப் படிமலர்ச்சி நிகழ்வுகளின் தன்மையைப் புரிந்து கொள்ளமுடியும் இவ்வாறாக சங்க காலத்திலும் அதற்கு முன்பும் வேட்டையாடி உணவு சேகரிக்கும் நிலை தொடங்கி இறுதி நிலையான நாகரிகம் வரையில் பல படி நிலைகளில் மாற்றங்கள் காணப்படுகின்றன. நீண்ட படிநிலை வரிசையானது கடந்த காலப் படிநிலைகளை அறிவதற்கு உதவும் நிகழ்கால வடிவம் என டைலர் கூறுகிறார்.''[4] தாய்வழிச் சமூகமே முதலில் தோன்றிய சமூகம் என நிறுவ டைலர் இரண்டுவகை அணுகுமுறையை எடுத்தாளுகிறார். பேறுகாலத் தனிமை, சேய்வழி அழைத்தல் என்பனவாகும்.*

### பேறுகாலத்தனிமை

*பேறுகாலத் தனிமை என்பது மனைவி குழந்தை பெறும் இறுதி நாட்களில் அவள் அவதிப்படும் நடைமுறைகளை அவளின் கணவனும் அவளுடன் இருந்து அவதிப்படுவதாகும் அனைத்து வேலைகளையும் விட்டொழித்து மனைவி அருகிலேயே தனிமைப்பட்டுக் கொண்டும் குறைந்த உணவு உட்கொண்டும், அதிலும் பிரசவத்திற்கேற்ற சுவை மாறுபட்ட உணவை உட்கொண்டும், மனைவிக்கு ஏற்படும் உடல்வலி*

தனக்கும் ஏற்படுவதுப் போல் பாவனைச் செய்துகொண்டும் முடங்கிக் கொண்டும் இருப்பதாகும். இந்தத் தற்காலிகப் பாவனை வேதனை மூலம் பிறக்கும் குழந்தைகளுக்குத் தானே தந்தை என்றும், தந்தையின் பங்கும் பேறுகாலத்தில் முதன்மையானது என்றும் உணர்த்தும் இம்முறை உண்மையில் தாய்வழிச் சமூகத்திற்குரியதன்று ஏனெனில், அங்குப் பெண்களே முன்னுரிமை பெறுவதால் ஆண்கள் அடையாளம் பெறுவதில்லை மாறாக தாய்வழிச் சமூகம் அழிக்கப்பட்டு "தந்தைவழிச் சமூகம் கால்கொண்ட சூழலில் தந்தையின் அடையாளத்தையும் முக்கியத்துவத்தையும் உணர்த்தும் பொருட்டுப் பேறுகாலத் தனிமை ஏற்பட்டது என்கிறார்.''[5] குறத்திக்குப் பிரசவ வலி வரும்போது அவள் கணவன் மருந்து திண்பான் என்ற தமிழ்ப் பழமொழி உள்ளது.

மேலும், "மலபாரைச் சேர்ந்த கூடை முடையும் குறவர் சாதியில் கணவன் பிரசவத்தின் போது தனிமையில் இருப்பதோடு மட்டுமில்லாமல் குழந்தை பிறந்த பின் 14 நாட்கள் தீட்டுக் கடைப்பிடிக்கிறார்கள். குழந்தையின் தந்தையும் 14 நாட்கள் தீட்டுக்கு உரியவனாகக் கருதப்படுகின்றான். மற்ற சாதியினரைப் போல் நாவிதரை அழைத்துத் தீட்டுக் கழிக்கும் சடங்கு செய்யாமல் கோயிலுக்குச் சென்று பிராமணர்களிடம் தீர்த்தம் பெற்று வந்து தீட்டுக்கழிப்பர். பிள்ளைப் பெற்றவளுடைய கணவன் தீட்டு நீக்குவதற்கான சடங்கைப் புனித நீரினைக்கொண்டு செய்யும் வழக்கம் பிறசாதிகளிடம் உள்ளதைத் தர்ஸ்டன் குறிப்பிடுகிறார்.''[6]

தமிழகத்தில் இன்னும் சில சமூகங்களில் மனைவி கருவுற்ற உடன் கணவன் முகத்தை மழித்துக் கொள்ளாமல் குழந்தை பிறந்தவுடன் மட்டுமே மழித்துக் கொள்வர். இவனது முகத்தில் மயிர் வளருகிறது என்றால் இவனது குழந்தை மனைவியின் வயிற்றில் வளருகிறது என்று பொருளாகும் இது எச்சமாக தொடர்ந்து வருவதைக் காணமுடிகிறது.

## சேய்வழி அழைத்தல்

குழந்தைகள் பெயரை முன்வைத்து அக்குழந்தையின் பெற்றோரைக் (குறிப்பாகத் தந்தையை) குறிப்பிடுதல் அல்லது அழைக்கும் முறையே சேய்வழி அழைத்தல் எனப்படும். உறவு முறையின் ஒரு பகுதியாக இம்முறை சமூகத்தில் நிலைபெற்று வந்துள்ளது. சேய்வழி அழைத்தல் முறையானது தாய்த் தலைமைக் குடும்ப முறையின் எஞ்சி நிலைத்தவையாக இன்றும் பல சமூகங்களில் காணப்படுகிறது. தமிழ்ச் சமூகத்தில் சேய்வழி அழைத்தல் சங்க மருதத்திணைப் பாடல்களில் காணப்படுகின்றன. இதனை,

**"இழையணி பணைத்தோள் ஐயை தந்தை**
**மழைவளம் தரூஉம் மா வண் தித்தன்''[7]**

என்ற அடிகளின் மூலம் ஐயை என்பவளின் தந்தை சிறந்த வள்ளன்மை உடைய தித்தன் என குறிக்கப்பட்டுள்ளது. மகள் பெயரைக் கூறிப் பின்னர் தந்தையைக் கூறும் மரபு இடம் பெற்றுள்ளது. அதனைத் தொடந்து மற்றொரு மருதப்பாடலில்,

**"செம்பொற் சிலம்பின், செறிந்த குறங்கின்**
**அம் கலுழ் மாமை, அஃதை தந்தை''[8]**

என்ற அடிகளில் அஃதை என்பவளுக்குத் தந்தையான பெருமையுடைய யானையையும் வெல்லும் பேரையும் உடைய சோழன் வெண்ணெல் விளையும் இடங்களையுடைய பரூவூர்ப் பாண்டியரான இரு பெருவேந்தர்களும் போரிட்டுக் களத்தே இறந்துபட, விளங்கும் வாளால் செய்யும் நல்லபோரை வென்றபோது ஏற்பட்ட ஆரவாரம் போன்றது என்கிறது. இவ்வடிகள் இவற்றிலும் மகள் பெயரைக் கூறி பின்னர் தந்தையைக் கூறும் மரபு காணமுடிகின்றது. பெண்கள் தலைப்பிரசவத்தைப் பிறந்தகத்தில் (தாய்வீட்டில்) வைத்துக் கொள்ள வேண்டும் என்ற மரபு தாய்வழிச் சமூகத்தின் எச்சக்கூறாகும்.

*உலகில் தாய்வழி மரபு தந்தை வழி மரபு என இரண்டு இருந்தன. இவற்றுள் தாய் வழி மரபே மிகப் பழையது. தந்தை வழி மரபு பிற்காலத்தது. காரணம் "ஆதி மனிதனால் முதலில் அறிந்து கொள்ளப்பட்ட உறவாகத் தாய் உறவு மட்டுமே இருந்திருக்க முடியும். குழந்தை, தாயை ஒட்டியே சில ஆண்டுகள் பால் குடித்தலுக்காகவும், நடத்தலுக்காகவும், கொடும் உயிரினங்களிடம் இருந்து மீட்டு வாழ்வதற்காகவும் இருந்திருத்தல் வேண்டும். பழைய குடிகளில் சேய் ஏறத்தாழ ஏழு ஆண்டுகள் தாயின் அரவணைப்பில் இருந்திருக்க வேண்டும் என்று கருதுவது மெய்யானதாகும் என க.ப. அறவாணன் கூறுகின்றார்.''*[9] *இக்கருத்துகள் யாவும் சங்ககால சமூகத்தில் எச்சமாக இருந்துள்ளமையைக் காணமுடிகின்றது. "திணை நிலப் பெயர்கள் காட்டும் செய்திகள் தாய்த் தலைமைச் சமூகம் தோற்றம் பெற்றன என தி. அன்புச்செல்வன் நிறுவியுள்ளார்.''*[10] *இவ்விரு கருத்துக்களையும் நோக்கும்போது தாய்வழிச் சமூகம் தான் முதலில் தோன்றியது என்பது உறுதியாகிறது.*

**தாலி**

*திருமணமானவள் என்பதைப் பிறர் அறிய உதவும் அடையாளமாக திருமண நாளன்று மணமகள் கழுத்தில் மணமகனால் தாலி அணிவிக்கப் படுகின்றது. நீளமாகத் தொங்கும் பிற அணிகளைத் தற்காலத்தில் தாழ்வடம், வடம், சரம், மாலை, சங்கிலி, இழை போன்ற வேறு பெயர்களால் குறிக்கப்படுகின்றது. ஏறத்தாழ 10-ஆம் நூற்றாண்டுக்கு முன்பு வரை தாலி என்னும் சொல் தொங்கும் அணிகளைக் குறிக்கவே பயன்பட்டது. சங்க இலக்கியமாகிய அகநானூற்று மருதப் பாடல்களான 86, 136 என்னும் இரு பாடல்களினின்றும் தமிழர் திருமண முறை குறித்துச் சில செய்திகள் கிடைக்கின்றன. திருமண விருந்து நன்னாளில் திருமணம் நடைபெறுதல், மணமனை அலங்காரம் தலைவியை மங்கல நீராட்டுதல், மணமகளுக்குக் காப்புக் கட்டுதல் வாழ்த்துதல், ஓரில்லிற் கூட்டுதல் போன்றவையாகும். இதனை,*

***"வாலிழை மகளிர் நால்வர் கூடி***
***கற்பினின் வழாஅ நற்பலஉதவிப்''***[11]

என்ற வரி மணமகட்டு மகளிர் மங்கல நீராட்டும் வழக்கத்தைக் கூறுகின்றது. இவ்வடியில் வரும் இழை என்ற சொல் மங்கல அணியைக் குறித்தது எனலாம். இதனைப்போலவே மற்றொரு பாடலில்,

**"மழைபட் டன்ன மணன்மலி பந்தர்**
**இழையணி சிறப்பின் பெயர் வியர்ப் பாற்றி''[12]**

என்ற அடிகளின் மூலம் இழை என்ற சொல் தாலி என கருதலாம். "இழையணி சிறப்பு' என்ற தொடரில் சிறப்பு என்பதன் பொருள் விழா என்பதாகும். இழையணி என்பது தாலி அணிவிக்கும் விழா எனப் பொருள் பெறும் என சுசிவல்லி குறிப்பிடுகின்றார்.'[13] இவ்வாறாக மருத்திணைப் பாடல்களில் 'தாலி' என்பது சமூக எச்சக்கூறாக இருப்பதை அறியமுடிகிறது.

## இறப்பு சடங்கு

சமூக கட்டமைப்பில் இறப்பு சடங்கு மனித வாழ்வின் இறுதிச் சடங்காகும். இது நடுகல் வழிபாடு எனவும் வழங்கப்படுகிறது. இறந்தவர்களின் நினைவாக நடப்பட்டது. சங்க கால மக்களின் வாழ்க்கையை உயர்நிலைக்கு இட்டுச் சென்றவர்கள் அவர்களுக்கு முன்பு தமிழகத்தில் வாழ்ந்த பெருங்கற்படைக் காலத்தைச் சார்ந்த மக்களே எனலாம். திராவிடப் பண்பாட்டின் முக்கிய கூறாக விளங்கிய இறந்தவர்களைப் புதைத்து அவர்களை வழிபடுகின்ற வழக்கம் பின்னாளில் பெருங்கற்படைச் சின்னங்களாக உருவாவதற்கு அடிகோலியதும் இவர்களே ''நீத்தோர் நினைவாகப் பெரிய கற்களைக் கொண்டு உருவாக்கப்பட்ட நினைவுச் சின்னங்கள் விந்திய மலைக்குத் தெற்கே''[14] இந்தியாவின் தீபகற்பப் பகுதியில் நிறைந்துக் காணப்படுகின்றன. இவை மருத நிலத்தின் நாகரிக பண்பாக இருக்கலாம். இதனை,

**"கல்லே பரவின் அல்லது**
**நெல்லுக்குத்துப் பரவும் கடவுளும் இலவே''[15]**

நடுகற்களன்றி வேறு கடவுளை வணங்குதல் இல்லை என்பது இவ்வடியின் கருத்தாகும். நெல் என்பது மருத நிலத்தின் முக்கிய உணவாகும் என்பது குறிப்பிடத்தக்கதாகும். பெருங்கற்படைச் சின்னங்களை உருவாக்குவதற்கு கற்கள் தேவைப்படுவதால் இவை குறிஞ்சி, முல்லை நிலப் பகுதிகளிலே அதிகம் காணப்படுகின்றன எனலாம். பெருங்கற்படைச் சின்னங்கள் குறிஞ்சி, முல்லைப் பகுதிகளுக்கு உரியனவாக இருக்கும் பொழுது மருத நிலத்திற்குரியனவாக முதுமக்கள் தாழிகள் விளங்குகின்றன.

''தமிழகத்தின் கீழ்ப் பகுதியில் குறிப்பாகத் தென் பெண்ணை, காவிரி, வைகை, தாமிரபரணி பகுதிகளின் படுகைகளில் கிடைக்கின்ற தாழிகளையும் கூறலாம்.''[16] இதுவும் மருத நில நாகரிகத்தின் தோற்றுவாய் எனலாம், காவிரியாற்று படுகைகள் என்பது பற்றி மருத நிலப்பாடல்களில் மிகுதியாக காணப்படுவதால் அவற்றை மருதத்திணை அடுக்குகளில் அடுக்கலாம்.

## விரிச்சிகேட்டல்

விரிச்சி என்பது நற்சொல்லைக் குறிக்கும். விரிச்சிகேட்போர் மனையிலுள்ள பெருமுது பெண்டிராய் இருப்பர். மாலைக்காலத்தில் ஊரின் ஒரு பால் சென்று விரிச்சி கேட்டலும், காவல் பொருந்திய தன் மனையிலே உள்ள மணலைப் பரப்பிய பந்தரில் சென்று விரிச்சி கேட்டலும் உண்டு. பெருமுதுப் பெண்டு விரிச்சி கேட்டு நின்ற பொழுது, பசுவைப் பிரிந்த கன்றை நோக்கி, ஓர் ஆய்மகள் "இன்னே வருதுவர் தாயர்''[17] என்று சொன்ன சொல்லை நல் மொழியாகப் போற்றிய செய்தி முல்லைப் பாட்டில் உள்ளது. 'இன்னே வருகுவர் தாயர்' என்று ஆய்மகள் கூறிய மொழி தலைவனைப் பிரிந்து வருந்திய நிலையில் இருக்கும் தலைவிக்கு ஆறுதல் அளித்ததாம் அதனால் 'நல்ல நல்லோர் வாய்ப்புள்' என்று தோழி பாராட்டி உரைக்கின்றாள்.

பெரும்பாணன் காவல் புரிய செல்லும் போது மருதநில முதுபெரும்பெண்டிர் தன் கணவனுக்கு விரிச்சிகேட்டனர். இதனை,

**“பெரும்பாண் காவல் பூண்டென, ஒருசார்**
**திருந்து இழை மகளிர் விரிச்சி நிற்ப’’[18]**

*இவ்வடிகளில் ஒரு செயலின் தொடக்கத்தில் நல்லசொல், சகுனம் பார்ப்பது சங்க சமூக மக்களின் வழக்கமாகும். இவ்வெச்சக்கூறு இன்றும் நிலவுகிறது.*

## சமூக எச்சம்

*மனித சமூக வரலாற்றில் பழக்க வழக்கங்களின் செயல்பாடுகள் எஞ்சி நிற்பவை சமூக எச்சமாகும். சங்க காலத்திலிருந்து சமூக பழக்க வழக்கங்கள் படிப்படியாக வளர்ச்சி பெற்று வந்துள்ளன. அவற்றின் எஞ்சியவை அதாவது மறைந்தவை போக எஞ்சியவை எச்சமாக இன்றும் நிலைத்து நின்று சமூக பயன்பாடு உடையதாக, இருக்கிறது. இவ்வகையான சமூகஎச்சம் இருவகையானவையாக உள்ளன. அவையான, 1.மறைந்த எச்சங்கள் 2. மறையாத எச்சங்கள் என வகைப்படுத்தப்படுகின்றன.*

*ஐவகை நிலங்களுக்கும் தனித்தனியாக மரபுகள் இருந்துள்ளன. அவை ஒவ்வொன்றும் உறவுகளுக்கு உட்படும் போதுப் புதிய பரிமாணம் அடைகின்றது. பழக்க வழக்கங்கள் என்பதும் தொன்றுத் தொட்டு வழங்கி வருகின்றன. அவை மக்களால் கடைப்பிடிக்கப்பட்டு வரும் போது சமூக மாற்றத்தின் காரணமாக வழக்கொழிந்து போகின்றன. இவ்வாறாக என்னதான் சமூக மாற்றம் நிகழ்ந்தாலும் ஒரு சில மரபுகளும், பழக்க வழக்கங்களும் மாற்றம் பெறாமல் அப்படியே இன்றும் நிலைத்து வாழ்வனவாக உள்ளன.*

*சங்க கால மக்களின் சமூக வாழ்வில் இருந்து இன்று வரை தொன்று தொட்டு நிலைத்து வாழ்பவையே எச்சமாக கருதப்படுகின்றன. மனிதன் இயற்கையோடு இயைந்து வாழத்தொடங்கி அவற்றை வழிபட்டும் வாழ்ந்தனர். நாளடைவில் நகரமயமாக்கலின் காரணமாக ஒரு சில வழிபாட்டு முறைகளிலும், பழந்தமிழர் நம்பிக்கையிலும், மாறுபாடுகள் தோன்றி மறையத் தொடங்கி வருகின்றன.*

ஒவ்வொரு சமூக எழுச்சியின் காரணமாக ஒரு பகுதி மக்கள் அதாவது மேல்தட்டு மக்களின் கடைப்பிடிப்புகளுக்கு ஏற்றார் போல நகர தொடங்கி வருகின்றன. இருந்தாலும் அவரவர் பொருளாதாரச் சூழ்நிலைக்கு ஏற்ப மாற்றி அமைத்துக் கொண்டு வருவதையும் காணமுடிகின்றது.

## முதுமக்கள் தாழி (பெருங்கற் படைக்காலம்)

சங்க கால மக்களின் வாழ்க்கையை உயர்நிலைக்கு இட்டுச் சென்றவர்கள் அவர்களுக்கு முன்பு தமிழகத்தில் வாழ்ந்த பெருங்கற்படைக் காலத்தைச் சார்ந்த மக்களே என்றால் அது மிகையாகாது. திராவிடப் பண்பாட்டின் முக்கியக் கூறாக விளங்கிய இறந்தவர்களைப் புதைத்து அவர்களை வழிபடுகின்ற வழக்கம் பின்னாளில் பெருங்கற்படைச் சின்னங்களாக உருவாதற்கு அடிகோலியதும் இம்மக்களே எனலாம்.

நீத்தோர் நினைவாகப் பெரிய கற்களைக் கொண்டு உருவாக்கப்பட்ட நினைவுச் சின்னங்கள் விந்திய மலைக்குத் தெற்கே இந்தியாவின் தீபகற்பப் பகுதியில் நிறைந்து காணப்படுகின்றன. பெருங்கற்படைச் சின்னங்களை உருவாக்குவதற்கு கற்கள் தேவைப்படுவதால் இவை குறிஞ்சி முல்லை நிலப் பகுதிகளிலேயே அதிகம் காணப்படுகின்றன. எனலாம்.

பெருங்கற்படைச் சின்னங்கள் குறிஞ்சி, முல்லைப் பகுதிகளுக்கு உரியனவாக முதுமக்கள் தாழிகள் விளங்குகின்றன. தமிழகத்தின் கீழ்ப் பகுதியில் குறிப்பாகத் தென்பெண்ணை காவிரி, வைகை, தாமிரபரணி நதிகளின் படுகைகளில் கிடைக்கின்ற தாழிகளையும் இப் பண்பாட்டுக்குள்ளேயே அறிஞர்கள் அடக்குகின்றனர். பகைவர் முன்னின்று ஆற்றலோடு போர் புரிந்து உயிர் துறந்த வீரர்களை நினைவு கூர்தற் பொருட்டு அவர்கள் இறந்த இடங்களிலாதல் அல்லது வேறு தொடர்புடைய இடங்களிலாதல் நடுகல் ஒன்றமைத்து விழா நடத்திப் பாராட்டுதல் முற்காலத்தில் தமிழ் மக்கள் கைக் கொண்டிருந்த ஒரு பழைய வழக்கமாகும். இவ்வுண்மை பழைய தமிழ் நூலாகிய தொல்காப்பியத்தில் உள்ளது. இதனை,

***"காட்சி கால்கோள் நீர்ப்படை நடுகல்***
***சீர்த்தகு சிறப்பிற் பெரும்படை வாழ்த்தலென்***
***றிரு மூன்று வரையிற் கல்லொடு புணர''[19]***

என்னும் சூத்திரப்பகுதியினால் நன்குணரலாம். அந்நடுகல்லின் மேல் போர்க்களத்தில் இறந்த வீரனின் பெயரும் பெருமையும் வரையப்படும் வழக்கம் பண்டைக் காலத்தில் இருந்தது என்பது கடைச்சங்கம் புலவர்களின் பாடல்களால் புலப்படுகின்றன. இதனை,

***"நல்லமர்க் கடந்த நாணுடை மறவர்***
***பெயரும் பீடும் எழுதி யதர் தொறும்***
***பீலி சூட்டிய பிறங்கு நிலை நடுகல்''[20]***

என்னும் அகப்பாடலும் உணர்த்துகின்றது. தென்புலத்தார் கடன் நடுகல் சமூக எச்சமாக இன்றும் தொடர்வதை காண முடிகின்றது.

தென்புலத்தார் கடன் என்பதும் சமூக எச்சமாகிவிட்டது. இறந்துபட்டவர்களுக்கு அவர்களுடைய மைந்தர் செய்யும் ஒரு கடமையே தென்புலத்தார் கடன் ஆகும்.

இதனைப் பிதிர்க்கடன் என்றும், பிண்டோதக் கிரியை என்றும் கூறுவர். இக்கடன் ஆண் மக்கட்கே உரியதாகும். எனவே, ஆண் மக்களைப் பெறாதாரை மலடர்களாகவே கருதினர். பெண் குழந்தைகளையே பெற்றவளும் சாக்குழவி மீன்றவளும் இவர்கள் கொள்கைப்படி மலடிகளே. இந்த உலகத்தில் புகழ் பெறவும், மறுமை பயனை அடையவும் உதவுவார் ஆண் மக்களே என்ற கருத்துச் சங்க நாளில் நிலவியது. இதனை,

***"இம்மை வுலகத்து இசையொடும் விளங்கி***
***மறுமை பயனும் மறுவின் ............***
***செறுநரும் விழையும் செயிர்தீர் காட்சிச்***

***சிறுவர்ப் பயந்த செம்மலோர் எனப்***
***பல்லோர் கூறிய பழமொழி யெல்லாம்***
***வாயே யாகுதல் வாய்ந்தனம் தோழி''[21]***

என்னும் செய்யுட் பகுதி இதற்கு சான்றாகும்.

**உழவர் – உழவு (வேளாண் எச்சம்)**

அவரவர் செய்யும் தொழிலின் காரணமாக வேறுபாடு தோன்றியது. வள்ளுவர் இதனை,

***"பிறர்பொக்கும் எல்லா உயிர்க்கும் சிறப்பொல்லா***
***செய்தொழில் வேற்றுமை யான்''[22]***

என்ற குறளுக்கு ஏற்ப வேறுபாடற்ற சமுதாயம் சங்க காலத்தில் நிலவியது. களங்கள் பல தோன்றின. அவர் அவர் நடைமுறை வாழ்வில் ஏற்றத் தாழ்வுகளும் நிலவின. சங்க காலத்தில் உழவுத் தொழில் உணவளிக்கும் உயர்ந்த தொழிலாக கருதப் பட்டுள்ளது. இதனால் தான் வள்ளுவர்

***"உழுதுண்டு வாழ்வாரோ வாழ்வார் மற்றெல்லாம்***
***தொழுதுண்டு பின்செல் பவர்.''[23]***

என்னும் குறளில் புலப்படுத்தியுள்ளார்.

இனக் குழுச் சமுதாயத்தில் ஆண்கள் போர் மற்றும் நாடுகாத்தல் தொழிலில் ஈடுபட்டிருந்த காலங்களில் வேளாண்மையை பெண்களே முதலில் செய்துள்ளனர்.

**சாகுபடி**

தொழிலால் அமைந்த பெயர் உழவர், சாகுபடி நிலம் மருதம் எனப்படும். "விவசாயிகளை உழவர்கள் எனவும் அவர்தம் மகளிரை உழத்தியர் எனவும் கூறினார்.''[24] தொல் (பொருள்) 20 நச்சினார்க்கினியர் உரையில் காணலாம். நெல் சாகுபடி மருத நிலத்தில் சிறப்பாக நடைப்பெற்று வந்துள்ளதை மருத நில பாடல்கள் புலப்படுத்துகின்றன.

### ஓர் ஏர் (மாடு)

ஒரு (மாடு) பசுவை மட்டும் உடைமையாகக் கொண்டவர்கள் சுமாரான நல் வாழ்க்கை நடத்த இயலாது என்று கருதப்பட்டது. இதனை.

**"ஓரான் வலிசிச் சீரில் வாழ்க்கை"**[25]

என்றனர். இடைக் குலத்தோர் ஆடு மாடுகளையே சொத்தாகக் கருதினர். உழவர் தாம் வைத்திருந்த ஏர்களைக் கொண்டு தமது செல்வத்தைக் கணக்கிட்டனர். குறுந்தொகையில் ஒரேருழவனைப் பற்றி குறிப்பிட்டுள்ளனர்.

### எருமை உழவு

எருமையை உழவுக்கு பயன்படுத்தியுள்ளதை மருதப் பாடலில் காணமுடிகிறது. இதனை,

**"மலைகண்டன்ன நிலை புணர் நிலப்பின்**
**பெரு நெற்பல் கூட்டு எருமை உழவு"**[26]

இவ்வரிகளில் மலைகண்டாற் போன்ற நிலை பொருந்திய உயரமுள்ள பெரிய புல நெற் கூடுகளையுடைய எருமை பூட்டியுழும் உழவனே! என்று கூறியுள்ளார். இதன் மூலம் எருமைப் பூட்டியுழும் உழவர்களைக் காணமுடிகிறது.

### நாற்று நடவு செய்யும் ஆட்கள்

நெல் நாற்றினை நடவு செய்யும் முறையை மருத நில மக்கள் அறிந்திருந்தனர். இதனை,

**"ஏர் உறு செறுன் நாறு முடி அழுத்த நின்**
**நடு நரொடு சேறி ஆயின் அவண"**[27]

என்னும் வரிகளில் நீர் மிக்க வயலே நாற்று முடிகளை நடுவதற்காக உன் நடும் ஆட்களோடு சென்றால் களைகளைப் பிடிங்கி விடாதே என அறிவுறுத்தப் பட்டுள்ளதைக் காணமுடிகிறது.

## நெல் தூற்றல் (களமர்)

அறுவடை செய்யப்பட்ட நெற்களைப் பதர் இன்றி சுத்தம் செய்ய தூற்றியுள்ளனர். இதனை களத்தில் களமர்கள் செய்துள்ளனர். என

**“கள்ளார் களமர் பகடு தளை மாற்றிக்**
**கடுங் காற் றெறியப் போகிய துரும்புடன்”[28]**

என்னும் அடிகள் நெல்லினைத் தூற்றி வைத்த செய்தி புலனாகிறது.

## நெல் குவித்தல்

பதர் நீக்கிய நெற்களைக் களமர் களத்தில் குவித்து வைத்துள்ளனர். இதனை,

**“அரிந்து கால் குவித்த செந்நெல் வினைஞர்”[29]**

எனும் அடிகளில் தீயானது கொளுந்துவிட்டு எரிவது போன்ற தாமரை மலர்களில் இடைஇடையே செந்நெல்லை அரிந்து ஓரிடத்தே குவித்தனர் உழவர் என்பதிலிருந்து அறிய முடிகிறது.

## கோரையும் செந்நெல்லும்

நீர் மிக்க வயலிலே நாற்று முடிகளை நடுவதற்காக உன் நடும் ஆட்களோடு சென்றால் அங்குள்ள கோரைகளையும், நெய்தல்களையும் களைந்து எறிந்துவிடாமல் பாதுகாப்பாயாக ஏனென்றால் அவை எம் இல்லத்தில் செறிக்கப்பட்ட கரிய பெரிய கூந்தலையுடைய மடந்தைக்கு அழகிய வளையல்களாகப் பூட்டிக்கொள்ளவும், தழை உடையாக அணிந்து கொள்ளவும் உதவும் என தலைவி ஒருத்தி மருதப்பாடலில் குறிப்பிட்டுள்ளார். இதனை,

***“......................அவனே***
***சாயும் நெய்தலும் ஓம்புமதி எம்மில்***
***மா இருங் கூந்தல் மமந்தை’’[30]***

*என்னும் அடிகளில் கோரையும், நெய்தல் மலரும் அணிகலன்களாக அணிந்துள்ளதை அறிய முடிகிறது. இவை மருத நில வயல்களில் கிடைத்தனவாகும்.*

**வலைத்தொழிலும் உழவுத்தொழிலும்**

*மருதப் பாடலில் மீன்பிடிக்கும் வலைத் தொழிலிலே வல்லவனாகிய பாணனுடைய வெள்ளிய பற்களையும், மடப்பத்தையும் உடை மகள் வரால் மீன் கொணர்ந்து கொட்டிய கூடையினுள்ளே, உழவன் மனைக்கிழத்தி அதற்கு விலையாக ஓராண்டு கழிந்தப் பழைய வெண்நெல்லை கொட்டி நிரப்புதற்கு இடனான ஊரையுடையோய் என தலைவி கூறுகிறாள். இதனை,*

***“வலைவல் பாண்மகன் வாலெயிற்று மடமகள்***
***வராஅல் சொரிந்த வட்டியுண் மனையோல்’’[31]***

*என்னும் அடிகளில் காணமுடிகிறது. இவ்வாறாக மருத நில மக்களும், நெய்தல் நில பரதவர்களும் உறவு உடையவர்களாக இருந்தமை உணர முடிகின்றது. மேலும்,*

***“இரு நீர்ப் பரப்பிற் பனித்துறைப் பரதவர்***
...................................
***கழனி உழவரொடு மாறெதிர்ந்து மயங்கி’’[32]***

*என்னும் வரிகளும் பரதவர், உழவர் உறவு நிலையைப் பேசுகின்றனர்.*

**நெல் அறுவடை**

மருத நிலங்களில் உழவுத் தொழில் சிறப்பாக நடைபெற்றது. நெற்கதிரை அறுப்பவர்கள் தண்ணுமை என்னும் வாத்தியத்தை முழங்கி அறுவடை செய்துள்ளனர். இதனை,

> ***“செவண்ணெல் அரிநர் தண்ணுமை வெரீஇ***
> ***பழனப் பல்புள் இரிய கழனி’’*[33]**

என்ற வரிகளின் மூலம் அறுவடை நிகழ்வு மருத நிலங்களில் இசையோடு நடைபெற்றுள்ளதைக் காணமுடிகிறது.

**சாணைக்கல் தொழிலாளன்**

மருத நிலத்தில் சாணைப் பிடிக்கும் தொழில் சிறப்புடன் நடைபெற்றுள்ளது. நன்னன் என்பவனின் பறம்பு மலையில் சாணைக் கல் செய்யும் தொழிலாளன் அரக்குடன் சேர்த்துப் பொருத்திண சாணைக்கல் போன்று வண்மையுடைய நாவினேன் ஆகிப் பேசாமல் அந் நிகழ்ச்சியைத் தாய்க்குச் சொல்லவில்லை. இதனை,

> ***“சிறு காரோடன் பயினனாடு சேர்த்திய***
> ***கற்போல் நாவினோனாகி மற்றுஅது”*[34]**

என்னும் பாடலடிகள் புலப்படுத்துகின்றன.

**தூண்டில் போடுதல்**

சமூக எச்சங்களில் தூண்டில் போடுதல் என்னும் வழக்கம் இன்றும் சமூகத்தில் நிலவுகின்றன. சங்க மருதப் பாடல்களில் இது சிறப்பாக பதிவாகியுள்ளது. அதில் கயிற்றையுடைய தூண்டிற்கோலால் மீனைப் பிடிக்கும் பாணர் மக்கள் அவர் நீரடைகரையில் இழுத்துப் போட்ட வரால் மீனைப் பன்னாடையால் வடிகட்டிய கள்ளைக் குடித்து மயங்கியிருந்த தன் தந்தைக்கு வஞ்சி மரத்தில் விறகால் சுட்டு வாயில் ஊட்டுவாள். இத்தகைய இயல்பு மருத நிலங்களில் நிகழ்ந்துள்ளன. இதனை,

***"நாண் கொள்ளுண் கோலின் மீன்கொள் பாண்மகள்***
***தான் புனல் வடைகரைப் படுத்த வராஅல்''[35]***

என்ற வரிகளின் வாயிலாக அறிய முடிகிறது. கயிற்றில் போடப்பட்ட தூண்டில் தற்காலங்களில் 'நரம்பு' (நைலான்) கயிற்றில் போடப்படுகிறது. பெண்கள் மது 'கள்' அருந்தும் வழக்கம் உடையவர்களாக இருந்திருக்கின்றனர்.

**கரும்பு இயந்திரம்**

சங்க காலத்திலேயே கரும்பு இயந்திரம் ஆலைகளில் பயன்படுத்தப் பட்டுள்ளது. கரும்பு ஆலை பொறி இயந்திரத்தின் ஒலி, பாண்டியனுடைய தேனூரில் இருக்கின்ற ஆண் யானையின் பிளிற்றொலியை விட உயர்வாக ஒலித்துள்ளன. இதனை,

***''கரும்பி னேந்திரங் களிற்றெதிர். பிளிற்றுந்***
***தேதாவன் கோமான் றேணரன்ன விவ''[36]***

என்னும் அடிகளில் மருத நிலப் பாடலானது கரும்பு இயந்திரங்களைப் பற்றி புலப்படுத்துகின்றன.

**தச்சன்**

மருத நில தச்சன் செய்த குதிரை பூட்டிய தேரை வளர்ந்து இன்பம் அடையாரானாலும், கையினால் இழுத்த இன்பம் அடையும் சிறாரைப் போல தலைவி இன்பம் அடைந்ததாகக் கூறுகிறாள். இதனை,

***"தச்சன் செய்த சிறுமா வையம்***
***வளர்ந்தின் புறார் ராயினுங் கையின்''[37]***

என்னும் அடிகளில் தச்சர்கள் குதிரையைச் செய்துள்ளதைக் காணமுடிகிறது.

**புனல் விளையாட்டு**

சங்க சமூக மக்கள் புனல் விளையாட்டு விளையாடி இன்புற்றனர். தலைவி புனல் விளையாட்டு விளையாடி காவிரி நீரில் மூழ்கி உள்ளதைக் காணமுடிகிறது. இதனை,

**"பெரும்புனல் வவநத இருந்துறை விரும்பி"[38]**

என்ற வரிகளில் காணலாம். இதில் பெரிய நீர் துறையிடத்து பெருகி வரும் நீரில் விளையாட சென்ற தலைவியின் நிலையை உணர முடிகிறது. கழாஅர் என்ற உரின் தலைவன் புனலாடிய கருத்தும் உள்ளன. இதனை,

**"இரும்பொலம் பாண்டில் மணியொடு தெளிர்ப்ப**
**புனல் நயந்து ஆடும் அத்தி"[39]**

என்ற வரிகளில் அத்தியின் புனல் விளையாடி உள்ளது புனலாகிறது.

**எஞ்சிய ஊர்கள்**

மருத நிலத்திற்குரியது ஊர் என்பதாகும். அட்டவாயில் அரிமணவாயில், உறத்தூர், அழுந்தூர். அள்ளூர், உறந்தை, கழாஅர், கூடல், நீடூர், பருவூர், பாழி, போஓர், வல்லம், வேளூர் ஆகிய சிறப்பு பெயர்களால் ஊர் குறிப்பிடப்பட்டு புனைந்துள்ளதைக் காணமுடிகிறது.

**இரும்பையூர்**

இவ்வூர் பற்றி பதிவை,

**"நூங்கு சினை மருதத் தூங்கு துணர்உதிரும்**
**தே.வ்ண் விராஅன் இருப்பை அன்னஎன்"[40]**

இதில் இரவளர்க்குத் தேர் கொடை வழங்கும் கொடை வள்ளலான விராஅன் என்பவனுக்கு சொந்தமானது என தெரிகிறது.

### மூதூர்

*கூத்தாட்டம் நடக்கும் இயல்பான விழாவுள்ள ஒலியுடைய பழைய ஊரில் மூதூர் சிறப்பான ஊராகும். இதனை,*

***"ஆடு இயல் விழாவின் அழுங்கல் மூதூர்''[41]***

*என்ற அடிகளில் மூதூர் பற்றி அறிய முடிகிறது.*

### குன்னூர்

*மிகப் பழைய வேளிர்களுடைய ஊர் குன்னூர் ஆகும். இவ்வூரில் வயல்களைக் காவல் செய்வோர், வயல் ஆமையின் பசிய இலைபோலக் காணப்படும் முதுகில் தாம் சுடுகின்ற நத்தையை உடைத்து உண்ணும் ஊராகக் குன்னூர் இருந்துள்ளன. இதனை,*

***"தொன்று முதிர் வேளிர் குன்னூர் அன்ன என்***
***நல்மலை நனி யிருந்து அயரும்''[42]***

*என்னும் அடிகளில் காண முடிகிறது.*

### கள்ளூர்

*இவ்வூர் அழகு விளங்கப் பழமையான புகழ்மிக்க பல வகையான மலர்கள் நிறைந்த வயல்களையும், கரும்பு மிக்கத் தோட்டஙகளையும் கொண்ட மிக்க சிறப்புடைய கள்ளூர் என்ற ஊராகும். இதனை,*

***"தொல்புகழ் நிறைந்த பல்பூங்கழனி***
***அரும்பு அழல்படப்பை, பெரும்பெயர்க் கள்ளூர்த்''[43]***

*என்ற வரிகளில் கள்ளூர் பற்றிய செய்தி காணமுடிகிறது.*

### வாணன் சிறுகுடி

பாகன் குறிப்பது தவிரப் பிற கல்லாத யானைகளையும் விரைவாச் செல்லும் தேரையுடையவன் செழியன். அவன் பெயரால் செய்தனர் சிறந்த ஒரு குளம். அதன் மடைவழியே நீரையிட்டனர்.

அந்நீர் வெளியே சென்றது. குளத்தில் இருந்த திரண்ட மருப்பையுடைய வாளை மீனும் அந்நீரின் கால்வாயை அடைந்து எதிர் சென்றது. அதன் பின்னர் சேற்றை உடைய வயலின் உள்ளே புகுந்தது. அங்கே உழுகின்ற எருமைக் கடாவின் சேறுபட்ட காலில் படாமல் வெள்ளையான முதுகோடு ஓடியது. உழவர் அதை அடித்தனர். அவ்வாளை மீன் பசிய கால் வாயுள்ள வயல் வரப்பின் பக்கத்தில் பிழைத்துப் புரண்டது. அதுவே வாணன் என்பவனின் சிறுகுடி என்னும் ஊர் ஆகும். இதனை,

> **"வாணன் சிறுகுடி அன்ன என்**
> **தோள் நேர் எல்வளை நெகிழ்ந்த நும்மே''!**[44]

என்ற அடிகளில் காணலாம்.

### அள்ளூர்

பகைவரின் யானைகளைக் கொண்ட அரிய போரினைச் சிதைந்திடக் கொல்லும் ஒளிரும் வாட்படையை உடைய வெற்றி பொருந்திய செழியனின் நெற்குவியலையுடைய அள்ளூர் போன்று எனது நலன் சிறப்புடன் உள்ளதாக தலைவி குறிப்பிடுகிறாள். இதனை,

> **"முளிறு வாட் தானைக் கொற்றச் செழியன்**
> **பிண்ட நெல்லின் அள்ளூர் அன்னணன்''**[45]

என்ற வரிகளால் அறிய முடிகிறது.

**கழாஅர் ஊர்**

*முட்கள் பொருந்திய தண்டை உடைய பிரம்பின் பழைய புதர்களில் தங்கியிருக்கும் இடங்களை உடைய பல வேற்படைகளையுடைய மத்தி என்பவனின் கழாஅர் என்ற ஊரைப் போன்று என் இளமை கழிந்து பழையதாயிற்று என்கிறாள். இதனை,*

***"பல்வேல் மத்தி துள்அர் அன்னஎம்***
***இளமை சென்று அவத்தொல்லஃதே''***[46]

*என்ற அடிகளால் காணமுடிகிறது. இவ்வாறு சங்ககால சமூகங்களின் பல்வேறு எச்சங்களை அறிய முடிகிறது.*

## தொகுப்புரை:

- இவ்வியலின் தொகுப்புரையாகச் சமூக மரபுகளின் எச்சம் விளக்கப்பட்டுள்ளன.

- முதுமக்களின் தாழிகள், நீத்தோர் நினைவாக நடப்படும் நடுகற்கள் பற்றி விளக்கப்பட்டுள்ளன.

- தென்புலத்தார் கடன், தற்காலத்திலும் நிகழும் எச்சமாக உள்ளமைக் காணமுடிகிறது.

- வேளாண் எச்சம், குலக்குழுமரபு, சாகுபடி, ஓரு, ஏர், எருமை உழவு., நாற்று நடவுச் செய்யும் முறை, நெல் தூற்றல், நெல் குவித்தல், கோரையும், நெய்தலும் உள்ள பயன்பாடு ஆகியவை இடம் பெற்றுள்ளன.

- நெல் அறுவடை, வலைத்தொழில், உழவுத் தொழில், சாணைக்கல் தொழில், தூண்டில் போடுதல், கரும்பு இயந்திரம், தச்சர்களின் நிலை ஆகியவை எச்சமாக உள்ளதைக் காணமுடிகிறது.

- எஞ்சிய ஊர்களான இரும்பையூர், மூரூர், குன்னூர், கள்ளூர், வாணன் சிறுகுடி, அள்ளூர், கழாஅர் ஊர் போன்ற ஊர்கள் எச்சமாகி இன்றையளவும் உள்ளதைக் காண முடிகிறது.

# மேற்கோள்கள்


1. தொல். அகத்திணை.5
2. மேலது., 9
3. அகத்.5
4. பக்தவாச்ல பாரதி, தமிழர் மானிடவியல், பக்.2
5. மேலது., 3
6. மேலது., 4
7. அகம். 6 (3-4)
8. மேலது., 9
9. க.ப. அறவாணன், தமிழ் மக்கள் வரலாறு, பக்.33
10. உலகத் தமிழ்ச்செம்மொழி மாநாடு சிறப்புமலர், கோவை 2010. பக்.207
11. அகம்.86 (12- 14)
12. அகம்.136
13. சசிவல்லி, தமிழர் திருமணமுறை, ப.66
14. க.ப. அறவாணன், தமிழ் மக்கள் வரலாறு, பக்.36
15. புறம்.335
16. ராஜன், க., தொல்லியல் நோக்கில் சங்ககாலம், ப.11
17. குறுந்.295
18. நற்.40
19. தொல்.புறத்.5
20. அகம்.67
21. அகம்.66
22. குறள்.972
23. மேலது.,1033
24. தொல்.பொருள்.20
25. குறுந்.295
26. நற்றிணை.60
27. மேலது.,

28. அகம்.336

29. அகம்.116

30. நற்றிணை.60

31. ஐங்குறுநூறு, புலவி.48

32. அகம்.336

33. நற்றிணை.350

34. அகம்.356

35. அகம்.216

36. ஐங்குறு.தோழிக்கு உரைப்ப.5

37. குறுந்தொகை.61

38. குறுந்தொகை.80

39. அகம்.376

40. நற்றிணை.350

41. மேலது., 90

42. மேலது.,280

43. அகம்.256

44. நற்றிணை.260

45. அகம்.46

46. அகம்.6

# முடிவுரை

- சங்க இலக்கியத்தில் அகத்திணையை மையமாகக் கொண்ட பாடல்களை மட்டும் ஆய்வு முதல்நிலைத் தரவாகி எடுத்துக்கொண்டு சமுதாயவியல் நோக்கிலும், மார்க்சிய நோக்கிலும் விளக்கமுறையிலும் ஒப்பிட்டு முறையிலும் ஆய்வு செய்து ஏனைய இலக்கியத் தரவுகளைக் கொண்டு சமூக உறவுகள் பற்றி ஆராயப்பட்டுள்ளன. இவ்வாய்வில் கிடைத்த முடிவுகளைத் தொகுத்து முடிவுரையாக இங்குத் தரப்படுகிறது.

- சமூகவியல் நோக்கில் இலக்கியங்கள் பெறும் இடத்தை மேலை நாட்டு இலக்கிய மரபில் உயிரிகளின் தோற்றக் கொள்கைகள், தமிழிலக்கியத் தகவல்களின் அடிப்படையில் உயிரின் தோற்றத்தில் ஏற்பட்டுள்ள மாறுபாடுகள் இவை விரிவாக ஆராயப்பட்டு முடிவுகள் கண்டறியப் பட்டுள்ளன.

- சமூகம், சமூகவியல், சமூகத் தோற்றத்தின் அடிப்படைகள் குறித்து மேலைநாட்டு அறிஞர்களின் சிந்தனைகள் எடுத்துக்காட்டப் பட்டுள்ளன. அவற்றின் கருத்துகள் ஆய்வுத் தரவுகளுக்கு ஏற்ப மேற்கோளாக வைக்கப்பட்டுள்ளன.

- இலக்கியச் சமூகவியலின் மூவகை நிலைகள் சங்க இலக்கியத் தரவுகளுக்குப் பொருந்துவதாக இல்லை என்பதை அறியமுடிகிறது.

- இலக்கியமும் சமூக உருவாக்கமும் சமூக உறவுகளின் பன்முகப்பட்ட கட்டமைப்புகள் ஆகும். சமூகப் பொருளாதார உற்பத்திகளைக் கருத்தில் கொண்டு அரசியல் நிலையானது இயக்கம் பெற்றுள்ளமை புலனாகிறது.

- திணை நிலைப் பெயர்களைக் காணும் போது அவை வர்க்க உறவுகளுக்கு அடிப்படை என்பதை அறியமுடிகிறது.

- இலக்கியங்களின் உருவாக்கத்தில் சமூகத்தின் பங்களிப்பு இன்றியமையாததாகும். ஒவ்வொரு காலக்கட்டத்திலும் இலக்கியங்கள் பல புதிய கொள்கைகளை வகுத்து புதிய வடிவங்களைப் பெற்றுள்ளன.

- தொல்காப்பிய உருவாக்கத்திற்கு முன்பே பல்வேறு இலக்கியங்கள் இருந்துள்ளமையை அவற்றில் காணப்படும் என்மனார் புலவர், 'என்பர் மொழிப' ஆகிய சொற்களைக் கொண்டு அறியமுடிகிறது.

- சங்க இலக்கியங்கள் அகம், புறம் என்னும் இருவகைக் கொள்கைகளை மையமாகக் கொண்டு படைக்கப்பட்டுள்ளன. சுட்டி ஒருவர் பெயர் கொளப் பெறாமல் அக இலக்கியங்கள் ஆக்கம் பெற்றுள்ளதால் சங்க காலம் நாகரிக வாழ்வினைக் கொண்டு இருப்பது புலனாகின்றது.

- சங்ககால மன்னர்களிடையே போட்டியும், பூசலும், பொறாமையும் இருந்தமையால் களப்பிரர்கள் காலத்தில் நீதி இலக்கியம் தோற்றம் பெற்றுள்ளமை தெரிகிறது.

- சமண, பௌத்த மதங்களின் செல்வாக்கு மிக்கு இருந்த காலங்களில் காப்பிய இலக்கியங்கள் உருவாக்கம் பெற்றமையைக் காணமுடிகிறது.

- பிறசமய கொள்கைகள் மேலோங்கியமையால் அவர்களின் கருத்துக்களை ஏற்காமல் மீட்டுருவாக்கம் பெற்ற சைவம், வைணவம் ஆகிய சமயங்கள் செழித்தன.

- சிற்றிலக்கியம் தோற்றத்திற்கான வித்து தொல்காப்பியர் காலத்திலேயே உருப்பெற்றுள்ளமை தெரிகிறது. அவற்றின் வளர்ச்சியாக உலா, கலம்பகம், சதகம், பரணி, பிள்ளைத்தமிழ், தூது, பள்ளு, குறவஞ்சி போன்ற சிற்றிலக்கியங்கள் உருவாக்கம் பெற்றுள்ளமையைக் காணமுடிகிறது.

- வேற்று நாட்டாரின் வருகையால் அச்சுப் பொறி வந்தது. பின்னர் ஓலைச்சுவடியிலிருந்து எழுத்தாக்கம் செய்து நூல்களாக ஆக்கம்பெற வைத்தது. புத்திலக்கியங்களான புதுக்கவிதை, நாவல், சிறுகதைகள், ஆகியன உருவாகியுள்ளன.

- ❖ நில உடைமைச் சமூகத்தில் மருதத்திணை, தரவுகளின் படி செழிப்புற்று இருந்தமையால் அரசு உருவாக்கம் ஏற்பட்டதைக் காணமுடிகிறது.

- ❖ பெரும்பாலான உலக நாகரிகங்கள் ஆற்றங்கரையில் தோன்றின. அவற்றினை அடியொற்றிக் காவிரியாறு மருத நாகரிகம் தோன்ற காரணமாக இருந்திருக்கலாம் என்ற கருதுகோளுக்கு ஆதாரம் சுட்டிக்காட்டி விளக்கப்பட்டுள்ளது.

- ❖ திராவிட நாகரிகத்தின் தொட்டிலாகப் பஃறுளி ஆற்றங்கரை இருந்துள்ளமை தெரிகிறது. உலகின் முதல் மக்களினமாகத் திராவிடர்கள் இருந்துள்ளனர்.

- ❖ சங்க காலத்தில் இருந்த முச்சங்கங்களும் முதல் சங்கங்கள் கடல்கோளால் அழிந்தமையையும், எஞ்சிய மூன்றாவது சங்கம் வழி சங்க இலக்கிய உருவாக்கமும் அறியமுடிகிறது.

- ❖ சங்க இலக்கிய மருதத்திணைப் பாடல்களில் காணப்படும் மருதம் சார்ந்த கட்டமைப்புகளைக் கண்டு அங்கே நிலவிய திணைநிலை மக்களின் உறவுகள் புலனாகின்றன .

- ❖ சங்க இலக்கியம் திணை இலக்கியமாகும். அவற்றின் பனுவல் ஆக்கம், திணைநிலை அமைப்புகள் அக நிலையைக் கருத்தில் கொண்டு உறவுடையனவாக இருந்துள்ளன.

- ❖ ஐங்குறுநூற்றின் திணை நிலை அமைப்பு மருதத்திணைக்கு, முதலிடம் கொடுத்துப் பனுவலாக்கம் செய்யப்பட்டுள்ளன.

- ❖ நிலத் தெய்வங்களைக் குறிப்பிடும்போது தொல்காப்பியம் மருத நிலத்தெய்வத்திற்கு மட்டுமே வேந்தன் என்ற சொல்லாட்சியைப் பயன்படுத்தியுள்ளமை புலனாகிறது.

- ❖ கலித்தொகையின் திணைநிலையமைப்பில் ஐவகை நிலத்திலும் ஐவகைப் புலவர்கள் பாடியுள்ளமைத் தெரிய முடிகிறது.

- ❖ குறுந்தொகையில் திணை நிலையமைப்பு கூற்றுகளை அடிப்படையாகக் கொண்டு அமைக்கப்பட்டுள்ளது. இவற்றிலுள்ள கூற்றுகள் அனைத்தும் உறவுடையன.

- ❖ நற்றிணையில் திணை நிலையமைப்பு இயல்பாகவே தொல்காப்பியரின் வழியில் பின்பற்றி அமைக்கப்பட்டுள்ளமை தெரிகிறது.

- ❖ அகநானூற்று அமைப்பு முறையில் ஆறு (6, 26, 36, 46) என அமைந்துள்ள எண்ணுடைய பாடல்கள் மருதத்திணையில் அமைக்கப்பட்டுள்ளன. இவற்றில் பாலைத்திணைப் பாடல்களே மிகுதியாகக் காணப்படுகின்றன.

- ❖ சங்க இலக்கிய மருதப் பாடல்கள் அகபுற உறவுடன் காணப்படுகின்றன. அவ்வாறு காணும்போது மருதத்திற்கு உழிஞைத் திணைப் புறனாக உள்ளது. இப்புறத்திணை பதிற்றுப்பத்து என்னும் நூலில் ஒரே பாடலில் பயின்றுள்ளமை காணமுடிகிறது.

- ❖ திணைக் கொள்கையின் அடிப்படையில் மருத நிலத்தின் தோற்றம் பற்றிய செய்திகள் இடம் பெற்றுள்ளன. ஒவ்வொரு நிலமும் மற்றைய நிலங்களோடு உறவுடையனவாக இருந்துள்ளமை தெரிகிறது.

- ❖ நிலம் கலந்து உறவாதலில் மருதம் முல்லைக் கலப்ப, மருதம் நெய்தல் உறவு, மருதம் உழிஞை உறவு, ஆகிய திணை நிலங்கள் உறவுள்ளமை சான்றுடன் விளக்கப்பட்டுள்ளன.

- ❖ மருதத்திணைப் பாடலில் காணப்படும் புறக் கருவிகளான வேல், ஓடக்கோல், வெண்குடை, வாட்படை, மதுரைப்போர், முள்ளூர், மாந்தை நகர், புற அக உறவுகளுக்கான சான்றுகள் தரப்பட்டுள்ளன.

- ❖ சங்க கால மக்களின் வாழ்வு திணை உறவாகும். நிலம் சார்ந்த மக்கள் குறிப்பிட்டு திணைப் பெயர்களாலே அழைக்கப்பட்ட உறவாகும். சங்கப் பனுவல்கள் கூற்றுப் பாடல்களாக இருப்பதால் அக்கூற்றுக்களின் அமைப்புகள் உறவுடையனாக இருப்பதைக் காணமுடிகிறது.

- ❖ அகப்பாடல்களில் காணப்படும் தலைவன் கூற்று, தோழிக்கூற்று, தலைவிக் கூற்று, பரத்தையர் கூற்று, கண்டோர் கூற்று ஆகியோர்களின் கூற்றுகள் அமைவிட பாங்கு கணக்கிடப்பட்டு விளக்கப்பட்டுள்ளன.

- ❖ மன்னன் மக்கள் உறவு சிறப்புற அமைந்த உறவாகும். ஒரு நாட்டில் வாழும் மக்கள் மகிழ்வாக வாழ்வதும் எதிர்மறையாக இருப்பதும் அந்நாட்டினை ஆட்சி செய்யும் மன்னனின் செங்கோன்மையினைப் பொருத்து அமைந்துள்ளமை அறியமுடிகிறது.

- ❖ ஐவகை நிலப்பாகுபாட்டில் மருத நிலத்தின் தெய்வம் பற்றி கூறுமிடத்து 'வேந்தன்' என்ற சொல்லாட்சி புனையப்பட்டுள்ளமை கருத்தில் கொண்டு வேந்தாட்சியின் அடித்தளம் மருதநிலம் என்பது தெரிகிறது.

- ❖ மருத அகப்பாடல்களில் காணப்படும் வேந்தர்களை இனம் காண்பதால் கண்டு அவர்கள் மக்களோடு உறவுடையவர்களாக இருப்பது அறியலாகிறது.

- ❖ சங்க கால தமிழகம் சேரர், சோழர், பாண்டியர் என்ற மூன்று வேந்தர்களால் ஆளப்பட்டு வந்தது. இம்மூவேந்தர்களிடையே ஒருவரை ஒருவர் அடித்தலும் தொலைத்தலும் அயராத பணியாக இருந்தது. இம்மூவேந்தர்களின் கீழ் இருந்த அவைப்புலவர்கள் அம்மன்னனுக்கு அறிவுரை வழங்கி ஆற்றுப் படுத்தி இருந்தமை புலனாகிறது.

- ❖ மன்னர்களுக்கும், கலைஞர்களுக்கும் சமூகத்தில் இருந்த உறவுநிலை சிறப்புடையதாகும். மன்னர்கள் பரிசுப்பொருட்களை வழங்கி ஊக்கமளித்து அவர்களை வறுமையினின்றுகாத்து வந்துள்ளமை தெளிவாகிறது. கூத்தர்கள், பாணர்கள், விறலியர்கள் அரண்மனையில் நடைபெறும் விழாக்களில் முக்கிய பங்காற்றியுள்ளமை தெரிகிறது.

- ❖ பாணன் என்பவன் தலைவனுடன் நெருங்கிய நட்புடையவனாக இருந்துள்ளமை புரிகிறது. பாணன் தலைவியிடம் நேரிடையாகச் சென்று தலைவனின் நிலையை எடுத்துக் கூறியுள்ளான். அதோடு நில்லாமல் தலைவியின் தோழியின் வாயிலாகவும் பாணன் உறவுடையவனாக இருந்துள்ளமை புலனாகிறது.

❖ விறலியர் என்பவர் வேடமிட்டு ஆடும் கலைஞர்கள் ஆவர். மருதத்திணைப் பாடல்களில் துணங்கைக் கூத்தினை நிகழ்த்தி உள்ளமையைக் காணமுடிகிறது.

❖ பாணன் மன்னனின் நட்பு மட்டும் அல்லாது அவனுக்குப் போரின் போது துணை நின்றுள்ளமையை அட்டி என்னும் மன்னனின் வாழ்வின் மூலம் தெளிவாகிறது.

❖ தலைவன் பரத்தையருடன் கொண்ட உறவு சமூகத்தால் மறுக்கப்படவில்லை. அது சமூக வழக்கமாக இருந்துள்ளமை அறியமுடிகிறது. மருதப் பாடல்களில் யாவும் பரத்தையர் பிரிவு நிலை பெரும்பாலும் சுட்டிக் காட்டப்பட்டுள்ளமை தெரிகின்றது. இந்நிலம் செல்வ வளமிக்க நிலமாக இருப்பதால் இந்நிலத்தில் பொழுதுபோக்கு நிறைந்து காணப்படும் இடமாக உள்ளது.

❖ பத்தினி என்கிற படைப்பின் பின் விளைவுதான் பரத்தமை. பரத்தமை என்ற நிறுவனம் திருமணத்துக்கு அப்பால் செல்வந்தர்களின் காமக்களிப்பிற்கென உருவாக்கப்பட்டுள்ளமையைக் காணமுடிகிறது.

❖ பரத்தையரைத் தலைவி இகழ்ந்துரைத்தாலும், தலைவியின் மகனையும் தன்னுடைய மகனாகவே கருதிய தன்மையை விளங்கிக்கொள்ள முடிகிறது.

❖ தலைவன் சேரிப்பரத்தையருடன் தங்கி இல்லறமே நடத்தியுள்ளமை தெரிகிறது. தலைவன் காமக்கிழத்தியுடைய உறவுடையவனாக இருந்துள்ளமையும் புலனாகிறது.

❖ தலைவி காமக்கிழத்தியுடன் பூசல்கொண்டும், அரவணைத்துக் கொண்டும் இருந்துள்ளமை தெரிகின்றது.

❖ மருத அகப்பாடலில் தோழி தலைவி உறவும், தோழி செவிலி உறவும் காணப்படுகின்றன.

* சமுதாயத்தின் அடிப்படை அலகு குடும்பம் என்ற நிறுவனமாகும். குடும்பத்தின் அடித்தளமான திருமணம் பற்றிய தெளிவான குறிப்புகள் மருதப் பாடல்களில் காணப்படுகின்றன. மணம் எவ்வாறு நிகழ்ந்தது, திருமணம் முதிய மகளிரின் முன்னிலையில் நடைபெற்றன. அதோடு மட்டுமல்லாமல், இரவிலும் திருமணம் நடைபெற்றதற்கான சான்றுகள் காணப்படுகின்றன.

* சங்ககால அங்கீகாரம் பெற்ற கணவன், மனைவி அன்புடன் வாழ்ந்து வந்துள்ளனர். போர் நிகழும் காலங்களிலும் கணவனைக் காத்துள்ளமையைக் காணமுடிகின்றது.

* குடும்ப உறவு நிலையைக் காணும்போது, தாயினுடைய தந்தையின் பெயரை மகனுக்கு வைத்துள்ளமை தெரிகிறது. அதுமட்டுமில்லாமல் தந்தையின் தந்தை பெயரையும் மகனுக்கு வைத்துள்ளமையும் தெரிகிறது.

* பண்டைய மக்களின் வாணிக உறவு இன்றியமையாததாகும். சங்க மருதத் தரவுகளின் மூலம், வணிக உறவு சிறப்புடன் நடைபெற்றுள்ளமை அறியமுடிகின்றது.

* தமிழக வணிகமானது பண்டமாற்றுமுறை, தரை வழி வாணிகம், கடல் வாணிகம் நடைபெற்றமையை அறியமுடிகின்றது. உள்நாட்டு வணிகம் பண்டமாற்று முறையில் நடைபெற்ற குறிப்புகளைக் கொண்டு விளங்கிக் கொள்ளமுடிகின்றது.

* சங்க வணிக உறவானது மேலை நாடுகளான, கிரேக்கம் ரோம், எகிப்து, அரேபிய கிழக்கிற்குரிய நாடுகளோடும் தொடர்பு கொண்டிருந்தது.

* உலக இலக்கியங்களுள் முதன்மை பெற்றுள்ளது சங்க இலக்கியமாகும். அடுக்குகளாகிய தொல் பழங்கால அடுக்காக திராவிட இனம் இருந்துள்ளமை தெரிகின்றது.

* சங்க சமூக அடுக்குகளை மேற்கட்டுமானம், அடிக்கட்டுமானம் எனும்போது அதன் இருப்பு நிலையில் பாணர்களே முதல் குடிகளாக இருக்க வாய்ப்புள்ளமை தெரிகின்றது.

- பஃறுளி ஆறு உலகில் தோன்றிய முதல் மருத நிலமாக இருக்க வாய்ப்புள்ளமை புலனாகிறது.

- ஐவகை நிலங்களைக் காணும் போது மருத நிலம் காவிரி ஆற்றுடன் பிணைக்கப்பட்டுள்ள செய்தி உணர முடிகிறது.

- உரிப்பொருள் என்ற நிலையில் முல்லையும், நெய்தலும் கலந்து ஒரே திணையாக இருந்திருக்கவேண்டும். அவ்வாறெனில் பிரிவின் வழியானது முல்லையில் காத்திருப்பதாகவும், நெய்தலில் இரகங்கலாகவும் உள்ள உறவுடையனவாக இருந்து அவற்றின் வழி இன்னது என வகைப்படுத்தாமல் இருப்பதைக் காணமுடிகின்றது.

- நில அடிப்படையில் கருப்பொருள்கள் யாவும் காரணகாரிய தொடர்புடையனவாகி தெய்வம், உணவு, மா, மரம், புள், பறை, செய்தி, யாழ், தொழில் ஆகியவை ஒவ்வொன்று சமூக சித்தரிப்புக்குக் களமாக அமைந்து இருப்பதைக் காணமுடிகின்றது.

- இக்கருப்பொருளின் சித்தரிப்புகள் ஒவ்வொரு நிலத்திலும் அடுக்காகவும், தொடர்ச்சியுடனும் காணமுடிகின்றன. அவை முல்லை அடுக்கு, நெய்தற் அடுக்கு, மருத அடுக்கு, பாலையடுக்கு என வகையுடன் தொடர்ச்சியாக இருப்பது தெளிவாகின்றது.

- சடங்குகள் என்பன தொடர்ந்து நடைபெற்று, மக்களால் கடைப் பிடிக்கப்பட்டு வரும் வழக்கமாகும். வதுவை சடங்கு, சிலம்பு கழி சடங்கு, வெறியாட்டுச் சடங்கு ஆகியவை சமூக உறவில் அடுக்கியுள்ளமை புலனாகிறது.

- மருத நிலத்தில் சாகுபடி செய்யும் உழவுத்தொழிலைக் கொண்டு மற்ற தொழில்கள் தொடர்ச்சியுடன் உறவாக இருந்துள்ளன. வண்ணத்தி, சாணைக்கல் தொழில், பரத்தையர் அடுக்குகள் எனப் பாகுபாட்டுடன் இருந்தாலும் தொடர்ச்சி நிலையில் உறவுடையவர்களாக இருந்துள்ளமை அறியமுடிகிறது.

- சங்க சமூக உறவில் மாற்றுத் திறனாளிகளும், அலியும் பேடியும் உறவுடன் தொடர்புடையவர்களாக இருந்துள்ளமை காணமுடிகின்றது.
- எக்காலத்திற்கும் ஏற்றாற்போல் கூட்டிப்பொருள் கொள்ளப் படுவதற்குத் துணையாய் நிற்பது எச்சமாகும். அவற்றை இன்றும் இயற்கை வழிபாடுகள் மூலம் அறியமுடிகின்றன.
- தாய் வழிச் சமூகத்தின் எச்சம் இன்றும் சமூக மக்களால் கடைபிடிக்கப்பட்டு வருகின்றது. அவை பேறுகாலத் தனிமை, சேய்வழி அழைத்தல் என்பதைச் சங்க மருதத் திணைத் தரவுகள் புலப்படுத்துகின்றன.
- திருமணமானவள் என்பதைப் பிறர் அறிய உதவும் அடையாளமானது மணமகள் கழுத்தில் மணமகனால் தாலி அணிவிக்கப்படுகின்றது. இவ்வெச்சக்கூறு சங்க மருதப் பாடல்களில் 'இழையணி' என்னும் சொல்லில் வந்துள்ளதால் காணமுடிகின்றது. 'தாலி' என்பது சங்க காலத்திலேயே இருந்துள்ளமை தெளிவாக்கப்பட்டுள்ளது.
- நடுகல் நடும் விழா இறப்புச் சடங்காக இருந்தது. அது இன்று 'கல்லெழுதுதல்' என்ற வழக்கமாகச் சமூக நிலையில் இருப்பதை அறியமுடிகின்றது.
- சகுனம் பார்ப்பதும், விரிச்சி நற்சொல் கேட்கும் மரபும் தொன்று தொட்டு வழங்கி வருவதைக் காணமுடிகிறது.
- இறந்தவர்களைப் பெட்டியில் வைத்துப் புதைக்கும் வழக்கம் மருத நிலப் பகுதிகளிலும் காவிரி படுகைகளிலும் இருந்துள்ளது.
- இனக் குழுச் சமுதாயத்தில் ஆண்கள் போர் மற்றும் நாடுகாத்தல் தொழிலில் ஈடுபட்டிருந்த போது பெண்களே வேளாண்மையைச் செய்துள்ளனர்.

- சாகுபடி மருத நிலத்தில் சிறப்பாக நடைபெற்று வந்துள்ளது. ஓர் மாடு உழவு, எருமை உழவு, நாற்று நடவு செய்யும் ஆட்கள், நெல் தூற்றல், நெல் குவித்தல், கோரையும் செறி நெல்லும், நெல் அறுவடை வலைத் தொழிலும், உழவுத் தொழிலும், உறவுடன் காணப்பட்டுள்ளன. அவை எச்சக்கூறாக இருக்கின்றன.

- சாணைக்கல் தொழில், தூண்டில் போடுதல், கரும்பு இயந்திரம், தச்சுத் தொழில், புனல் விளையாட்டு ஆகிய எச்சக் கூறுகள் வெளிக்காட்டப்பட்டுள்ளன.

- சங்க ஊர்கள் எஞ்சிய ஊர்களாக, இரும்பையூர், மூதூர், குன்னூர், கள்ளூர், வாணன் சிறுகுடி, தள்ளூர் கழாஅர் ஊர் ஆகியவற்றின் எச்ச ஊர்களாக இருப்பதை அறியமுடிகின்றது.

- சங்க மருதத்திணைப் பாடல்களின் தரவுகளைக் கொண்டு சமூக உறவு நிலைகள் ஆராயப்பட்டுள்ளது.

- இவ்வாய்வு, மேலும் ஆய்விற்கு வழிகோலும் மருதத்திணை மாந்தர்களைத் தனித்தனியாகவும் மேலாய்வு செய்யலாம். பிறதிணை மாந்தர்களோடு ஒப்பிட்டும் மேலாய்வு செய்யலாம். பழங்கால மருத நில மக்களின் வாழ்க்கையையும் இருப்பத்தொன்றாம் நூற்றாண்டு மருத நில மக்களின் வாழ்க்கையையும் ஒப்பிட்டு ஆய்வு மேற்கொள்ளலாம். கூற்றுகளின் அடிப்படையிலும் மேலாய்வு செய்ய இந்த ஆய்வேடு வழிகாட்டுகின்றது.

# துணைநூற்பட்டியல்

## முதன்மை நூல்கள்


***அனந்தராமையர், இ.வை. (ப.ஆ.)*** - ***கலித்தொகை மூலமும் நச்சினார்க்கினியர் உரையும்,*** *தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர்- 1984.*

***சாமிநாதையர், உ.வே (ப.ஆ., உ.ஆ.)*** - ***குறுந்தொகை மூலமும் உரையும்,*** *டாக்டர் உ.வே.சாமிநாதையர் நூல் நிலையம், சென்னை-1962.*

,, - ***ஐங்குறுநூறு மூலமும் பழையவுரையும்,*** *டாக்டர் உ.வே.சாமிநாதையர் நூல் நிலையம், சென்னை-1962.*

,, - ***பதிற்றுப்பத்து,*** *டாக்டர் உ.வே.சாமிநாதையர் நூல் நிலையம், சென்னை-1962.*

***நாராயணசாமி அய்யர் (உ.ஆ.)*** - ***நற்றிணை மூலமும் உரையும்,*** *திருநெல்வேலி, தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை, 1956.*

***வேங்கடசாமி நாட்டார், ந.மு., வேங்கடாசலம் பிள்ளை, கரந்தைக் கவியரசு, இரா.*** - ***அகநானூறு மூலமும் உரையும்,*** *பாகனேரி தனவைசியர் சங்க வெளியீடு, 1957-1959.*

**துணைமை நூல்கள்**

***அப்பாதுரை. கா.,*** - ***1800 ஆண்டுகளுக்கு முற்பட்ட தமிழகம்,***
*ராமையா பதிப்பகம்,*
*சென்னை,*
*2006.*

***அம்மன் கிளி முருகதாஸ்,*** - ***சங்கக் கவிதையாக்க மரபும் மாற்றமும்,***
*குமரன் பதிப்பகம்,*
*சென்னை,*
*2007.*

***அரவிந்தன்.மு.வை.*** - ***உரையாசிரியர்கள்,***
*மணிவாசகர் பதிப்பகம்,*
*சென்னை,*
*இ.ப.2008.*

***இராசமாணிக்கனார். மா.,*** - ***தமிழ் மொழி-இலக்கிய வரலாறு (சங்காலம்),***
*பாரிநிலையம்,*
*சென்னை,*
*மு.ப.1963.*

***இராசமாணிக்கனார். மா.,*** - ***கல்வெட்டுகளும் தமிழ் சமூக வரலாறும்,***
*நியூ செஞ்சுரி புக்ஹவுஸ்,*
*சென்னை,*
*2008.*

***இளம்பூரணர் (உ.ஆ).,*** - ***தொல்காப்பியம் (எழுத்து),***
*கழக வெளியீடு,*
*1964.*

***காந்தி. மு.,*** - ***தமிழர் பழக்கவழக்கங்களும் நம்பிக்கைகளும்,***
*உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்,*
*சென்னை,*
*2008.*

***காமாட்சி. மு. (தொ.ஆ.)*** - ***சங்ககாலம் தொல் பொருள் ஆய்வுகள்,***
*நியூ செஞ்சுரி புக்ஹவுஸ்,*
*சென்னை,*
*2011.*

**கிருஷ்ணமூர்த்தி. ஜே.,** - ***சமூகவியல் கோட்பாடுகள்,***
*அபிராமி பின்னியல் அச்சகம்,*
*சிதம்பரம்,*
*2000.*

**கிருபாகரன் சாமுவேல்.,** - ***சமூக ஆராய்ச்சி முறைகள்,***
*அண்ணாமலை பல்கலைக் கழகம்,*
*சிதம்பரம்,*
*2002.*

**குணசேகரன். அ.,** - ***தமிழ் ஆய்வு முறைமையியல்,***
*அரசினர் கலைக்கல்லூரி (தன்னாட்சி),*
*கும்பகோணம்,*
*2011.*

**குளோறியா சுந்தரமதி. இலா.,** - ***சங்க இலக்கியம் மருதம்,***
*தமிழ்த்துறை,*
*கேரளப் பல்கலைக்கழகம்,*
*கரியவட்டம்,*
*திருவனந்தபுரம்,*
*1973.*

**கைலாசபதி. க.,** - ***சமூகவியலும் இலக்கியமும்,***
*குமரன் பப்ளிஷர்ஸ்,*
*சென்னை -26,*
*ம.ப.2009.*

,, - ***இலக்கியமும் திறனாய்வும்,***
*குமரன் பப்ளிஷர்ஸ்,*
*சென்னை -26,*
*மூ.ப.2007.*

,, - ***தமிழ் வீரநிலைக் கவிதை,***
*குமரன் பதிப்பகம்,*
*சென்னை,*
*2002.*

**சண்முகம்பிள்ளை. மு., (ப.ஆ.)** - **தொல்காப்பியம், (பொருள்),**
*முல்லை நிலையம்,*
*சென்னை,*
*2003.*

***சண்முகம் பிள்ளை. மு.,*** - ***சங்கத்தமிழர் வாழ்வியல்,***
*உலகத்தமிழராய்ச்சி நிறுவனம்,*
*2004.*

***சுப்பிரமணியன். ந.,*** - ***சங்ககால வாழ்வியல்,***
*நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்,*
*சென்னை,*
*2010.*

***தட்சிணாமூர்த்தி. அ.,*** - ***தமிழர் நாகரிகமும் பண்பாடும்***
*யாழ் வெளியீடு,*
*சென்னை,*
*ம.ப.1999.*

***தமிழண்ணல்.,*** - ***சங்க மரபு,***
*மீனாட்சி புத்தக நிலையம்,*
*மதுரை,*
*2009.*

**,,** - ***சங்க இலக்கிய ஒப்பீடு,***
*மீனாட்சி புத்தக நிலையம்,*
*மதுரை,*
*2005.*

**,,** - ***ஒப்பிலக்கிய அறிமுகம்,***
*மீனாட்சி புத்தக நிலையம்,*
*மதுரை,*
*2009.*

***நடராஜன். தி.சு,*** - ***திறனாய்வுக்கலை,***
*நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்,*
*சென்னை,*
*2008.*

***பக்தவச்சலபாரதி.,*** - ***தமிழக பழங்குடிகள்,***
*அடையாளம் பதிப்பகம்,*
*திருச்சி,*
*2008.*

**,,** - ***மானிடவியல் கோட்பாடுகள்,***
***வல்லினம் பதிப்பகம்,***
*புதுவை,*
*2005.*

பாலசுப்ரமணியம். கு.வெ., - ***சங்க இலக்கியக் கொள்கைகள்,***
*மீனாட்சி புத்தக நிலையம்,*
*மதுரை,*
*மு.ப.2008.*

,, - ***சங்க இலக்கிய ஆய்வுகளில் மதிப்பீடு,***
*தமிழ்ப் பல்கலைக் கழகம்,*
*தஞ்சை, 2008.*

**பெருமாள்சாமி. வே.,** - ***சங்க காலத் தமிழகத்தின் சமூக நிலை,***
*(மார்க்சிய நோக்கில் சங்க இலக்கிய ஆய்வு),*
*பாரதி புத்தகாலயம்,*
*2007.*

**பேராசிரியர் (உ.ஆ.)** - **தொல்காப்பியம் (பொருளதிகாரம்),**
*தமிழ்மண் பதிப்பு,*
*சென்னை,*
*2003.*

***மதியழகன். மு.,*** - ***தமிழாய்வு திறனாய்வு வரலாறு,***
*மித்ரா-ஆர்ட்ஸ் கிரியேஸன்ஸ்,*
*சென்னை,*
*2007.*

***மாதையன். பெ.,*** - ***தமிழ்ச்செவ்வியல் படைப்புகள்,***
*(கவிதையியல், சமூகவியல் நோக்கு),*
*நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்,*
*சென்னை,*
*2009.*

***மாணிக்கம். வசுப.,*** - ***தமிழ்க் காதல்,***
*சாரதா பதிப்பகம்,*
*சென்னை,*
*2007.*

***ராஜன். க*** - ***தொல்லியல் நோக்கில் சங்ககாலம் உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்,***
*சென்னை.*

***ராஜ்கௌதமன்.,*** - ***அறம் - அதிகாரம்,***
*விடியல் பதிப்பகம்,*
*கோவை,*
*1997.*

***வரதராசனார். மு.,*** - ***மொழி வரலாறு,***
*பாரிநிலையம்,*
*சென்னை,*
*2009.*

***வேங்கடசாமி. மயிலை சீனி. ,*** - ***பழங்காலத் தமிழர் வாணிகம்,***
*நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்,*
*சென்னை,*
*2011.*

***ஆங்கில நூல்கள்***

**Ramasamy. A.,** - **A History of Ancient Tamil Civilization,**
**New Century Book House Pvt.Ltd.,**
**Chennai -2012.**

**Manickam. V.T.,** - **Marutham,**
**Tema Publishing House,**
**Karaikudi, 1982.**